بسم الله الرحمن الرحيم

# ஸுனன் அபூதாவூது

தமிழாக்கம்: ஷம்சுள்ளுஹா ரஹ்மானி

## ஹதீஸ்களின் தொகுப்பு



மின் நூல் ஆக்கம்

குலசை சுல்தான்

இது ஒரு இலவச வெளியீடு

# பொருளடக்கம்

بسم الله الرحمن الرحيم

**பாடம்: 1 மலம் ஜலம் கழிக்க மறைவாக இடத்திற்கு செல்வது**

ஹதீஸ் எண்: 1

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மலம், ஜலம் கழிக்க செல்லும் போது தூரமாக சென்று விடுவார்கள் என்று முகீரா பின் ஷுஃபா (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் தாரிமீ, நஸயீ, இப்னுமாஜா, திர்மிதி ஆகியோரும் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளனர். இமாம் திர்மிதி (ரஹ்) சரியான அழகான ஹதீஸ் என்று கூறுகின்றார்கள்.)

ஹதீஸ் எண்: 2

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மலம், ஜலம் கழிக்க (செல்ல) விரும்பினால் தன்னை யாரும் பார்க்காதவாறு தொலைவிற்கு சென்றிடுவார்கள் என்று ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இதன் மூன்றாவது அறிவிப்பாளராக இடம் பெறும் கூபா நாட்டைச் சார்ந்த இஸ்மாயில் பின் அப்துல்மலிக் என்பவர் மக்காவில் வசிப்பவர் ஆவார். இவரை பலர் குறை கண்டுள்ளனர். இந்த ஹதீஸை இப்னுமாஜா அவர்களும் பதிவு செய்து உள்ளார்கள்.)

பாடம்: 2 சிறுநீர் கழிக்க ஏற்றவாறு இடத்தை அமைத்தல்.

ஹதீஸ் எண்: 3

அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரளி) அவர்கள் பஸரா நகருக்கு வந்த போது அவர்களிடம், அபூமூஸா அவர்(கள் அறிவிக்கின்ற ஹதீஸ்)களைப் பற்றி தெரிவிக்கப்பட்டது. உடனே அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரளி) அவர்கள், அபூமூஸா (ரளி) அவர்களிடம் சில விசயங்களைக் கேட்டு கடிதம் எழுதினார். அவர்களுக்கு அபூமூஸா (ரளி) அவர்கள் (பின்வருமாறு பதில்) எழுதினார்கள்:

நான் ஒரு நாள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடனிருந்தேன். அப்போது அவர்கள் சிறுநீர் கழிக்க எண்ணி, ஒரு சுவருக்கு அடியில் உள்ள மிருதுவான தரைக்கு சென்று சிறுநீர் கழித்தார்கள். பின்பு உங்களில் ஒருவர் சிறுநீர் கழிக்க விரும்பினால், சிறுநீர் கழிப்பதற்காக தக்க இடத்தை தேடி (தெளிவு செய்து) கொள்வாராக! என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று தமக்கு ஒரு பெரியவர் அறிவித்ததாக அபத்தய்யாஹ் என்பார் அறிவிக்கின்றார்.

(குறிப்பு: இதில் அறியப்படாத ஒருவர் இடம் பெற்றுள்ளார்.)

பாடம்: 3 கழிவறையில் நுழையும் போது சொல்ல வேண்டியவை

ஹதீஸ் எண்: 4

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கழிப்பிடத்திற்கு செல்லும் போது அல்லாஹும்ம இன்னீ அவூது பிகமினல் குபுஸி வல் கபாயிஸி என்று சொல்பவர்களாக இருந்தனர்.

மற்றொரு அறிவிப்பில் 'அவூதுபில்லாஹி மினல்குபுஸிவல் கபாயிஸி' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறுவதாக இடம் பெற்றுள்ளது.

இந்த அறிவிப்பில் மூன்றாவது அறிவிப்பாளராக (ஹம்மாதுக்கு பதிலாக) அப்துல் வாரிஸ் என்பார் இடம் பெறுகின்றார்.

(குறிப்பு: இந்த ஹதீஸ் புகாரி, முஸ்லிம், அஹ்மத், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது)

ஹதீஸ் எண்: 5

மேற்கண்ட இரண்டு விதமான சொற்களும் வேறு அறிவிப்பாளர்கள் வழியாக இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் எண்: 6

(மனிதர்கள் மலம், ஜலம், கழிக்க ஒதுங்குகின்ற) இந்த பேரீத்தமரங்கள் அடர்ந்த காடுகள் (ஜின், ஷைத்தான்கள் அடிக்கடி) வந்து போகும் பகுதிகளாகும். எனவே உங்களில் ஒருவர் (அப்படிப்பட்ட) கழிப்பிடத்திற்கு வரும்போது, அவர், 'அவூது பில்லாஹி மினல் குபுஸி வல்கபாயிஸி' என்று கூறுவாராக! என அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இந்த ஹதீஸை இப்னுமாஜா அவர்களும், நஸயீ அவர்கள் தனது ஸுனன் அல்குப்ராவிலும் பதிவு செய்துள்ளார்கள்.

(குறிப்பு: 'அல்லாஹ்விடம் நான் ஆண், பெண் ஷைத்தான்களின் (தீங்குகளை) விட்டும் காவல் தேடுகிறேன்' என்பதே 4,5,6 ஹதீஸ்களின் அரபி வாசகங்களின் கருத்தாகும்.)

பாடம்: 4 மலம் ஜலம் கழிக்கும் போது கிப்லாவை முன்னோக்குதல் கூடாது.

ஹதீஸ் எண்: 7

உங்களுக்கு மலம், ஜலம் கழிக்கும் ஒழுக்கமுறை உட்பட (ஒழுக்க பண்புகள்) அனைத்தையும் உங்களுடைய நபி அவர்கள் கற்றுத் தந்தார்களா? என்று (ஸல்மான்) அவர்களிடம் வினவப்பட்ட போது, அவர் (பின்வருமாறு) பதில் அளித்தார்: ஆம்! நாங்கள் மலம் அல்லது சிறுநீர் கழிக்கும் போது, கிப்லாவை முன்னோக்குவதையும், வலது கையால் துப்புரவு செய்வதையும், எங்களில் யாரும் மூன்று கற்களுக்கு குறைவாக (எடுத்துச் சென்று துடைத்து) சுத்தம் செய்வதையும், விட்டை அல்லது எலும்புத் துண்டைக் கொண்டு சுத்தம் செய்வதையும் எங்களுக்கு நபி (ஸல்) அவர்கள் தடை செய்து விட்டனர்.

(குறிப்பு: இந்த ஹதீஸ் முஸ்லிம், நஸயீ, திர்மிதி ஆகிய நூல்களிலும் இடம் பெற்றுள்ளது)

ஹதீஸ் எண்: 8

உங்களிடத்தில் (மார்க்க நெறிகளை) உங்களுக்கு கற்றுத் தருகின்ற தந்தையின் தரத்தில் உள்ளவன் தான் நான்! எனவே உங்களில் ஒருவர் மலம் (ஜலம்) கழிக்க சென்றால் அவர் கிப்லாவை முன்னோக்கவோ அல்லது பின்னோக்கவோ, மேலும் (அப்போது) தன் வலது கரத்தினால் துப்புரவு செய்யவோ வேண்டாம்' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள்

கூறினார்கள். மேலும் அவர்கள் எங்களுக்கு (துடைத்து சுத்தம் செய்யும் போது) மூன்று கற்களை (பயன்படுத்துவதை) ஏவி, விட்டை எலும்பு (ஆகியவற்றை பயன்படுத்துவதை) தடை செய்தனர். எனவே நாங்கள் கிப்லாவை விட்டும் வேறு திசையில் திரும்பி (அந்த கட்டிடத்தில் நுழைய நேர்ந்ததற்காக) அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு தேடிக் கொள்வோம் என்று அபூஹுரைரா (ரளி) அறிவிக்கின்றனர்.

(குறிப்பு: இந்த ஹதீஸ் திர்மிதியிலும் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 9

நீங்கள் மலம் (அல்லது சிறுநீர்) கழிக்கச் சென்றால் மலம், ஜலம் கழிக்கும் போது நீங்கள் கிப்லாவை முன்னோக்க வேண்டாம். எனினும் நீங்கள் கிழக்கோ மேற்கோ நோக்கிக் கொள்ளுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். நாங்கள் சிரியாவிற்கு வந்த போது அங்குள்ள கழிப்பு அறைகள் கிப்லாவை நோக்கி கட்டப்பட்டிருப்பதைக் கண்டோம். கிப்லாவை விட்டும் (வேறு திசையில்) திரும்பிக் கொண்டோம். அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் தேடிக் கொண்டோம். இதை அபூஅய்யூப் அல்அன்ஸாரி (ரளி) அறிவிக்கின்றார்.

(குறிப்பு: இது மக்காவாசிகளை கருத்தில் கொண்டு சொல்லப்பட்டதாகும். இந்த ஹதீஸை புகாரி, முஸ்லிம், அஹ்மத் ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது)

ஹதீஸ் எண்: 10

சிறுநீர் அல்லது மலம் கழிக்கும் போது நாங்கள் பைத்துல் மக்தஸ், கஃபா என்ற இரு கிப்லாக்களை முன்னோக்குவதை அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்து விட்டனர்.

ஹதீஸ் எண்: 11

இப்னு உமர் (ரளி) அவர்கள் தனது ஒட்டகத்தை கிப்லாவை நோக்கிப் படுக்க வைத்து, பிறகு அதை நோக்கி சிறுநீர் கழிக்க அமரக் கண்ட நான் அவர்களிடம் அபூஅப்துர்ரஹ்மானே! இது தடை செய்யப்பட்டதல்லவா? என்று வினவினேன். அதற்கு அவர்கள் 'இது வெட்ட வெளிப்பகுதியில் தான் தடை செய்யப்பட்டுள்ளது. உன்னை மறைக்கும் பொருள் உனக்கும் கிப்லாவுக்கும் இடையில் இருந்தால் (அது) தவறல்ல' என்று பதில் அளித்தார்கள்.

பாடம்: 5 கிப்லாவை முன்னோக்க அனுமதி.

ஹதீஸ் எண்: 12

நான் வீட்டின் முகட்டில் ஏறி நின்றேன். அப்போது தான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் பைத்துல் மக்தஸை முன்னோக்கியவர்களாக தனது தேவையை நிறைவு செய்வதற்காக இரு செங்கற்கள் மீது அமர்ந்திருக்கக் கண்டேன்' என்று இப்னு உமர் (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இந்த ஹதீஸ் புகாரி, முஸ்லிம், அஹ்மது, நஸயீ, திர்மிதி, இப்னுமாஜா ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது)

ஹதீஸ் எண்: 13

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கிப்லாவை முன்னோக்கி சிறுநீர் கழிப்பதற்கு தடை விதித்திருந்தனர். ஆனால் அவர்கள் உயிர்

கைப்பற்றப்படுவதற்கு ஓராண்டுக்கு முன்பு கிப்லாவை முன்னோக்(கி சிறுநீர் கழிக்)கக் கண்டிருக்கின்றார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸ் அஹ்மத், திர்மிதி, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இடம் பெற்றுள்ளது)

பாடம்: 6 மலம், ஜலம் கழிக்கும் போது ஆடையை நீக்கலாமா?

ஹதீஸ் எண்: 14

'அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தன் தேவையை நிறைவேற்ற விரும்பினால் தரையை (அண்மித்து) அமர்கின்ற வரை தனது ஆடையை உயர்த்த மாட்டார்கள்' என்று இப்னு உமர் (ரளி) அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகிறார்கள், மற்றொரு அறிவிப்பாளர் தொடரில் அப்துஸ்ஸலாம் பின் ஹர்ப் அவர்கள் அனஸ் பின் மாலிக் மூலம் அஃமஷ் வழியாக அறிவிக்கின்றார். (இது பலவீனமானதாகும்)
(குறிப்பு: இமாம் ஸுயூத்தி அவர்கள் தெரிவிக்கின்றார்கள், இது (அப்துஸ்ஸலாம்) பலவீனமானது என்று இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிட்டிருப்பது அப்துஸ்ஸலாம் அவர்களை பலவீனமானவர் என்பதை தெரிவிப்பதற்காக அல்ல. எனெனில் இவர் சஹீஹைன் (புகாரி, முஸ்லிம் ஆகியவைகளின்) அறிவிப்பாளர்களின் வரிசையில் இடம்பெறும் நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளர் ஆவார். எனினும் அனஸ் (ரளி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பாளரை பலவீனமானவர் என்று தெரிவிப்பதே இமாம் அவர்களின் நோக்கமாகும். ஏனெனில் அஃமஷ் அவர்கள் அனஸ் (ரளி) அவர்களிடமிருந்து எதையும் செவியுறவில்லை. இதனால் இவர் (இதை) முர்ஸலாக அறிவிக்கிறார். இப்னு உமர் வழியாக அறிவிக்கும் அந்த 'ஒருவர்' யாரென தெரியாததால் இதுவும் பலவீனமான ஹதீஸாகும்.)

பாடம்: 7 கழிப்பிடத்தில் உரையாடலாகாது.

ஹதீஸ் எண்: 15

(மலஜலம் கழிக்கும் போது) தங்கள் மர்மஸ்தானங்களை வெளிப்படுத்தி, உரையாடிக் கொண்டு மலம் (ஜலம்) கழிக்க இருவர் (இணைந்து) செல்லக்கூடாது, காரணம் இதனை அல்லாஹ் வெறுக்கிறான் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூற செவியுற்றேன் என்று அபூஸயீத் (ரளி) அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்: இதை இக்ரிமாவை தவிர வேறுயாரும் அறிவிக்கவில்லை.
(குறிப்பு: இந்த இக்ரிமா பின் அம்மார் என்பவர் யஹ்யா பின் அபூகஸீர் வழியாக அறிவிக்கும் அறிவிப்பை புகாரி, அஹ்மது, நஸயீ ஆகியோர் குறை கூறியுள்ளார்கள். இந்த ஹதீஹில் யஹ்யா பின் அபீகஸீம் வாயிலாகவே இக்ரிமா அறிவிப்பதால் இது பலவீனமானதாகும்.)

பாடம்: 8 சிறுநீர் கழிக்கும் போது சலாமுக்கு பதில் உரைத்தல்.

ஹதீஸ் எண்: 16

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்துக் கொண்டிருக்கும் போது அவர்களைக் கடந்து சென்ற ஒருவர் அவர்களுக்கு சலாம் கூறினார். அவருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதில் (சலாம்) கூறவில்லை என்று இப்னுஉமர் (ரளி) அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்: அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தயம்மும் செய்து பிறகு அம்மனிதருக்கு பதில் சலாம் கூறினார்கள் என்று இப்னு உமர் (ரளி) அவர்கள் வழியாகவும் மற்றவர்களிடமிருந்தும் அறிவிக்கப்படுகிறது.
(குறிப்பு: முஸ்லிம், நஸயீ, திர்மிதி, அஹ்மத், இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 17

முஹாஜிர் பின் குன்புத் (ரளி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்துக் கொண்டிருக்கும் போது வந்து அவர்களுக்கு சலாம் உரைத்தார். அவருக்கு அவர்கள் உலூச் செய்கின்ற வரை பதில் கூறவில்லை. பின்பு அவரிடம் அவர்கள் சுத்தமில்லாமல் அல்லாஹ்வை கூறுவதை வெறுக்கின்றேன் என்று காரணம் சொன்னார்கள் என்று முஹாஜிர் பின் குன்ஃபுத் (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இது நஸயிலும் இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 9 தூய்மையின்றி அல்லாஹ்வை கூறுதல்.**

ஹதீஸ் எண்: 18

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தனது எல்லா நேரங்களிலும் அல்லாஹ்வை கூறுபவர்களாக இருந்தனர் என்று ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இதை முஸ்லிம், திர்மிதி, இப்னுமாஜா, அஹ்மத் ஆகியோரும் தமது நூல்களிலும் பதிவாக்கியுள்ளனர்.)

பாடம்: 10 இறைப்பெயர் பொறிக்கப்பட்ட மோதிரத்தோடு கழிப்பறைக்கு செல்லுதல்.

ஹதீஸ் எண்: 19

'அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கழிப்பறைக்கு செல்லும் போது தனது மோதிரத்தை (கழற்றி) வைத்துவிடுவார்கள்' என்று அனஸ் (ரளி) அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்: இது முன்கரான (நிராகரிக்கப்பட்ட) ஹதீஸ் ஆகும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வெள்ளி மோதிரம் ஒன்றை அணிந்திருந்தார்கள். பின்பு அதை (கழற்றி) எறிந்து விட்டார்கள் என்ற ஹதீஸ் தான் அனஸ் (ரளி) ஜுஹ்ரீ, சியாத் பின் சஃது வழியாக இப்னு ஜுரைஜ் அவர்களிடமிருந்து அறியப்படுகிறது. இதில் சந்தேகத்திற்குரியவர் ஹம்மாம் ஆவார். இந்த ஹதீஸை ஹம்மாமைத் தவிர வேறுயாரும் அறிவிக்கவில்லை.

(குறிப்பு: திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 11 சிறுநீரை துப்புரவு செய்தல்.**

ஹதீஸ் எண்: 20

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் இரு கப்ருகளுக்கருகில் நடந்து செல்லும் போது (பின்வருமாறு) கூறினார்கள்: (இந்தக் கப்ரில் உள்ள) இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். ஆனால் இவர்கள் பெரும் பாவத்திற்காக வேதனை செய்யப்பட வில்லை. (இரு கப்ருகளையும் சுட்டிக்காட்டி, இந்த கப்ரில் உள்ள) இவர், சிறுநீரிலிருந்து தன்னை துப்புரவாக்கிக் கொள்ளவில்லை. (இந்தக் கப்ரில் உள்ள) இவரோ கோள் சொல்லிக் கொண்டலைந்தார் என்ற சொல்லிவிட்டு அவர்கள் ஒரு பசுமையான பேரீத்த மட்டையைக் கொண்டுவரச் செய்து, அதை இரண்டாகப்பிளந்து இதிலொன்றும் அதிலொன்றும நட்டினார்கள். பிறகு இவ்விரண்டும் காயாதவரை இவ்விருவருக்கும் வேதனை எளிதாக்கப்படலாம் என்று கூறினார்கள் என இப்னுஅப்பாஸ் (ரளி) அறிவிக்கின்றார்கள்.

(குறிப்பு: இந்த ஹதீஸ் புகாரி, முஸ்லிம், அஹ்மத், நஸயீ, திர்மிதி, இப்னுமாஜா ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 21

மேலுள்ள ஹதீஸின் பொருளை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து இப்னு அப்பாஸ், முஜாஹித், மன்சூர், ஜரீர் வழியாக உஸ்மான் பின் அபீஷைபா அறிவிக்கின்ற போது (சிறுநீரிலிருந்த தன்னை துப்புரவாக்கிக் கொள்ள வில்லை என்பதற்கு பதிலாக) சிறுநீர் கழிக்கும் போது தான் (பிறர் பார்வையிலிருந்து) மறைந்து கொள்ளவில்லை என்று அறிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 22

நானும், அம்ர் பின் அல் ஆஸ் (ரளி) அவர்களும் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தோம். அப்போது அவர்கள் தோல் கேடயத்தோடு வெளிவந்து, பின்பு அதை மறைப்பாக்கிக் கொண்டு சிறுநீர் கழித்தார்கள். அவர்களைப் பாருங்களேன்! ஒரு பெண் சிறுநீர் கழிப்பது போன்று (மறைத்துக் கொண்டு) சிறுநீர் கழிக்கின்றார்கள்! என்று நாங்கள் பேசிக் கொண்டோம். இதை செவியுற்ற அவர்கள், பனூ இஸ்ராயீலைச் சார்ந்த ஒருவர் அடைந்த (அவல) நிலையை நீங்கள் அறிய வில்லையா? பனூஇஸ்ராயீலர் தங்கள் மீது சிறுநீர் பட்ட பகுதியை வெட்டிக் கொள்வார்கள்! அவர்களில் ஒருவர் (அவ்வாறு செய்ய வேண்டாம் என்று) அவர்களை தடுத்தார். எனவே அவர் அவரது கப்ரில் வேதனை செய்யப்படுகிறார்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

அபூமூஸா வாயிலாக அபூவாயில் மூலம் மன்சூர் அறிவிக்கும் போது, இந்த ஹதீஸில் (தங்கள் மீது சிறுநீர் பட்டு விட்ட பகுதியை வெட்டிக் கொள்வார்கள் என்ற வாசகத்திற்கு பதிலாக தங்கள் தோலை வெட்டி

விடுவார்கள் என்றும், அபூமூஸா வாயிலாக அபூவாயில் மூலம் ஆஸிம் அறிவிக்கும் போது 'தங்களின் உடம்பில்' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்றும் அறிவிக்கின்றார்கள்.
(குறிப்பு: ஹாபிள் இப்னு ஹஜர் அவர்கள் தனது பத்ஹுல் பாரியில் அவர்களில ஒருவரின் தோலில் என்றே முஸ்லிமில் உள்ள ஹதீஸில் இடம் பெறுகிறது. இந்த இடத்தில் தோல் என்பதன் கருத்து அவர்கள் அணியக் கூடிய தோல் (ஆடைகள்) ஆகும் என்று குர்துபி தெரிவிக்கின்றார். புகாரியில் இடம் பெறும் ஹதீஸில் ஆடைகள் என்று தெளிவாக இடம் பெறுகிறது.)

பாடம்: 12 நின்று சிறுநீர் கழிக்கலாமா?

ஹதீஸ் எண்: 23

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு கூட்டத்தாரின் குப்பை மேட்டிற்கு வந்து, நின்று கொண்டு சிறுநீர் கழித்தார்கள். பிறகு தண்ணீர் கொண்டு வரச் செய்து தனது இரு காலுறைகளிலும் தடவிக் கொண்டார்கள் என்று ஹுதைபா (ரளி) அறிவிக்கிறார்கள். (அவர்கள் சிறுநீர் கழிக்கும் போது) (சற்று விலகி) தூர சென்ற போது என்னை அவர்கள் அழைத்தார்கள். உடனே நான் அவர்களது குதிகால்களுக்கு பின்னால் வந்து விட்டேன் என்றும் ஹுதைபா அவாகள் தெரிவிக்கின்றார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் புகாரி, முஸ்லிம், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகியோரும் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளனர்.)

பாடம்: 13 பாத்திரத்தில் சிறுநீர் கழித்து அதை அருகில் வைத்துக் கொள்வது.

ஹதீஸ் எண்: 24

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் கட்டிலுக்கு அடியில் மரப்பாத்திரம் (வைக்கப்பட்டு) இருக்கும். அதில் இரவில் அவர்கள் சிறுநீர் கழிப்பார்கள் என்று உமைமா பின்து ருகையா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் நஸயீ, ஹாகிம், இப்னுஹிப்பான் ஆகியோரும் தமது நூல்களில் பதிவு செய்துள்ளார்கள்.)

பாடம்: **14 சிறுநீர் கழிக்க தடை செய்யப்பட்ட இடங்கள்.**

ஹதீஸ் எண்: 25

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'சாபத்திற்குரிய இரண்டை - தவிர்த்துக் கொள்ளுங்கள்' என்று கூறினார்கள். அப்போது தோழர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! சாபத்திற்குரிய அவ்விரண்டும் யாவை? என்து வினவியதும், 'மக்கள் (நடக்கும்) பாதையில் அல்லது அவர்கள் நிழல் பெறும் இடங்களில் ஒருவர் மலம், ஜலம் கழிப்பதாகும் என்று அவர்கள் பதிலளித்தார்கள்.
(குறிப்பு: இதை இமாம் முஸ்லிம், அஹ்மத் ஆகியோரும் தமது நூல்களில் பதிவு செய்துள்ளார்கள்.)

ஹதீஸ் எண்: 26

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். சாபத்திற்குரிய மூன்று காரியங்களை தவிர்த்துக் கொள்ளுங்கள். அவை: நீர்துறைகள், நடுப்பாதை, நிழல் தரும் இடங்கள் ஆகியவற்றில் மல, ஜலம் கழிப்பதாகும் என்று முஆத் பின் ஜபல் (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் இப்னுமாஜா அவர்களும் தனது நூலிலும் பதிவு செய்துள்ளார்கள். முஆத் பின் ஜபல் (ரளி) வழியாக அறிவிக்கும் அபூஸயீத் அல்ஹிம்யரீ என்பார் முஅத் அவர்களிடம் எதையும் செவியுற்றதில்லை என்று இப்னுல் கத்தான் கூறுவதாக ஹாபிள் இப்னு ஹஜர் குறிப்பிடுகிறார்கள். எனவே இது முர்ஸல் எனும் வகையைச் சேர்ந்ததாகும்.)

**பாடம்: 15 குளியலறையில் சிறுநீர் கழித்தல்.**

ஹதீஸ் எண்: 27

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். உங்களில் ஒருவர் தான் குளிக்கும் இடத்தில் சிறுநீர் கழிக்கவும் பிறகு அதில் குளிக்கவும் வேண்டாம். பிறகு அதில் உலூ செய்யவும் வேண்டாம். ஏனெனில் அதில் தான் பெருமளவு வஸ்வாஸ் (மனக்குழப்பம்) உள்ளது என்று அப்துல்லாஹ் பின் முகப்பல் (ரளி) அறிவிக்கின்றார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸை திர்மிதீ, நஸயீ, இப்னுமாஜா, அஹ்மத் ஆகியோரும் தமது நூல்களில் பதிவு செய்துள்ளனர்.)

ஹதீஸ் எண்: 28

அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் அபூஹுரைரா (ரளி) அவர்கள் தோழமை கொண்டது தோழமை கொண்ட நபித்தோழர் ஒருவரை நான் சந்தித்தேன். எங்களில் ஒருவர் தினந்தோறும் தலைவாரிக் கொள்வதையும் தான் குளிக்குமிடத்தில் சிறுநீர் கழிப்பதையும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்து விட்டனர் என்று அவர் அறிவித்தார் என ஹுமைத் அல் ஹிம்யரி என்பார் அறிவிக்கிறார்.
(குறிப்பு: இந்த ஹதீஸை நஸயீ அவர்களும் தனது நூலில் பதிவு செய்துள்ளார்கள்.)

பாடம்: 16 பொந்துக்குள் சிறுநீர் கழிக்க தடை.

ஹதீஸ் எண்: 29

பொந்துக்குள் சிறுநீர் கழிப்பதை நபி (ஸல்) அவர்கள் தடுத்தார்கள் என்று அப்துல்லாஹ் பின் சார்ஜில் அறிவிக்கிறார்கள்.
பொந்துக்குள் சிறுநீர் கழிக்க தடை செய்யப்பட்டதன் காரணம் என்ன என்று (அறிவிப்பாளர்) கதாதா அவர்களிடம் கேட்கப்பட்டது. பொந்துகள் ஜின்கள் வசிக்கும் இடம் என்று சொல்லப்பட்டதாக அவர் பதில் சொன்னார்.

**பாடம்: 17 கழிப்பிடத்திலிருந்து வெளியாகும் போது ஒருவர் என்ன சொல்ல வேண்டும்.**

ஹதீஸ் எண்: 30

நபி (ஸல் ) அவர்கள் கழிப்பிடத்திலிருந்து வெளிவரும் போது 'குப்ரானக்' (இறைவா! என்னை மன்னிப்பாயாக!) என்று கூறுவார்கள் என ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.

**பாடம்: 18 சுத்தம் செய்யும் போது வலக்கரத்தால் தொடுதல் ஆகாது.**

ஹதீஸ் எண்: 31

உங்களில் ஒருவர் சிறுநீர் கழிக்கும் போது, தனது வலது கையால் தனது மர்மஉறுப்பைத் தொட வேண்டாம். மேலும் அவர் கழிப்பிடத்திற்கு சென்றால், தனது வலது கையால் சுத்தம் செய்ய வேண்டாம், மேலும் அவர் நீர் அருந்தினால் ஒரே மூச்சில் நீர் அருந்த வேண்டாம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அபூகதாதா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இதை புகாரி, முஸ்லிம், திர்மிதி, நஸயீ, அஹ்மத், இப்னுமாஜா ஆகியோர் பதிவாக்கியுள்ளார்கள்)

ஹதீஸ் எண்: 32

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தனது வலது கையை உண்ணுவதற்கும், குடிப்பதற்கும், உடை உடுத்துவதற்கும் பயன் படுத்துவார்கள். இதல்லாத காரியங்களுக்கு தன்து இடது கையை பயன்படுத்துவார்கள் என்று ஹஃப்ஸா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸ் அஹ்மத், இப்னு ஹிப்பான், ஹாக்கிம் ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 33

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களது வலது கை அவர்களது தூய்மைக்காகவும் (உலூவுக்காகவும்) அவர்களது உணவுக்காகவும் ஆயிற்று. அவர்களது இடது கை (மல, ஜலம் கழித்தால்) சுத்தம் செய்வதற்காகவும் அசுத்தமானவற்றிற்காகவும் ஆயிற்று என்று ஆயிஷா (ரளி) அறிவிக்கின்றார்கள்.
(குறிப்பு: இரண்டாம் அறிவிப்பாளரான இப்ராகீம் அவர்கள் அன்னை ஆயிஷா (ரளி) அவர்களிடமிருந்து எதனையும் செவியுறவில்லை. எனவே இந்த ஹதீஸ் முன்கதிஃ என்ற வகையைச் சார்ந்தது ஆகும். இவர் இதே கருத்தை அன்னை ஆயிஷா (ரளி) அவர்களிடமிருந்து அஸ்வத் வழியாக அறிவிக்கின்றார். இதை அன்னை ஆயிஷா (ரளி) அவர்களிடமிருந்த மஸ்ரூக் வழியாக 'ஆடை' என்ற பாடத்தில் அறிவிக்கின்றார்.)

இந்த அமைப்புத் தொடரின் படியே இதை இமாம் புகாரி, முஸ்லிம், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகியோர் தமது நூல்களில் பதிவு செய்துள்ளனர்.

ஹதீஸ் எண்: 34

இதே கருத்தை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஆயிஷா (ரளி) வழியாக வேறு அறிவிப்பாளர்கள் அறிவிக்கின்றனர்.

**பாடம்: 19 மல, ஜலம் கழிக்கும் போது மறைத்துக் கொள்ளல்.**

ஹதீஸ் எண்: 35

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: எவர் சுருமா தீட்டுகிறாரோ அவர் ஒற்றைப்படையாக தீட்டுவாராக. எவர் (அவ்வாறு) செய்தாரோ அவர் நல்லதை செய்தவராவார்! எவர் (அவ்வாறு) செய்யவில்லையோ அதனால் தவறில்லை. எவர் கற்களை வைத்து சுத்தம் செய்கின்றாரோ அவர் (கற்களை) ஒற்றைப் படையாக்குவாராக! எவர் (அவ்வாறு) செய்தாரோ அவர் நல்லதை செய்தவராவர். எவர் (அவ்வாறு) செய்யவில்லையோ அதனால் தவறில்லை. எவரேனும் சாப்பிட்டதும் பற்குத்தினால் (அதை) துப்பி விடுவாராக! அவர் தனது நாவால் துளாவியதை விழுங்கி விடுவாராக! எவர் (அவ்வாறு) செய்தாரோ அவர் நல்லதை செய்தவராவர். எவர் (அவ்வாறு) செய்யவில்லையோ அதனால் தவறில்லை. எவர் மலம் கழிக்கச் செலகிறாரோ அவர் மறைப்பை தேடிக்கொள்வாராக! (திறந்த வெளியில்) மணல் மேட்டை குவித்து அதில் மறைந்திருப்பதை தவிர அவர் (வேறு வசதியை) பெறவில்லை எனில் அதை பின்னோக்கி கொள்வாராக! எனெனில் ஷைத்தான் ஆதமுடைய மக்களின் பிட்டத்தில் விளையாடுகிறான். எவர் (அவ்வாறு) செய்தாரோ அவர் நல்லதைச் செய்தார். எவர் (அவ்வாறு) செய்யவில்லையோ அதனால் தவறில்லை. இதை அபூஹுரைரா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இதன் மூன்றாவது அறிவிப்பாளராக இடம் பெறும் ஹுஸைன் அல்ஹிம்யரீ என்பவர் யாரெனத் தெரியாதவர். இந்த ஹதீஸ் அஹ்மத், இப்னு ஹிப்பான், ஹாக்கிம், பைஹக்கீ ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 20 சுத்தம் செய்வதற்கு தடுக்கப்பட்டவை**

ஹதீஸ் எண்: 36

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (வாழும்) காலத்தில் எங்களில் ஒருவர் (போருக்குச் செல்லும் போது) தான் எதிரிகளிடமிருந்து கைப்பற்றும் செல்வத்தில் உடமையாளருக்குப் பாதி, தமக்குப் பாதி என்ற நிபந்தனையின் அடிப்படையில் தமது சகோதரனுடைய மெலிந்த ஒட்டகத்தை (வாடகைக்கு) எடுத்துக் செல்வார். (அதன்படி போரில் ஒரு அம்பு கிடைத்தால்) எங்களில் ஒருவருக்கு அம்புத் தலையும் இறகுகளும், இன்னொருவருக்கு அம்பின் அடிப்பாகமும் கிடைக்கும்.
பிறகு ருவைபிஃ சொன்னார்கள்: எனக்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள்: ருவைபிஃ! எனக்குப் பின் உன் வாழ்நாள் நீடிக்கலாம்! அப்போது நீ மக்களுக்கு, 'யார் தனது தாடிக்கு முடிச்சுப் போட்டுக் கொள்கிறாரோ அல்லது யார் கழுத்தில் கயிறு அணிகின்றாரோ, அல்லது மிருகங்களின் விட்டை அல்லது எலும்பைக் கொண்டு சுத்தம்

செய்கின்றாரோ நிச்சயமாக அவரிடமிருந்து முஹம்மத் (ஸல்) அவர்கள் விலகி விட்டார்கள் என்று அறிவித்திடுக!

மஸ்லமா பின் முகல்லத் மூலம் எகிப்தின் கீழ்பகுதிக்கு அதிகாரியாக நியமிக்கப்பட்ட ருவைபிஃ பின் சாமித் (ரளி) அவர்கள் கூம்ஷரீக் எனும் ஊரிலிருந்து அல்கமா என்ற ஊருக்குச் செல்லும் வழியில் அல்லது அல்கமா என்ற ஊரிலிருந்து கூம்ஷரீக் எனும் ஊருக்குச் செல்லும் வழியில் இதை அறிவித்ததாக ஷைபான் குறிப்பிடுகிறார்.

(குறிப்பு: நஸயீயிலும் இந்த ஹதீஸ் பதிவாகியுள்ளது.)

ஹதீஸ் எண்: 37

அப்துல்லாஹ் பின் அம்ர் (ரளி) அவர்களுடன் அல்யூன் என்ற கோட்டை வாயிலைக் காத்துக் கொண்டிருக்கும் போது (மேற்கண்ட) இந்த ஹதீஸை (தமக்கு) அப்துல்லாஹ் பின் அம்ர் (ரளி) அறிவித்ததாக அபூஸாலிம் அல் ஜுஷானி அறிவிக்கின்றார்.

அல்யூன் என்ற கோட்டை ஃபிஸ்தாஸ் என்ற ஊரிலுள்ள மலையில் இருக்கிறது என இமாம் அபூதாவூது (ரஹ்) குறிப்பிடுகிறார்கள். ஷைபானில்கித்பானி என்பவர் அபூஹுதைபா என அழைக்கப்படும் ஷையான் உமைய்யா ஆவார்.

ஹதீஸ் எண்: 38

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எலும்பு அல்லது விட்டையைக் கொண்டு சுத்தம் செய்வதை தடை செய்து விட்டார்கள் என ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இந்த ஹதீஸ் முஸ்லிம், அஹ்மத் ஆகிய நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.)

ஹதீஸ் எண்: 39

ஜின் குழுவினர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வருகையுற்று முஹம்மது (ஸல்) அவர்களே! எலும்பு அல்லது விட்டை அல்லது கரித்துண்டு ஆகியவற்றினால் சுத்தம் செய்வதை விட்டும் உமது சமுதாயத்தினரை தடை செய்த விடுங்கள். ஏனெனில் அல்லாஹுத் தஆலா அவற்றில் எங்களுக்கு உணவை அமைத்திருக்கிறான் என்று கூறினார்கள். எனவே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தடை செய்துவிட்டார்கள். இதை அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இதன் அறிவிப்பாளர் தொடரில் இஸ்மாயீல் பின் அய்யாஷ் என்பவர் இடம் பெறுகிறார். இவர் விமர்சனத்திற்குரியவர் எனினும் இந்தக் கருத்துள்ள ஹதீஸ் முஸ்லிம், அஹ்மது, நஸயீ, ஹாகிம் போன்ற நூல்களில் பதிவாகியுள்ளது. அவற்றில் மேற்கண்ட நபர் இடம் பெறவில்லை. எனவே இது ஏற்றுக் கொள்ளத்தக்க ஹதீஸாக ஆகிவிடுகிறது.)

பாடம்: **21 கற்களினால் சுத்தம் செய்தல்.**

ஹதீஸ் எண்: 40

உங்களில் ஒருவர் மலம் கழிக்கச் சென்றால் தன்னுடன் சுத்தப் படுத்தக்கூடிய மூன்று கற்களை எடுத்துச் செல்லட்டும். அவை சுத்தம் செய்வதற்கு போதுமானவையாகும் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸ் அஹ்மத், நஸயீ, தாரகுத்னீ, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் காணப்படுகிறது.)

ஹதீஸ் எண்: 41

சுத்தம் செய்வது எத்தனை கற்களால் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வினவப்பட்ட போது, 'விட்டையல்லாத மூன்று கற்களினால் சுத்தம் செய்ய வேண்டும்' என்று பதிலளித்ததாக குஸைமா பின் சாபித் (ரளி) அறிவிக்கிறார்கள். இவ்வாறே இதை ஹிஷாம் இப்னு உர்வாவிடமிருந்து அபூஉஸாமா இப்னுநுமைர் ஆகியோரும் அறிவிக்கின்றனர் என இமாம் அபூதாவூது குறிப்பிடுகின்றார்.
(குறிப்பு: அஹ்மத், இப்னுமாஜா ஆகியவற்றிலும் இது இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 22 சிறுநீர் கழித்த பின் நன்கு சுத்தம் செய்தல்.**

ஹதீஸ் எண்: 42

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்தார்கள். அப்போது அவர்களுக்குப் பின்னால் தண்ணீர் கூஜாவுடன் உமர் (ரளி) அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். 'உமரே! இது என்ன?' என்று அவர்கள் வினவியதும், தாங்கள் உலுச் செய்வதற்கான தண்ணீர் என்று உமர் (ரளி) கூறினார்கள். அதற்கு அண்ணலார் அவர்கள், 'நான் சிறுநீர் கழிக்கும் போதெல்லாம் உலூச் செய்யும் படி கட்டளையிடப்படவில்லை, அவ்வாறு நான் செய்தால் அது சுன்னத்தாக (வழிமுறையாக) ஆகிவிடும்' என்று சொன்னார்கள். அறிவிப்பவர் ஆயிஷா (ரளி) அவர்கள்.
(குறிப்பு: இப்னுமாஜாவிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 23 தண்ணீரால் சுத்தம் செய்தல்.**

ஹதீஸ் எண்: 43

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு தோட்டத்திற்கு சென்றார்கள். அப்போது அவர்களுடன் ஒரு சிறுவர் தண்ணீர் பாத்திரத்துடன் சென்றார். அவர் எங்களில் மிகவும் சிறியவர். அதை அவர் இலந்த மரத்தடியில் வைத்தார். நபி (ஸல்) அவர்கள் தமது தேவையை நிறைவேற்றிவிட்டு தண்ணீர் கொண்டு சுத்தம் செய்த பின் எங்களிடம் வந்தார்கள் என அனஸ் பின் மாலிக் (ரளி) அறிவிக்கின்றார்கள்.
(குறிப்பு: புகாரி, முஸ்லிம் ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் பதிவு செய்யப்பட்டுள்ளது.)

ஹதீஸ் எண்: 44

அங்கே தூய்மையை விரும்பக்கூடிய மக்கள் உள்ளனர். (9:108) என்ற இந்த இறைவசனம் குபா (என்ற பள்ளி) வாசிகள் தொடர்பாக இறங்கியது என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (மல ஜலம் கழித்தால்) அவர்கள் தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்பவர்களாக இருந்தார்கள். ஆதலால் இந்த வசனம் அவர்கள் தொடர்பாக இறங்கியது என்று அபூஹுரைரா (ரளி) அவர்கள் கூறினார்கள்.

(குறிப்பு: இதை இமாம் திர்மிதி, இப்னுமாஜா ஆகியோர் தமது நூல்களில் பதிவு செய்துள்ளனர். இமாம் திர்மிதி இந்த ஹதீஸை 'கரீப்' என்ற வகையில் சேர்க்கின்றார்கள். இதன் மூன்றாவது அறிவிப்பாளரான இப்ராஹீம் பின் அபீமைமூனா என்பவர் யார் என அறியப்படாதவர். இப்னுமாஜாவின் அறிவிப்பாளர் தொடரில் மேற்கண்டவர் இடம் பெறாவிடினும் அதில் இடம் பெறும் மூன்றாவது அறிவிப்பாளரான உத்பா பின் அபீ ஹகீம் என்பவர் பலவீனமானவர். மேலும் இப்னுமாஜாவின் அறிவிப்பாளர் தொடரில் அபூதல்ஹா (ரளி) இவ்வாறு அறிவிப்பதாகக் கூறும் தல்ஹா பின் நாபிவு என்பார் அபூஅய்யூபு (ரளி)யின் காலத்தவர் அல்ல.

**பாடம்: 24 சுத்தம் செய்த பின் கையை தரையில் தேய்த்துக் கழுவுதல்.**

ஹதீஸ் எண்: 45

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கழிப்பிடம் சென்றால் நான் அவர்களுக்கு சிறு பாத்திரத்தில் அல்லது தோல்பையில் தண்ணீர் கொண்டு செல்வேன். அவர்கள் துப்பரவு செய்து கொள்வார்கள். இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகிறார்கள்: பின்னர் அவர்கள் தமது கையைத் தரையில் தேய்ப்பார்கள். பிறகு அவர்களுக்கு (தண்ணீருள்ள) வேறொரு பாத்திரத்தைக் கொண்டு வருவேன். அவர்கள் உலூச் செய்வார்கள் என்று 'வகீஃ' அவர்களுடைய அறிவிப்பில் காணப்படுகிறது.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரளி)

இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகிறார்கள்: (வகீஃ அவர்களின் ஹதீஸை விட) அஸ்வத் பின் ஆமிர் அவர்களுடைய ஹதீஸில் கூடுதல் விபரங்கள் இருக்கின்றன.

(குறிப்பு: நஸயீ, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் பதிவாகியுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் ஷரீக் என்பவர் நினைவாற்றல் குறைந்தவர் என்பதால் இது பலவீனமான ஹதீஸாகும்.)

**பாடம்: 25 பல் துலக்குதல்.**

ஹதீஸ் எண்: 46

'நான் முஃமின்களுக்கு கஷ்டம் கொடுத்தவன் ஆவேன் என்றில்லையானால் நான் அவர்களுக்கு இஷாவை பிற்படுத்தி தொழ வேண்டும் என்றும், ஒவ்வொரு தொழுகையின் போதும் பல் துலக்க வேண்டும் என்றும் கட்டளை

இட்டிருப்பேன்' என நபி (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இந்தக் கருத்துள்ள ஹதீஸ்கள் புகாரி, முஸ்லிம், நஸயீ, திர்மிதி, அஹ்மது, ஹாகிம், இப்னுமாஜா, இப்னுஹிப்பான், முஅத்தா ஆகிய நூல்களிலும் இடம் பெற்றுள்ளன.)

**ஹதீஸ் எண்:** 47

என் சமுதாயத்தவர்களுக்கு நான் கஷ்டம் கொடுத்தவன் ஆவேன் என்றில்லாவிடில் ஒவ்வொரு தொழுகையின் போதும் பல் துலக்க வேண்டும் என்று நான் அவர்களுக்கு உத்தரவிட்டிருப்பேன் என அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் செவிமடுத்தேன் என்று ஸைது காலித் அல்ஜுஹனீ (ரளி) அறிவிக்கிறார்கள். இதன் காரணமாக எழுத்தாளனுடைய காதில் பேனா இடம் பெறுவது போல் ஸைது பின் காலித் (ரளி) அவர்களது காதில் பற்குச்சி இடம் வகிக்கும் நிலையில் அவர்களைப் பள்ளியில் அமர்ந்திருக்கக் கண்டேன். அவர்கள் தொழத் தயாராகும் போதெல்லாம் பல் துலக்குவார்கள் என (ஜைது பின் காலித் (ரளி) அவர்களிடமிருந்து அறிவிக்கும்) அறிவிப்பாளர் அபூஸலமா தெரிவிக்கின்றார்.
(குறிப்பு: இதை திர்மிதி, நஸயீ, அஹ்மத் ஆகியோரும் பதிவு செய்துள்ளனர்.)

**ஹதீஸ் எண்:** 48

உலூவுடன் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒவ்வொரு தொழுகைக்கும் இப்னு உமர் (ரளி) அவர்கள் உலூ செய்த காரணம் என்ன? என்று அவர்களது மகன் அப்துல்லாஹ்விடம் நான் கேட்டேன். அதற்கு அவர்கள் 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூவுடன் இருந்தாலும் உலூவுடன் இல்லாவிட்டாலும் ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்யுமாறு ஏவப்பட்டிருந்தார்கள். இது அவர்களுக்குச் சிரமமான போது ஒவ்வொரு தொழுகைக்கும் பல் துலக்குமாறு கட்டளையிடப்பட்டார்கள். இப்னு உமர் (ரளி) அவர்கள் தனக்கு சக்தியிருப்பதாக கருதியதால் ஒவ்வொரு தொழுகைக்கும் உலூ செய்பவர்களாக இருந்தனர் என்று அவர்களது மகனார் விடையளித்தார்கள்.
இந்தத் தகவலை அப்துல்லாஹ்பின் ஹன்லலா அவர்களிடம் கேட்டு அஸ்மா பின்த் ஸைது என்பவர் தமக்கு கூறியதாகவும் குறிப்பிட்டார்.
முஹம்மது பின் யஹ்யா பின் ஹப்பான் (ரளி) அறிவிக்கிறாhகள்.

முஹம்மது பின் இஸ்ஹாக் அவர்களிடமிருந்து இதை இப்ராஹீம் பின் ச.்.து அவர்கள் அறிவிக்கின்ற போது (அறிவிப்பாளர் பெயரை அப்துல்லாஹ் என்பதற்கு பதிலாக) உபைதுல்லாஹ் பின் அப்துல்லாஹ் என கூறுவதாக இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.
(குறிப்பு: இதன் அறிவிப்பாளர் தொடரில் முஹம்மது பின் இஸ்ஹாக் என்பவர் இடம் பெறுகிறார். இவருடைய ஹதீஸை ஆதாரமாகக் கொள்வதில் அறிஞர்கள் கருத்து வேறுபாடு கொண்டுள்ளனர்.)

**பாடம்: 26 பல் துலக்கும் முறை.**

ஹதீஸ் எண்: 49

நாங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் எங்களுக்கு வாகன வசதி ஏற்படுத்தி தருமாறு கேட்டு வந்த போது அவர்கள் தமது நாக்கை (பற்குச்சியால்) துலக்கக் கண்டேன் என்று அபூமூஸா அப்துல்லாஹ் பின் கைஸ் (ரளி) அறிவிப்பதாக முஸத்தத் குறிப்பிடுகிறார்கள். 'நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் தமது நாவின் ஓரத்தில் பற்குச்சியை வைத்துக் கொண்டு உஹ், உஹ் என்று சப்தமிட்டவாறு பல்துலக்கிக் கொண்டிருக்கக் கண்டேன்' என்று அபூமூஸா அப்துல்லாஹ் பின் கைஸ் (ரளி) கூறுவதாக சுலைமான் குறிப்பிடுகிறார் என இமாம் அபூதாவூது அறிவிக்கின்றார்கள்.

அறிவிப்பவர்: அபூபுர்தா (ரளி) அவர்கள் தமது தந்தை அபூமூஸா அப்துல்லாஹ் பின் கைஸ் (ரளி) மூலம் அறிவிக்கிறார்கள். இது ஒரு நீண்ட ஹதீஸாக இருந்தது. அதை நான் சுருக்கி விட்டேன் என முஸத்தத் கூறுவதாக இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்.

(குறிப்பு: இதை இமாம் புகாரி, நஸயீ, முஸ்லிம் ஆகியோர் பதிவு செய்துள்ளனர்.)

பாடம்: 27 மற்றவர்களின் பல்குச்சியினால் பல் துலக்குதல்.

ஹதீஸ் எண்: 50

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் பல் துலக்கிக் கொண்டிருக்கும் போது அவர்களின் அருகில் இரண்டு நபர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவர் மற்றொருவரை விட மூத்தவர். அப்போது பல் துலக்குவதைச் சிறப்பிக்கும் விதத்தில் அவ்விருவரில் மூத்தவருக்கு பற்குச்சியை வழங்கி கண்ணியப்படுத்தும் படி நபி (ஸல்) அவர்களுக்கு (வஹீ) இறை அறிவிப்புச் செய்யப்பட்டது என அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறாhகள்.

(குறிப்பு: இப்னு உமர் (ரளி) அவர்கள் மூலம் இதே ஹதீஸின் கருத்தை முஸ்லிம் அவர்கள் பதிவு செய்துள்ளனர். இமாம் புகாரி அவர்கள் அறிவிப்பாளர் தொடர் இல்லாமல் பதிவு செய்துள்ளனர்.)

ஹதீஸ் எண்: 51

தமது இல்லத்தில் நுழைந்ததும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் முதலில் எதை (செய்யத்) துவங்குவார்கள்? என்று நான் அன்னை ஆயிஷா (ரளி) அவர்களிடம் வினவிய போது 'பல் துலக்குவார்கள்' என்று அவர்கள் பதிலளித்தார்கள் என மிக்தாம் பின் ஷுரைஹ் தமது தந்தை வழியாக அறிவிக்கிறார்.

(குறிப்பு: முஸ்லிம், அஹ்மது, நஸயீ, இப்னுமாஜா, இப்னுஹிப்பான் ஆகிய நூல்களிலும் இது பதிவு செய்யப்பட்டுள்ளது.)

**பாடம்: 28 பற்குச்சியைக் கழுவுதல்.**

ஹதீஸ் எண்: 52

நபி (ஸல்) அவர்கள் பல் துலக்கி விட்டு பற்குச்சியைக் கழுவுவதற்காக என்னிடம் கொடுப்பார்கள். நானும் அதைக் கொண்டு பல்துலக்கி விட்டு கழுவி அதை (மீண்டும்) நபி (ஸல்) அவர்களிடம் கொடுத்திடுவேன் என அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.

பாடம்: 29 பல் துலக்குவது இப்ராஹீம் நபி (அலை) அவர்களின் வழிமுறையாகும்.

ஹதீஸ் எண்: 53

மீசையைக் கத்தரித்தல், தாடியை (வளர) விடுதல், பல் துலக்குதல், நாசிக்கு தண்ணீர் செலுத்துதல், நகங்களை வெட்டுதல், விரல் கணுக்களை நன்கு கழுவுதல், அக்குள் முடி களைதல், மர்மஸ்தான முடி எடுத்தல், (மல ஜலம் கழித்த பின்) தண்ணீரால் சுத்தம் செய்தல் ஆகிய இந்தப் பத்து காரியங்களும் இப்ராஹீம் நபியின் வழி முறைகளிலிருந்து அரபியர்களிடம் எஞ்சி நிற்பவை ஆகும் என நபி (ஸல்) கூறியதாக அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள். இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் தொடரில் வரும் முஸ்அப் என்பவர், 'நான் பத்தாவது காரியத்தை மறந்து விட்டேன், அது வாய் கொப்பளிப்பதாகத் தான் இருக்க வேண்டும்' என்று கூறியதாக ஜகரிய்யா பின் அபூஸாயிதா என்ற அறிவிப்பாளர் தெரிவிக்கிறார்.

ஹதீஸ் எண்: 54

மேற்கண்ட ஹதீஸே அம்மார் பின் யாஸிர் (ரளி) வழியாக அறிவிக்கப்பட்டுள்ளது. அதில் தாடியை (வளர) விடுதல் என்பதற்கு பதிலாக கத்னா செய்தல் என்ற வாசகமும் தண்ணீரால் சுத்தம் செய்தல் என்பதற்கு பதிலாக தண்ணீர் தெளித்தல் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

மேற்கண்ட ஹதீஸ் போன்று இப்னு அப்பாஸ் (ரளி) மூலமும் அறிவிக்கப்பட்டுள்ளது. அதில் ஐந்து செயல்கள் குறிப்பிட்டு அவை அனைத்தும் தலையைச் சார்ந்தவை எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் தாடியை (வளர) விடுதல் என்பதைக் குறிப்பிடாமல் தலை முடியை வகிடு எடுத்துச் சீவுதல் குறிப்பிடப்பட்டுள்ளது என இமாம் அபூதாவூது கூறுகின்றார்கள்.

மேலும் இமாம் அபூதாவூது (ரஹ்) அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுள்ளனர். அதாவது தல்க் பின் ஹபீப் முஜாஹித் ஆகியோரிடமிருந்தும் பக்ர் பின் அப்துல்லாஹ் அல் முஸ்னீ ஆகியோரிடமிருந்தும் ஹம்மாத் அறிவிக்கும் ஹதீஸ் போலவே வேறு சிலராலும் அறிவிக்கப்பட்டுள்ளது. அதில் தாடியை (வளர) விடுவது பற்றிக் கூறப்பட வில்லை. நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூஹுரைரா (ரளி) அபூ ஸலமா வாயிலாக அறிவிக்கும் முஹம்மத் பின் அப்துல்லாஹ் பின் அபூமர்யம் அறிவிக்கும் ஹதீஸில் தாடியை விட்டுவிடுதல் என்றுள்ளது. இப்ராஹீம் அன்னகயீ என்பாரிடமிருந்து

இதே போன்ற ஹதீஸ் அறிவிக்கப்பட்டுள்ளது. அதில் தாடியை விட்டுவிடுதல் கத்னா செய்தல் ஆகியன கூறப்பட்டுள்ளன.
(குறிப்பு: இது இப்னுமாஜாவிலும் இடம் பெற்றுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் ஸலமா பின் முஹம்மது யாரென அறியப்படாதவர் என இப்னுல் கையும் (ரஹ்) குறிப்பிடுகிறார்கள். இவர் தனது பாட்டனார் மூலம் அறிவிப்பவை முர்ஸலான ஹதீஸாகும். அதாவது இவர் தனது பாட்டனாரைச் சந்திக்க வில்லை. இப்னு ஹிப்பான் அவர்கள் இவரது ஹதீஸை ஆதாரமாகக் கொள்ளக் கூடாது எனக் குறிப்பிடுகிறார்கள்.)

**பாடம்: 30 இரவில் எழுந்ததும் பல் துலக்குதல்.**

ஹதீஸ் எண்: 55

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் இரவில் (தூங்கி) எழுந்தால் தமது வாயை பற்குச்சியினால் துலக்குவார்கள் என ஹுதைபா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: புகாரி, முஸ்லிம், நஸயீ, அஹ்மது, இப்னுமாஜா ஆகியவற்றிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 56

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு உலூச் செய்யும் தண்ணீரும் பற்குச்சியும் (இரவிலேயே தயாராக) வைக்கப்படும். அவர்கள் இரவில் எழுந்ததும் மலஜலம் கழித்துவிட்டுப் பின்னர் பல் துலக்குவார்கள் என அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் பஹ்ஸ் பின் ஹகீம் பின் முஆவியா என்பவர் விமர்சனத்திற்கு உரியவர் என இமாம் முன்திரி குறிப்பிடுகிறார்கள்.)

ஹதீஸ் எண்: 57

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இரவிலும் பகலிலும் தூங்கி விழித்தார்களெனில் உலூச் செய்யும் முன் பல்துலக்காது இருக்க மாட்டார்கள் என ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இதன் அறிவிப்பாளர் தொடரில் மூன்றாவதாக இடம் பெறும் அலீ பின் ஜைது பின் ஜத்ஆன் என்பவர் பலவீனமானவர்.)

ஹதீஸ் எண்: 58

இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நான் நபி (ஸல்) அவர்களோடு ஒரு இரவில் தங்கினேன். அப்போது அவர்கள் தூக்கத்திலிருந்து எழுந்து, ஒலூச் செய்வதற்காக (வைக்கப்பட்டிருந்த) தண்ணீருக்கு (அருகே) வந்தார்கள். அவர்களது பற்குச்சியை எடுத்தார்கள். பிறகு உபயோகித்தார்கள் (பல் துலக்கினார்கள்). பிறகு 'நிச்சயமாக வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதிலும் இரவும் பகலும் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோருக்கு உறுதியாக பல அத்தாட்சிகள் இருக்கின்றன' (3:190) என்ற வசனத்தை ஓதினார்கள். அவர்கள் ஏறத்தாழ அந்த அத்தியாயத்தின்

இறுதி வரை ஓதினார்கள் அல்லது அந்த அத்தியாயத்தின் இறுதி வரை ஓதி விட்டார்கள். பிறகு ஒலூச் செய்து விட்டு தொழும் இடத்திற்கு வந்தார்கள். இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு அல்லாஹ் விரும்பிய வரை படுத்து உறங்கினார்கள். பிறகு எழுந்து முன்பு போலவே செய்தார்கள். பிறகு படுத்து உறங்கினார்கள். மறுபடி எழுந்து முன்பு போலவே செய்தார்கள். ஒவ்வொரு தடவையும் பற்குச்சியினால் பல் துலக்கினார்கள். இரண்டு ரக்அத்கள் தொழுதார்கள். பிறகு வித்ரு தொழுதார்கள்.
ஹுசைன் மூலமாக ஃபுலைல் அவர்கள் கீழ்காணும் வார்த்தையை கூறுவதாக அபூதாவூது கூறுகிறார்கள்.
'நபி (ஸல்) அவர்கள், இன்ன பீ ஹல்கிஸ்....(3:190) அத்தியாயத்தை இறுதி வரை ஓதிக் கொண்டே பல் துலக்கினார்கள், ஒலுவும் செய்தார்கள்'.

**பாடம்: 31 ஒலுவின் அவசியம் பற்றியது.**

ஹதீஸ் எண்: 59

அபூ அல் மலீஹ் அவர்கள் அறிவிக்கிறார்கள்.
'மோசடி பொருள்களினால் (செய்யப்படும்) தர்மததையும், ஒலூ இல்லாத தொழுகையையும் எல்லாம் வல்ல அல்லாஹ் ஏற்றுக் கொள்ள மாட்டான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 60

அபூஹுரைரா (ரளி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
'எல்லாம் வல்ல அல்லாஹ் உங்களில் எவரது தொழுகையையும் நீங்கள் ஒலூச் செய்தால் தவிர, அசுத்தத்துடன் ஏற்றுக் கொள்ள மாட்டான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 61

அலி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
'தொழுகையின் திறவு கோல் ஒலுவாகும், அதன் ஆரம்பம் தக்பீர் ஆகும், அதன் இறுதி சலாம் கொடுப்பதாகும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**பாடம்: 32 ஒலுவைப் புதுப்பித்தல்.**

ஹதீஸ் எண்: 62

அபூ குதைப் அல் ஹுத்லீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
நான் இப்னு உமர் அவர்களுடன் இருந்தேன். லுஹர் தொழுகைக்கு பாங்கு சொல்லப்பட்ட போது அவர்கள் ஒலூச் செய்து தொழுதார்கள். அஸர் தொழுகைக்கு பாங்கு சொல்லப்பட்ட போது மீண்டும் ஒலூச் செய்தார்கள். (முன்னர் செய்த ஒலூ நீங்காமல் இருக்கும் போது) மீண்டும் ஒலூச் செய்ததற்கான காரணத்தைக் கேட்டேன். அதற்கு அவர்கள், 'தூய்மையாக இருக்கும் போது ஒலூச் செய்தவருக்காக பத்து நன்மைகள் பதிவு செய்யப்படும்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக பதில் சொன்னார்கள்.
அபூதாவூது அவர்கள் கூறுகிறார்கள்:

முஸத்தத் வழியாக அறிவிக்கப்படும் இந்த ஹதீஸ் மிகச் சரியானதாகும்.

**பாடம்: 33 தண்ணீரை அசுத்தப்படுத்துபவை.**

ஹதீஸ் எண்: 63

இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

'கால் நடைகளும் வன விலங்குகளும் வந்து போகக் கூடிய திறந்த வெளியில் இருக்கும் தண்ணீர் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு, தண்ணீர் இரண்டு 'குல்லத்'களை அடைந்து விட்டால் அசுத்தங்களால் பாதிக்கப்படாது' என பதிலளித்தார்கள்.

ஹதீஸ் எண்: 64

இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

'பாலை வனத்தில் தண்ணீர் பற்றி நபி (ஸல்) அவர்களிடம் கேட்கப்பட்டதற்கு மேற்கண்டவாறு பதிலளித்தார்கள்.

ஹதீஸ் எண்: 65

இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

தண்ணீர் இரண்டு 'குல்லத்' க்களை அடைந்து விட்டால், அது அசுத்தமாகாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(குறிப்பு: ஹதீஸ் எண் 29,30 மற்றும் 58 முதல் 65 ஆகியவை லுஹா அவர்களின் மொழிபெயர்ப்பு அல்ல)

**பாடம்: 34 'புழாஆ' என்ற கிணறு.**

ஹதீஸ் எண்: 66

மாதவிடாய்த் துணிகளும், நாய்களின் மாமிசத்துண்டமும் நாற்றமான பொருட்களும் போடப்பட்ட புழாஆ என்ற கிணற்று நீரில் நாங்கள் உலூச் செய்யலாமா? என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்ட போது, 'தண்ணீர் தூய்மைப் படுத்தும் பொருளாகும். எப்பொருளுமே அதை அசுத்தப்படுத்தாது' எனறு நபி (ஸல்) அவர்கள் பதிலளித்ததாக அபூஸயீதுல் குத்ரீ (ரளி) அறிவிக்கிறார்கள்.

இதன் அறிவிப்பாளர் தொடரில் அப்துல்லாஹ் பின் ராபிஃ என்ற பெயருக்கு பதிலாக அப்துர் ரஹ்மான் பின் ராபிஃ என சிலர் அறிவிப்பதாக இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்.

(குறிப்பு: அஹ்மது, நஸயீ, இப்னுமாஜா, தாரகுத்னீ, ஹாகிம், பைஹக்கீ, தாரிமி ஆகிய நூல்களிலும் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 67

நாய்களின் மாமிசத் துண்டுகளும், மாதவிடாய்த் துணிகளும் மக்களின் கழிவுப் பொருட்களும் கொட்டப்படும் புழாஆ என்ற கிணற்றிலிருந்து உங்களுக்கு நீர் கொண்டு வரப்படுகிறதே? என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்ட போது 'நிச்சயமாக தண்ணீர் தூய்மைப் படுத்தும் பொருளாகும். எப்பொருளுமே அதை அசுத்தப்படுத்தாது' என்று நபி (ஸல்)

அவர்கள் பதிலளித்ததை நான் செவியுற்றேன் என அபூஸயீதுல் குத்ரி (ரளி) அறிவிக்கிறார்கள்.

'புழாஆ' கிணற்றை பராமரிப்பவர்களிடம் அதன் ஆழத்தைப் பற்றிக் கேட்டேன். அதற்கு அவர், 'அதிகபட்ச தண்ணீர் அளவு அடிவயிறு வரை இருக்கும் என்றார். நான் அதன் குறைந்த பட்ச தண்ணீரின் அளவு பற்றி கேட்டதற்கு முட்டுக்காலுக்குக் கீழ் இருக்கும் என்று அவர் கூறியதாக குதைபா பின் ஸயீது அவர்கள் கூற நான் செவியுற்றேன் என இமாம் அபூதாவூது குறிப்பிடுகின்றார்கள்.

நான் 'புழாஆ' கிணற்றின் மேல் என் மேலாடையை விரித்து அளவெடுத்தேன். பிறகு நான் அதை அளந்த போது அதன் அகலம் ஆறு முழம் இருந்தது. எனக்காக தோட்டக் கதவைத் திறந்து என்னை அங்கு அனுமதித்த வாயிற் காப்பாளரிடம், ஏற்கனவே இருந்த அமைப்பை விட்டும் இக்கிணற்றின் அமைப்பு மாறியுள்ளதா? எனக் கேட்ட போது அவா இல்லை என்று சொன்னார் என இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிட்டு விட்டு, அப்போது அக்கிணற்றின் தண்ணீருடைய நிறம் மாறிப் போய் இருக்கக் கண்டேன் என்று குறிப்பிடுகிறார்கள்.

(குறிப்பு: அஹ்மத், திர்மிதி, இப்னுமாஜா, நஸயீ, தாரகுத்னீ, ஹாகிம், பைஹக்கீ, ஷாபி (அல்உம்மு) போன்ற நூல்களிலும் இந்த ஹதீஸ் காணப்படுகிறது.)

**பாடம்: 35 தண்ணீர் தீட்டாகாது.**

ஹதீஸ் எண்: 68

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் ஒருவர் வாய்அகன்ற பாத்திரத்தில் குளித்தார்கள். அப்போது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உலூச் செய்வதற்காகவோ, அல்லது குளிப்பதற்காகவோ வந்த போது 'அல்லாஹ்வின் திருத்துஸதா் அவர்களே! நான் குளிப்புக் கடமை ஆனவளாக இருந்தேன் என்று அவர்கள் கூற 'தண்ணீர் தீட்டாகி விடாது' என்ற நபி (ஸல்) அவர்கள் பதில் கூறினார்கள் என இப்னு அப்பாஸ் (ரளி) அவர்கள் தெரிவிக்கின்றார்கள்.

(குறிப்பு: திர்மிதி, இப்னுமாஜா, தாரமி, ஹாகிம், ரஸீன், அஹ்மத், நஸயீ ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 36 தேங்கி நிற்கும் நீரில் சிறுநீர் கழித்தல்.**

ஹதீஸ் எண்: 69

உங்களில் ஒருவர் தேங்கி நிற்கும் நீரில் சிறுநீர் கழித்து விட்டு பிறகு அதிலேயே குளிக்க வேண்டாம் என அண்ணல் நபி (ஸல்) கூறியதாக அபூஹுரைரா (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: புகாரி, முஸ்லிம், நஸயீ, திர்மிதி, அஹ்மத், இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 70

உங்களில் ஒருவர் தேங்கி நிற்கும் நீரில் சிறுநீர் கழிக்க வேண்டாம் மேலும் அதிலேயே கடமையான குளிப்பை நிறைவேற்றவும் வேண்டாம் என அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரளி).

(குறிப்பு: புகாரி, முஸ்லிம், நஸயி, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 37 நாய் வாய் வைத்த நீரில் உலூச் செய்தல்.**

ஹதீஸ் எண்: 71

உங்களில் ஒருவரின் பாத்திரத்தில் நாய் வாய் வைத்து விட்டால் அதை சுத்தம் செய்யும் முறை என்னவெனில், அது ஏழு தடவை கழுவப்பட வேண்டும். அதில் முதன் முதலாக மண்ணைப் பயன் படுத்திக் கழுவ வேண்டும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இவ்வாறே முஹம்மத் அவர்கள் மூலம் அய்யூப், ஹபீப் பின் ஷஹீத் ஆகிய இருவரும் அறிவிப்பதாக இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

(குறிப்பு: புகாரி, முஸ்லிம், நஸயீ, முஅத்தா, திர்மிதி ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெறுகிறது.)

ஹதீஸ் எண்: 72

மேலுள்ள ஹதீஸின் கருத்தையே அபூஹுரைரா (ரளி) அறிவித்துள்ளார். ஆனாலும் இதன் தொடரில் வரும் (ஹம்மாத், முஃதமர்) இருவரும் நபி (ஸல்) அவர்கள் சொன்னதாகக் கூற வில்லை. அதில் (அறிவிப்பாளர் அய்யூப் அவர்கள்) 'பூனை வாய் வைத்து விட்டால் ஒரு தடவை கழுவ வேண்டும்' என்பதை அதிகமாக அறிவித்துள்ளார்.

(குறிப்பு: நாய் வாய் வைத்தல் சம்பந்தப்பட்ட விஷயம் நபி (ஸல்) அவர்கள் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. பூனை வாய் வைத்தல் சம்பந்தப்பட்ட விஷயம் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக வராமல் நபித் தோழர்கள் கூறுவதாகவே வந்துள்ளது என இமாம் மன்திரி குறிப்பிடுகிறார்கள். இது திர்மிதியிலும் காணப்படுகிறது. திர்மிதி இமாம் அவர்கள், இந்த ஹதீஸ் பலவேறு வழிகளிலும் அறிவிக்கப்படுகிறது. ஆயினும் அவற்றில் எல்லாம் பூனை வாய் வைத்தால் ஒருமுறை கழுவ வேண்டும் என்பது கூறப்பட வில்லை எனத் தெரிவிக்கிறார்கள்.)

ஹதீஸ் எண்: 73

பாத்திரத்தில் நாய் வாய் வைத்து விட்டால் அதை ஏழு முறை கழுவுங்கள். ஏழாவது தடவை மண்ணைப் பயன்படுத்திக் கழுவுங்கள் என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரளி) அறிவிக்கிறார்கள்.

அபூஹுரைரா (ரளி) அவர்களிடமிருந்து அபூஸாலிஹ், அபூரஸீன், அல் அஃரஜ், சாபித் அல் அஹ்னப், ஹம்மாம் பின் முனப்பஹ், அபூஸ்ஸீத்தீ

அப்துர்ரஹ்மான் ஆகியோர் இதை அறிவிக்கும் போது மண்ணைப் பயன்படுத்துவது பற்றிக் குறிப்பிட வில்லை என இமாம் அபூதாவூது கூறுகின்றார்கள்.
(குறிப்பு: திர்மிதியிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 74

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நாய்களைக் கொல்ல வேண்டுமென உத்திரவிட்டார்கள். பின்னர் நாய்களுக்கும் முஸ்லிம்களுக்கும் என்ன வேண்டிக்கிடக்கிறது? என்று கூறிவிட்டு வேட்டையாடும் நாய்களையும் ஆட்டுமந்தையைக் காக்கும் நாய்களையும் (கொல்லாமல்) வைத்துக் கொள்ள அனுமதி வழங்கினார்கள். மேலும் சொன்னார்கள், 'பாத்திரத்தில் நாய் வாயை வைத்து விட்டால் அதை ஏழு தடவை கழுவுங்கள். எட்டாவது தடவை மண்ணைக் கொண்டு கழுவுங்கள்'. இதை இப்னு முகப்பல் (ரளி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

**பாடம்: 38 பூனை குடித்த தண்ணீர்**

ஹதீஸ் எண்: 75

என் கணவர் கதாதாவின் தந்தை எங்களிடம் வந்திருந்தார், அவர் ஒலூச் செய்வதற்காக தண்ணீர் ஊற்றினேன். ஒரு பூனை வந்து அதிலிருந்து குடித்தது. அது குடித்து முடிக்கும் வரை குடிப்பதற்கு ஏதுவாக பாத்திரத்தை சாய்த்தார். நான் அவரையே கூர்ந்து நோக்குவதைக் கண்ட போது 'என் சகோதரர் மகளே! நீ வியப்படைகிறாயா? என்று கேட்டார். நான் 'ஆம்' என்றேன். அதற்கு பூனைகள் அசுத்தமானவை அல்ல. அவை உங்களை சுற்றி (வந்து அண்டி வாழ்ந்து) வரக் கூடியவை என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூகதாதா (ரளி) அவர்கள் சொன்னதாக கஃபு பின் மாலிக் (ரளி) அவர்களின் புதல்வியும் அபூகதாதா (ரளி) அவர்கள் மகனின் மனைவியுமான கப்ஷா (ரளி) அவர்கள் தெரிவிக்கிறார்கள்.
(குறிப்பு: அஹ்மத், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா, முஅத்தா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 76

ஹரீஸா (என்ற ஒருவகை மாவுப்பண்டத்தை) அன்னை ஆயிஷா (ரளி) அவர்களிடம் கொடுத்து விடுமாறு எனது தாயாரை அவர்களது எஜமானி அனுப்பி வைத்தார். அங்கே அன்னை ஆயிஷா (ரளி) அவர்கள் தொழுது கொண்டிருக்கக் கண்டார்கள். அன்னை ஆயிஷா (ரளி) அவர்கள் எனது தாயாரை நோக்கி 'நீ அதை அங்கு வைத்து விடு' எனச் சாடை காட்டினார்கள். அப்போது ஒரு பூனை வந்து அதை தின்றது. ஆயிஷா (ரளி) அவர்கள் தொழுது முடித்த பின்னர் பூனை வாய் வைத்து தின்ற அதே இடத்திலிருந்து சாப்பிட்டார்கள். 'பூனைகள் அசுத்தமானவை அல்ல. அவை உங்களையே சுற்றித் திரிந்து உங்களை அண்டி வாழ்பவை என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக கூறி விட்டு பூனையின் எச்சில் நீரில்

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்ய நான் கண்டிருக்கிறேன் எனவும் சொன்னார்கள். இதை தாவூது பின் ஸாலிஹ் பின் தீனார் அத்தம்மார் தமது தாயார் மூலம் அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இந்த தாவூத் பின் ஸாலிஹ் அவர்களின் தாயார் ஹதீஸ் கலையில் யாரெனத் தெரியாதவர்.)

**பாடம்: 39 பெண்கள் மீதம் வைத்த தண்ணீரில் உலூச் செய்தல்.**

ஹதீஸ் எண்: 77

நானும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களும் குளிப்புக் கடமையானவர்களாக இருக்கும் போது ஒரே பாத்திரத்தில் சேர்ந்து குளிப்போம் என அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: முஸ்லிம், நஸயீ, அஹ்மது ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 78

'ஒரே பாத்திரத்தில் இருந்து நானும் நபி (ஸல்) அவர்களும் உலூச் செய்யும் போது எனது கையும் ரஸுல் (ஸல்) அவர்களின் கையும் போட்டி போட்டுக் கொள்ளும்' என்று உம்மு சுமைய்யா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இது இப்னுமாஜாவிலும் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 79

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் ஆண்களும், பெண்களும் சேர்ந்து உலூச் செய்வார்கள் என இப்னு உமர் (ரளி) அறிவிக்கிறார்கள். முஸத்தத் அவர்களது அறிவிப்பில் 'ஆண்களும் பெண்களும் சேர்ந்து ஒரே பாத்திரத்தில் உலூச் செய்வார்கள்' எனக் கூறியுள்ளார்.
(குறிப்பு: நஸயீ, இப்னுமாஜா, முஅத்தா, புகாரி, அஹ்மத் ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 80

'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் (ஆண்களாகிய) நாங்களும் பெண்களும் ஒரே பாத்திரத்தில் எங்களது கைகளை உள்ளே விட்டு உலூச் செய்வோம்' என இப்னு உமர் (ரளி) அறிவிக்கிறார்கள்.

பாடம்: 40 ஆண்களும் பெண்களும் சேர்ந்து உலூச் செய்யத் தடை.

ஹதீஸ் எண்: 81

அபூஹுரைரா (ரளி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் தோழமை கொண்டது போல் அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் தோழமை கொண்ட ஒருவரை நான் சந்தித்தேன். அவர், 'ஆண் குளித்துவிட்டு மிஞ்சிய தண்ணீரில் பெண் குளிப்பதையும் அல்லது பெண் குளித்து விட்டு எஞ்சிய தண்ணீரில் ஆண் குளிப்பதையும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள்' என்று அறிவித்தார் என ஹுமைத் அல்ஹிம்யரி தெரிவிக்கிறார்கள்.

முஸத்தத் அவர்கள் தமது அறிவிப்பில் 'ஆணும் பெண்ணும் ஒன்றாக சேர்ந்து நீர் அள்ளட்டும்' என்ற வாசகத்தை அதிகமாக அறிவித்துள்ளார்.
(குறிப்பு: நஸயீ, அஹ்மத் ஆகியவற்றிலும் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 82

பெண் உலூச் செய்து எஞ்சிய தண்ணீரில் ஆண் உலூச் செய்வதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள் என ஹகம் பின் அமர் (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இது திர்மிதி, இப்னுமாஜா, நஸயீ ஆகியவற்றிலும் பதிவாகியுள்ளது. ஹகம் பின் அமர் மூலம் அறிவிக்கப்படும் மேற்கண்ட ஹதீஸ் பலவீனமானது என இமாம் நவவீ குறிப்பிடுகிறார்கள்.)

**பாடம்: 41 கடல் நீரில் உலூச் செய்தல்**

ஹதீஸ் எண்: 83

அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! நாங்கள் கடலில் பயணம் செய்யும் போது குறைந்த அளவு தண்ணீரையே எடுத்துச் செல்கிறோம்.

நாங்கள் அந்தத் தண்ணீரை உலூச் செய்யப் பயன்படுத்தினால் தாகத்தால் கஷ்டப்படுவோம். எனவே கடல் நீரால் உலூச் செய்யலாமா? என்று ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'கடல் நீர் சுத்தம் செய்ய ஏற்றதாகும். அதில் செத்தவைகளும் (உண்ணுவதற்கு) அனுமதிக்கப்பட்டதாகும்' என்று கூறியதாக அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: அஹ்மது, திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா, இப்னுகுஸைமா, இப்னுஹிப்பான், ஹாகிம், தாரகுத்னீ, பைஹகீ, முஅத்தா ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் பதிவு செய்யப்பட்டுள்ளது.)

**பாடம்: 42 'நபீத்' என்ற பானத்தில் உலூச் செய்தல்.**

(நபீத்: பேரீத்தம் பழங்களையோ திராட்சையையோ தண்ணீரில் ஊற வைத்து தண்ணீருக்கு சுவை ஏற்றுவது அரபியர் வழக்கம். அவர்கள் அவற்றை போதை தரும் அளவுக்கு நீண்ட நாட்கள் ஊற வைப்பதும் போதை தராத விதத்தில் ஓரிரு நாட்கள் மட்டும் போட்டு வைப்பதும் உண்டு. போதை ஏற்படுத்தினாலும் ஏற்படுத்தாவிட்டாலும் அதனை 'நபீத்' என்பர்.)

ஹதீஸ் எண்: 84

ஜின்கள் வருகைதந்த இரவில் அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரளி) அவர்களை நோக்கி, 'உம்முடைய தோல் பாத்திரத்தில் என்ன உள்ளது?' என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரளி) அவர்கள் 'நபீத்' என பதிலளித்தார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், '(அதில் போடப்பட்டுள்ளது) நல்ல பேரீத்தம் பழமாகும் (இந்த) தண்ணீரும் தூய்மையானதாகும்' என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரளி) அவர்களிடமிருந்து அபூஸைத் என்பவர் தெரிவிக்கிறார்.

அபூஸைத் அல்லது ஸைத் கூறுவதாக ஷரீக் தெரிவிக்கிறார் என அறிவிப்பாளர் சுலைமான் பின் தாவூது குறிப்பிடுவதாக இமாம் அபூதாவூது கூறுகிறார்கள். ஹன்னாத் அவர்கள் 'ஜின்'கள் வருகை தந்த இரவு என்ற வாசகத்தைக் குறிப்பிடவில்லை.
(குறிப்பு: திர்மிதீ, இப்னுமாஜாவிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் அபூஸைத் ஹதீஸ் கலை வல்லுனர்களிடம் யாரென்றே அறியப்படாதவர். இந்த ஹதீஸ் பலவீனமானது என ஹதீஸ்கலை வல்லுனர்கள் தெரிவிக்கின்றனர்.)

ஹதீஸ் எண்: 85

'ஜின்' கள் வருகை தந்த இரவில் உங்களில் யாராவது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்தீர்களா? என்று நான் அப்துல்லாஹ் பின் மஸ்வூது (ரளி) அவர்களிடம் வினவிய போது, 'எங்களில் யாரும் அவர்களுடன் இருக்கவில்லை' என்று அவர்கள் பதிலளித்தார்கள் என அல்கமா அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: முஸ்லிம், திர்மிதீ ஆகியோரும் அறிவிக்கின்றனர்.)

ஹதீஸ் எண்: 86

'பாலிலும், நபீதிலும் உலூச் செய்வதை 'அதா.' அவர்கள் வெறுத்தார்கள். இதைவிட தயம்மும் செய்வதே என்னைப் பொறுத்த வரை சிறந்தது' எனவும் கூறியுள்ளனர் என இப்னுஜுரைஜ் அறிவிக்கிறார்.

ஹதீஸ் எண்: 87

ஒருவருக்கு குளிப்பு கடமை ஆகிவிட்டது. தண்ணீர் இல்லையானால் 'நபீத்' என்ற பானம் உள்ளது. அதைக் கொண்டு அவர் குளிக்கலாமா? என்று நான் அபுல் ஆலியா அவர்களிடம் கேட்ட போது அவர் 'கூடாது' என்று பதிலளித்ததாக அபூகல்தா அறிவிக்கிறார்.
(குறிப்பு: ஹதீஸ் எண் 86,87 இவ்விரண்டும், ஹதீஸ் என்ற பெயரில் வழங்கப்படாது. மாறாக 'அஸர்' என்று கூறப்படும். நபி (ஸல்) அவர்கள் சம்பந்தப்படாமல் நபித்தோழர்களோ அல்லது மற்ற அறிவிப்பாளர்களோ தமது கருத்தாக அறிவிப்பவை 'அஸர்' என்று கூறப்படும்.)

**பாடம்: 43 ஒருவர் மலஜலத்தை அடக்கிக் கொண்டு தொழலாமா?**

ஹதீஸ் எண்: 88

அப்துல்லாஹ் பின் அர்கம் அவர்கள் ஹஜ் செய்வதற்கோ அல்லது உம்ராவுக்காகவோ புறப்பட்டார்கள். அவர்களுடன் சென்றிருந்த மக்களுக்கு அவரே தொழுகை நடத்துவார். ஒரு நாள் அவர் சுபுஹ் தொழுகை நடத்த தயாரானார். அப்போது அவர்களை நோக்கி, உங்களில் ஒருவர் தொழுகை நடத்த முன்வாருங்கள். ஏனெனில் 'உங்களில் ஒருவருக்கு அவர் தொழ ஆரம்பிக்கும் போது கழிப்பிடம் செல்ல வேண்டியது ஏற்பட்டால் முதலில் அவர் கழிப்பிடத்திற்கு செல்வாராக!' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறுவதை நான் செவியுற்று இருக்கிறேன் என்று கூறிவிட்டு

கழிப்பிடத்திற்கு சென்று விட்டார் என உர்வா பின் ஜுபைர் (ரளி) அவர்கள் தமது தந்தை ஜுபைர் (ரளி) வழியாக அறிவிக்கிறார்.

இந்த ஹதீஸை அப்துல்லாஹ் பின் அர்கம் அவர்களிடமிருந்து தன் தந்தைக்கு ஒருவர் அறிவித்ததாகவும் பின் தன் தந்தையார் வழியாக ஹிஷாம் பின் உர்வா அறிவித்ததாக உஹைப் பின் காலித், ஷுஜப் பின் இஸ்ஹாக், அபூ ழம்ரா ஆகியோர் தெரிவிக்கின்றனர். ஆனால் ஹிஷாம் அவர்களிடமிருந்து இதை அறிவிக்கும் அதிகமான அறிவிப்பாளர்கள் ஜுஹைர் அவர்கள் அறிவிப்பது போன்றே அறிவிக்கின்றனர்.

(இங்கே ஜுஹைர் அவர்களின் அறிவிப்பே இடம் பெற்றுள்ளது.)

(குறிப்பு: திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா, முஅத்தா, அஹ்மது, ஹாகிம் ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் பதிவு செய்யப்பட்டுள்ளது.)

ஹதீஸ் எண்: 89

நாங்கள் அன்னை ஆயிஷா அவர்களுடன் இருக்கும் போது அவர்களுக்கு உணவு கொண்டு வரப்பட்டது. அப்போது (அபூபக்கர் ஸித்தீக் (ரளி) அவர்களின் பேரன்) காஸிம் அவர்கள் தொழத் துவங்கினார். அப்போது அன்னை ஆயிஷா (ரளி) அவர்கள் உணவு தயாராக இருக்கும் போது, மலஜல உபாதைகளை அடக்கிக் கொண்டு தொழக் கூடாது என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன் எனக் கூறினார்கள் என காஸிம் பின் முஹம்மது பின் அபூபக்ர் அவர்களின் சகோதரர் அறிவிக்கிறார்.

(குறிப்பு: முஸ்லிமிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 90

'(ஒரு கூட்டத்தினருக்கு) தொழுகை நடத்தும் போது பிரார்த்தனையில் அவர்களை விட்டு தனக்காக மட்டும் பிரார்த்தனை செய்யக் கூடாது. அப்படி செய்தால் அவர்களுக்கு அவர் துரோகம் இழைத்து விட்டார். ஒரு வீட்டில் நுழைய அனுமதி பெறுவதற்கு முன்பு அவ்வீட்டின் உட்பகுதிகளை அவர் பார்க்கக் கூடாது. அவ்வாறு அவர் பார்த்து விட்டால் (அனுமதி பெறாமலேயே) வீட்டில் நுழைந்தவர் போலாவார். மலஜலம் கழிக்காமல் அதை அடக்கிக் கொண்டு தொழக் கூடாது. ஆக இம்மூன்று காரியங்களும் செய்ய உங்களில் யாருக்கும் அனுமதி இல்லை' என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஸவ்பான் (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: திர்மிதி, இப்னுமாஜா, அஹ்மது ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது. இதன் முதற்பகுதியான (ஒரு கூட்டத்தினருக்கு) தொழுகை நடத்தும் போது பிரார்த்தனையில் அவர்களை விட்டு தனக்காக மட்டும் பிரார்த்தனை செய்யக் கூடாது. அப்படி செய்தால் அவர்களுக்கு அவர் துரோகம் இழைத்து விட்டார் என்பது தவிர மற்றவை, வேறு அறிவிப்புக்களின் மூலம் பலமானவையாகின்றன. மேற்குறிப்பிட்ட முற்பகுதி பலவீனமானது. ஏனெனில் அதன் அறிவிப்பாளர் தொடர் பலவிதக் குளறுபடிகளுடன் உள்ளது. அதில் யாரென்றே அறியப்படாத பலர் இடம் பெற்றுள்ளனர் என ஹதீஸ்கலை

வல்லுனர்கள் குறிப்பிட்டுள்ளனர். இமாம் இப்னு குஸைமா அவர்கள் இது இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ் எனக் கூறியுள்ளனர்.)

ஹதீஸ் எண்: 91

அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டுள்ள ஒருவர் மலஜலம் கழிக்க வேண்டியது ஏற்பட்டால் அதை முடிக்காமல் அடக்கிக் கொண்டு தொழக் கூடாது. இதே வார்த்தையில் இப்படியே இந்த ஹதீஸ் தொடர்கிறது. அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பியுள்ள ஒருவர் ஒரு கூட்டத்தினருக்கு தொழுகை நடத்தும் போது அவர்களின் அனுமதியின்றி தொழுகை நடத்தக் கூடாது. மேலும் பிரார்த்தனையில் அவர்களுக்குச் சேர்த்துக் கேட்காமல் தனக்காக மட்டும் பிரார்த்திப்பது கூடாது. அவ்வாறு அவர் செய்தால் அவர்களுக்கு அவர் துரோகமிழைத்தவராவார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரளி) அறிவிக்கின்றார்கள்.

இது சிரியா (ஷாம்) நாட்டு அறிவிப்பாளர்களின் அறிவிப்பாகும். (அபூஹுரைரா (ரளி) அவர்கள் தவிர) வேறு அறிவிப்பாளர்கள் யாரும் இந்த அறிவிப்பில் கூட்டாக வில்லை.

(குறிப்பு: மேற்கண்ட ஹதீஸின் குறிப்பை காண்க.)

**பாடம்: 44 உலூச் செய்யப் போதுமான அளவு தண்ணீர்.**

ஹதீஸ் எண்: 92

நபி (ஸல்) அவர்கள் ஒரு 'முத்து' (இரு கை கொள்ளளவு) தண்ணீரில் உலூச் செய்து விடுபவர்களாகவும் ஒரு 'ஸாவு' (இரு கை கொள்ளளவு தண்ணீரின் நான்கு மடங்கு) தண்ணீரில் குளித்து விடுபவர்களாகவும் இருந்தார்கள் என அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.

இதை அப்பான் அவர்கள் கதாதா வாயிலாக அறிவிக்கும் போது ஸபிய்யா அவர்களிடம் கேட்டதாக இமாம் அபூதாவூத் கூறுகிறார்கள்.

(குறிப்பு: முஸ்லிம், அஹ்மது, இப்னுமாஜா, திர்மிதி ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 93

மேற்கண்ட ஹதீஸே ஜாபிர் (ரளி) அவர்கள் மூலமாக அறிவிக்கப்பட்டுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் யஸீத் பின் அபூயஸீத் கூபாவாசிகள் மூலம் அறிவித்தால் அது ஆதாரமாகக் கொள்ளத் தக்கதல்ல.

ஹதீஸ் எண்: 94

'நபி (ஸல்) அவர்கள் ஒரு முறை உலூச் செய்தனர். ஒரு முத்து (இரு கைகள் கொள்ளளவு) நீரில் மூன்றில் இருபங்கு தண்ணீர் அவர்களிடம் கொண்டு வரப்பட்டது' என உம்மு உமாரா (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இப்னுகுஸைமா, இப்னு ஹிப்பான், நஸயீ ஆகியவற்றிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 95

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'இரண்டு ராத்தல்' கொள்ளளவு கொண்ட பாத்திரத்தில் உலூச் செய்தார்கள். ஒரு 'ஸாவு' (இரண்டு கை கொள்ளளவு தண்ணிரின் நான்கு மடங்கு) தண்ணீரில் குளிப்பார்கள் என அனஸ் (ரளி) அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

இந்த ஹதீஸை ஷரீக் என்பார் வாயிலாக யஹ்யா பின் ஆதம் அறிவிக்கும் போது (அப்துல்லாஹ் பின் ஜப்ர் என்பதற்கு பதிலாக) இப்னு ஜப்ர் பின் அதீக் எனக் கூறியுள்ளார். அப்துல்லாஹ் பின் ஈஸா என்பார் வழியாக இதை சுஃப்யான் அறிவிக்கும் போது எனக்கு ஜப்ர் பின் அப்துல்லாஹ் அறிவிக்கின்றார் எனக் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: அப்துல்லாஹ் பின் ஜப்ர் அவர்கள் அனஸ் (ரளி) அவர்களிடம் கேட்டதாக ஷுஃபா அறிவிக்கின்றார். எனினும் ஷுஃபா அவர்கள் இரண்டு ராத்தல்கள் எனக் குறிப்பிடாமல் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒரு மக்கூக் அளவு தண்ணீரில் உலூச் செய்வார்கள் என அறிவிக்கிறார்.

மேலும் இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

ஸாவு என்பது ஐந்து ராத்தல்கள் என இமாம் அஹ்மது பின் ஹன்பல் அவர்கள் கூற நான் கேட்டிருக்கிறேன். இப்னு அபூதிஃப் என்பாரின் 'ஸாவு' அளவும் நபி (ஸல்) அவர்களின் ஸாவு அளவும் ஒன்றே எனவும் அபூதாவூத் கூறியுள்ளனர்.

(குறிப்பு: நஸயீ, அஹ்மது, முஸ்லிம், திர்மிதி, தாரிமி போன்ற நூல்களிலும் இக்கருத்து காணப்படுகிறது. 'மக்கூக்' என்பது இரு கைகள் கொள்ளக் கூடிய அளவு என இப்னுல் அஸீர் அவர்கள் தமது 'நிஹாயா' வில் குறிப்பிடுகின்றனர்.)

**பாடம்: 45 தண்ணீரை விரயமாக்குதல்.**

ஹதீஸ் எண்: 96

'யா அல்லாஹ்! நான் சுவனத்தில் நுழைந்ததும் அதன் வலப்பக்கத்தில் எனக்கு வெள்ளை மாளிகையை அருள்வாயாக என உன்னிடம் வேண்டுகிறேன்' என்று தனது மகன் பிரார்த்தனை செய்வதை செவியுற்ற அப்துல்லாஹ் பின் முகப்பல் (ரளி) அவர்கள் தமது மகனை நோக்கி, 'என்னருமை மகனே! நீ அல்லாஹ்வின் சுவனத்தை கேள், (பிரார்த்தனையில் வரம்பு மீறாதே) ஏனெனில் 'சுத்தம் செய்வதிலும் பிரார்த்தனை புரிவதிலும் வரம்பு மீறும் ஒரு கூட்டம் எனது இந்த சமுதாயத்தில் இனி உருவாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன் என அறிவுரை வழங்கினார்கள்.

(குறிப்பு: அஹ்மது, இப்னுமாஜாவிலும் இடம் பெற்றுள்ளது. அப்துல்லாஹ் இப்னு முகப்பல் அவர்களின் மகன் என்பவர் யார் என தெரியாதவர்.)

**பாடம்: 46 உலூவை பூரணமாகச் செய்தல்.**

ஹதீஸ் எண்: 97

தங்களது குதிங்கால்களில் தண்ணீர் படாமல் தோற்றமளித்த ஒரு கூட்டத்தாரைப் பார்த்து (உலூச் செய்யும் போது நன்றாக நனையாத) குதிகால்களுக்கு நரகம் என்ற நாசம் உண்டாவதாக! (இதை அஞ்சி) உலூவை பூரணமாக செய்யுங்கள்' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அப்துல்லாஹ் பின் அம்ர் (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இதை முஸ்லிம், நஸயீ, இப்னுமாஜா, அஹ்மது, தாரகுத்னீ, புகாரி ஆகியோரும் அறிவித்துள்ளனர்.)

**பாடம்: 47 பித்தளை பாத்திரத்தில் உலூச் செய்தல்.**

ஹதீஸ் எண்: 98

'நானும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களும் பித்தளைப் பாத்திரத்தில் குளிப்போம்' என அன்னை ஆயிஷா (ரளி) அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 99

மேற்கண்ட ஹதீஸ உர்வா அவர்கள் மூலம் அறிவிக்கப்படுகிறது.
(குறிப்பு: 98 வது ஹதீஸின் அறிவிப்பாளர் தொடர் தொடர்பு துண்டிக்கப்பட்டதாக உள்ளது. அதிலே அறியப்படாத ஒருவரும் இடம் பெறுகிறார். 99 வது ஹதீஸ் தொடர்பு துண்டிக்கப்படா விடினும் அறியப்படாத ஒருவர் இடம் பெற்றுள்ளார். எனவே இவ்விரண்டு ஹதீஸ்களுமே ஏற்றுக் கொள்ளத்தக்கவை அல்ல.)

ஹதீஸ் எண்: 100

'எங்களிடம் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் வருகை தந்தார்கள். அப்போது நாங்கள் அவர்களுக்கு உலூச் செய்ய பித்தளை பாத்திரத்தில் நீர் வழங்கினோம். அவர்கள் உலூச் செய்தார்கள்' என அப்துல்லாஹ் பின் ஸைது (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இப்னுமாஜாவிலும் இது இடம் பெற்றுள்ளது.) பாடம்: 48 உலூச் செய்யத் துவங்கும் போது பிஸ்மி கூறுதல்.

ஹதீஸ் எண்: 101

'யார் உலூவின் போது அல்லாஹ்வின் பெயரைக் கூற வில்லையோ அவருக்கு உலூ இல்லை. யாருக்கு உலூ இல்லையோ அவலுக்கு தொழுகை இல்லை' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூஹுரைரா (ரளி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: அஹ்மது, இப்னுமாஜா, தாரகுத்னீ, ஹாகிம், பைஹகீ, திர்மிதி ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது. இந்த ஹதீஸின் தொடரில் இடம் பெறும் யஃகூப்பின் சலமா தனது தந்தையிடம் செவியுற்றதில்லை. அவரது தந்தை அபூஹுரைரா (ரளி) அவர்களிடம் செவியுற்றதில்லை. எனவே இது தொடர்பு துண்டிக்கப்பட்ட செய்தியாகிறது.

மேலும் இந்த கருத்தில் பலமான அறிவிப்பாளர் வரிசையுடன் கூடிய ஒரு ஹதீஸைக்கூட நான் அறியவில்லை என்று இமாம் அஹ்மது பின் ஹன்பல் குறிப்பிட்டுள்ளனர். எனினும் பொதுவாக எல்லாக் காரியங்களையும் பிஸ்மில்லா கூறியே ஆரம்பிக்க வேண்டும் என்ற ஹதீஸின் அடிப்படையில் உலூவுக்கும் பிஸ்மில்லா கூற வேண்டும் என்று கருத் இடம் உள்ளது. மேலும் நபித் தோழர்கள் சிலர் உலூச் செய்வதற்காக தண்ணீரைத் தேடினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் 'உங்களிடம் எவரிடமாவது சிறிதளவு தண்ணீர் இருக்கிறதா?' என்று கேட்டார்கள் (சிறிதளவு தண்ணீர் கொண்டு வரப்பட்டவுடன்) அந்த தண்ணீரில் தமது கையை வைத்தார்கள். 'அல்லாஹ்வின் பெயரால் உலூச் செய்யுங்கள்' என்றும் கூறினார்கள். அந்த நபித்தோழர்களில் கடைசியானவர் உலூச் செய்யும் வரை அவர்களின் விரல்களில் இருந்து தண்ணீர் வெளிப்பட்டுக் கொண்டிருந்ததை நான் பார்த்தேன் என அனஸ் (ரளி) அறிவிக்கும் நஸயீயின் 78 வது ஹதீஸ் படி பிஸ்மில்லாஹ் கூற வேண்டும்.)

ஹதீஸ் எண்: 102

யார் உலூச் செய்யும் போது அல்லாஹ்வின் பெயர் கூறவில்லையோ அவருக்கு உலூ இல்லை என்ற நபிமொழியின் விளக்கமாவது, ஒருவர் (தொழுகைக்கு) உலூச் செய்வார், கடமையான குளிப்பின் போது கடமையான குளிப்புக்காக குளிக்கிறேன் எனவும் மனதில் எண்ணி இருக்கமாட்டார் என்பது தான் என ரபீஆ (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இது ரபீஆ (ரளி) அவர்களின் கருத்தே தவிர நபி (ஸல்) அவர்கள் கூறியதல்ல.)

**பாடம்: 49 கைகளைக் கழுவாமலேயே பாத்திரத்தில் நுழைத்தல்.**

ஹதீஸ் எண்: 103

இரவில் உங்களில் ஒருவர் (உறங்கி) விழித்தால் மூன்று முறை (கைகளில் தண்ணீர் ஊற்றிக்) கழுவாமல் தனது கையைப் பாத்திரத்தில் விட வேண்டாம். எனெனில் இரவில் அவரது கை எங்கெங்கு பட்டது என்பதை அவர் அறிய மாட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரளி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: புகாரி, முஸ்லிம், நஸயீ, அஹ்மத், இப்னுமாஜா, முஅத்தா ஆகிய நூல்களிலும் இடம் பெற்றுள்ளது. புகாரியில் மூன்று முறை என்ற வார்த்தை இல்லை.)

ஹதீஸ் எண்: 104

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெறுகிறது. ஆனால் இரண்டு முறை அல்லது மூன்று முறை கைகளைக் கழுவாமல் பாத்திரத்தில் விட வேண்டாம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

(இதில் 103 வது ஹதீஸில் உள்ள) அபூரஸீன் என்ற அறிவிப்பாளர் குறிப்பிடப்படவில்லை.

ஹதீஸ் எண்: 105

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. இதில் 'அவரது கை இரவில் எங்கெங்கு உலவியது' என அவருக்கு தெரியாது என்று அதிகப்படியாக உள்ளது இதை அபூமர்யம் (ரளி) அறிவிக்கிறார்கள்.

**பாடம்: 50 அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உலூச் செய்த விதம்.**

ஹதீஸ் எண்: 106

உஸ்மான் (ரளி) அவர்கள் உலூச் செய்த போது தன் இரு கைகளிலும் தண்ணீர் ஊற்றிக் கழுவினார்கள். பின்னர் வாய் கொப்பளித்து மூக்கையும் சுத்தம் செய்தார்கள். பின்னர் முகத்தை மும்முறை கழுவினார்கள். பின்னர் 'வலது கையை' முழங்கை உட்பட மூன்று முறை கழுவினார்கள். பின்னர் இடது கையையும் அதே போலக் கழுவினார்கள். பின்னர் தலைக்கு மஸஹ் செய்தார்கள். பின்னர் வலதுகாலை மூன்று முறை கழுவினார்கள். அதே போல இடது காலையும் கழுவினார்கள்.

பின்பு, 'நான் இப்போது உலூச் செய்தது போலவே நபி (ஸல்) அவர்களையும் உலூச் செய்யப் பார்த்திருக்கிறேன்' என்றார்கள். 'யார் நான் உலூச் செய்தது போலவே உலூச் செய்து அவர் தனது மனதில் எவ்வித எண்ணங்களுக்கும் இடமளிக்காமல் இரண்டு ரக்அத் தொழுதால் அவரது முன் பாவங்களை அல்லாஹ் மன்னித்து விடுகிறான்' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என உஸ்மான் (ரளி) அறிவிக்கிறார்கள். இதை உஸ்மான் (ரளி) அவர்களின் அடிமை அபான் அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: புகாரி, முஸ்லிம், அஹ்மது, நஸயீ ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 107

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. இதில் வாய் கொப்பளித்தலும், நாசிக்கு நீர் செலுத்தி மூக்கைச் சிந்துவதும் கூறப்படவில்லை. எனினும் தலைக்கு மூன்று முறை மஸஹ் செய்தார்கள். தமது இரு கால்களையும் மும்முறை கழுவினார்கள். பின்னர் நபி (ஸல்) அவர்களை இவ்வாறு உலூச் செய்வதைக் கண்டேன் என்றும், யார் இதற்கு குறைவாக உலூச் செய்தாலும் அது அவருக்குப் போதுமாகும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாகவும் உஸ்மான் (ரளி) கூறினார்கள். பின்னர் இரண்டு ரக்அத் தொழுவது பற்றிய விபரம் இடம் பெறவில்லை. இதை ஹுும்ரான் (ரளி) அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 108

உலூச் செய்யும் முறை பற்றி இப்னு அபி முலைக்கா அவர்களிடம் வினவப்பட்ட போது, அவர் 'உஸ்மான் (ரளி) அவர்களிடம் உலூச் செய்யும் முறை பற்றி வினவப்பட்டது. அப்போது அவர்கள் தண்ணீர் கொண்டு வரும்படி சொன்னார்கள். அவர்களிடம் ஒரு தண்ணீர் பாத்திரம் கொண்டு வரப்பட்டதும்

அதை தனது வலது கையில் சாய்த்து (நீர்; விட்டு கழுவிய பின்) கையை தண்ணீர் பாத்திரத்திற்குள் செலுத்தி மூன்று முறை வாய் கொப்பளித்தார்கள். மும்முறை நாசிக்கு செலுத்தி சுத்தம் செய்தார்கள். மும்முறை முகத்தைக் கழுவினார்கள். பின்பு மூன்று முறை வலது கையையும், மூன்று முறை இடது கையையும் கழுவினார்கள். பின்பு கையை தண்ணீருக்குள் செலுத்தி தண்ணீர் எடுத்து தமது தலைக்கு மஸஹ் செய்தார்கள். (காதுகளுக்கு மஸஹ் செய்யும் போது) காதுகளின் உட்புறமும் வெளிப்புறமும் ஒரு தடவை கழுவினார்கள். பின்பு இரு கால்களையும் கழுவினார்கள். பிறகு உலூவின் முறை பற்றிக் கேட்டவர் எங்கே? (என்று வினவி) இவ்வாறே நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை உலூச் செய்யக் கண்டேன் என்று உஸ்மான் பின் அப்பாஸ் (ரளி) கூறினார்கள்.

அறிவிப்பவர்: உஸ்மான் பின் அப்துர்ரஹ்மான் அத்தைமியி.

உஸ்மான் (ரளி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகின்ற சஹீஹான அனைத்து ஹதீஸ்களும் 'தலைக்கு ஒருமுறை தான் மஸஹ் செய்ய வேண்டும்' என அறிவிக்கின்றன. ஏனெனில் மற்ற உறுப்புக்களை மும்முறை கழுவி உலூச் செய்ய வேண்டும் என்றே அறிவிப்பாளர்கள் அறிவிக்கின்றனர். அந்த அறிவிப்புக்களில் தலைக்கு மஸஹ் செய்தார்கள் என்றே (எண்ணிக்கையைக் குறிப்பிடாமல்) அறிவிக்கின்றனர். மற்றவைகளுக்கு எண்ணிக்கையை குறிப்பிட்டது போல இதற்கு எண்ணிக்கையைக் குறிப்பிடவில்லை.

ஹதீஸ் எண்: 109

உஸமான் (ரளி) அவர்கள் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி உலூச் செய்யலானார்கள். அப்போது இடக்கையின் மீது வலது கையால் தண்ணீர் ஊற்றி பிறகு இரு கைகளையும் மணிக்கட்டு வரை கழுவினார்கள். பிறகு மும்முறை வாய் கொப்பளித்து நாசிக்கு நீர் செலுத்தி சுத்தம் செய்தார்கள். ஒவ்வொரு உறுப்பையும் மூன்று முறை கழுவியதாக அறிவிப்பாளர் குறிப்பிடுகிறார். தலைக்கு மஸஹ் செய்தார்கள். பின்னர் இரு கால்களையும் கழுவினார்கள் என்று கூறி 'என்னை எவ்வாறு உலூச் செய்யக் கண்டீர்களோ அவ்வாறே நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்யக் கண்டேன்' என்று உஸ்மான் (ரளி) கூறியதாக அபூஅல்கா அறிவிக்கிறார். பிறகு ஜுஹ்ரீ அவர்களது (மேற்கண்ட 106 வது) ஹதீஸை போன்று முழுமையாக அறிவிக்கிறார்.

ஹதீஸ் எண்: 110

நான் உஸ்மான் (ரளி) அவர்களை தன் இரு முழங்கைகளையும் மும்முறை கழுவக் கண்டேன். மேலும் தலையை மூன்று முறை மஸஹ் செய்யவும் கண்டேன் என்று கூறி 'நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை இதே போன்று உலூச் செய்யக் கண்டேன்' என்று உஸ்மான் (ரளி) கூறியதாக ஷகீக் பின் ஸலமா அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸை இஸ்ராயீல் மூலம் வகீஃ அவர்கள் அறிவிக்கும் போது உஸ்மான் (ரளி) அவர்கள் எல்லா உறுப்புகளையும் மும்முறை கழுவி உலூச் செய்ததாக மட்டும் அறிவிக்கிறார்.

ஹதீஸ் எண்: 111

அலி (ரலி) அவர்கள் தொழுது முடித்துவிட்டு எங்களிடம் வந்தார்கள். தண்ணீர் கொண்டு வரச் சொன்னார்கள். அவர்கள் தொழுது முடித்து விட்ட நிலையில் தண்ணீர் கொண்டு வருமாறு சொல்வது நமக்கு (உலூவின் முறைகளைக்) கற்றுக் தருவதற்காகவே என நாங்கள் பேசிக் கொண்டோம். தண்ணீருள்ள பாத்திரமும் (உலூச் செய்த நீரைப் பிடிப்பதற்காக) ஒரு தட்டும் கொண்டு வரப்பட்டது. அப்பாத்திரத்திலிருந்து தனது வலது கையில் தண்ணீர் ஊற்றி தமது இரு கைகளையும் மும்முறை கழுவினார்கள். பிறகு மூன்று தடவை வாய் கொப்பளித்து மூன்று தடவை நாசிக்கு தண்ணீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்தார்கள். அப்போது தான் அள்ளுகிற ஒரு கை நீரிலேயே வாய் கொப்பளித்து மூக்கையும் சுத்தம் செய்தார்கள். (இரண்டிற்கும் தனித் தனியாக மூன்று முறை நீர் அள்ளவில்லை) பிறகு தமது முகத்தை மூன்று தடவையும், வலது கையை மூன்று தடவையும், இடது கையை மூன்று தடவையும் கழுவினார்கள்.

பிறகு பாத்திரத்தில் கையை விட்டு தலைக்கு ஒரே ஒரு முறை மஸஹ் செய்தார்கள். பிறகு வலது காலை மூன்று முறையும், இடது காலை மூன்று முறையும் கழுவி பின்னர், 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களது உலூச் செய்யும் முறையை அறிய ஆவலுள்ளவருக்கு இது போதும்' என்று கூறினார்கள். இதை அப்துகைர் அவர்கள் அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா, அஹ்மது ஆகிய நூல்களிலும் இந்தச் செய்தி இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 112

அலி (ரலி) அவர்கள் சுப்ஹு தொழுது விட்டு (கூபாவிலுள்ள இடமான) ரஹ்பாவிற்கு சென்று தண்ணீர் கொண்டு வரச் சொன்னார்கள். அப்போது ஒரு சிறுவர் தண்ணீர் பாத்திரத்தையும் கை கழுவும் தட்டையும் கொண்டு வந்தார். அவர்கள் தமது வலது கையினால் பாத்திரத்தைப் பிடித்துக் கொண்டு தமது இடது கைக்கு தண்ணீர் ஊற்றி தமது இரு முன் கைகளையும் மூன்று முறை கழுவினார்கள். பிறகு தமது வலது கையை பாத்திரத்தில் நுழைத்து மூன்று தடவை வாய் கொப்பளித்தார்கள். மும்முறை நாசிக்கு நீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்தார்கள் என்று அறிவித்து விட்டு (மேற்கண்ட) அபூஅவானா ஹதீஸைப் போன்றே தொடர்ந்து அறிவிக்கிறார். பிறகு தலையின் முன் நெற்றியிலிருந்த தலையின் பின்புறம் வரை மஸஹ் செய்தார்கள். பின்னர் மேற்கண்ட ஹதீஸைப் போன்றே அறிவிக்கிறார்.

(குறிப்பு: நஸயீ, திர்மிதி, அஹ்மது ஆகியவற்றிலும் பதிவாகியுள்ளது.)

ஹதீஸ் எண்: 113

அலி (ரலி) அவர்களுக்கு ஒரு நாற்காலி கொண்டுவரப் பட்டு அதில் அவர்கள் அமர்ந்து இருந்தார்கள். பின்னர் தண்ணீர் கூசா ஒன்று கொண்டு வரப்பட்டது. தனது கைகளை மூன்று முறை கழுவினார்கள். பிறகு ஒரு கை நீராலேயே வாய் கொப்பளித்து நாசிக்கு நீர் செலுத்தி மூக்கையும் சுத்தம் செய்தார்கள் என்று அப்து கைர் அறிவித்து விட்டு மேற்கண்ட ஹதீஸையே அறிவிக்கிறார்.

(குறிப்பு: நஸயீயிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 114

மேற்கண்ட கருத்துள்ள ஹதீஸே இங்கும் இடம் பெற்று உள்ளது. அதில் அலீ (ரலி) அவர்கள் தமது தலைக்கு நீர் சொட்டு சொட்டாக வழியாத அளவுக்கு மஸஹ் செய்தார்கள் என்று அதிக விளக்கம் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் எண்: 115

அலி (ரலி) அவர்களை உலூச் செய்யக் கண்டேன். அவர்கள் உலூச் செய்யும் போது முகத்தை மூன்று முறை கழுவினார்கள். தலையை ஒரு முறை மஸஹ் செய்தார்கள். பின்னர் இப்படித்தான் ரஸுல் (ஸல்) அவர்கள் உலூச் செய்தார்கள் எனவும் அப்துர்ரஹ்மான் பின் அபூலைலா (ரலி) அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 116

நான் அலி (ரலி) அவர்களை உலூச் செய்யக் கண்டேன் என்று அபூஹய்யா அவர்கள் அறிவிக்கும் போது, அவர்கள் எல்லா உறுப்புக்களையும் மும்முறை கழுவி உலூச் செய்தார்கள் என்று குறிப்பிடுகிறார்கள். பின்னர் அவர்கள் தலையை மஸஹ் செய்தார்கள். பின்னர் தம் இருகால்களை கரண்டைக் கால் வரை கழுவினார்கள் பின்னர் நான் உங்களுக்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் உலூச் செய்யும் முறையை காண்பிக்க விரும்பினேன் என்றும் சொன்னார்கள்.

ஹதீஸ் எண்: 117

அலீ பின் அபூதாலிப் (ரலி) அவர்கள் என்னிடம் வந்து சிறுநீர் கழித்து விட்டு உலூச் செய்ய தண்ணீர் கொண்டு வரும் படிச் சொன்னார்கள். நாங்கள் தண்ணீர் நிரம்பிய பாத்திரத்தைக் கொண்டு வந்து அவர்கள் முன்னால் வைத்தோம். அப்போது அவர்கள், 'இப்னு அப்பாஸே! அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் எப்படி உலூச் செய்தார்கள் என்று உமக்கு நான் செய்து காண்பிக்கவா? என்று கேட்க, நான் ஆம் என்றேன். அப்போது அவர்கள் பாத்திரத்தை தனது கையில் சாய்த்து அதைக் கழுவினார்கள். பிறகு (கழுவிய) தமது வலது கையைப் பாத்திரத்;தில் விட்டு அதைக் கொண்டு மற்றொரு கையில் நீர் ஊற்றி பின் தமது இரு முன்னங்கைகளையும் கழுவினார்கள். பின்னர் வாய் கொப்பளித்து, மூக்கையும் சுத்தப்படுத்தினார்கள். பின் இரு கைகளையும் இணைத்து பாத்திரத்தில் செலுத்தி அவ்விரு கைகளினாலும் நீர் அள்ளி அதைத் தமது முகத்தில் அடித்து தனது இரு பெருவிரல்களையும்

தனது இரு காதுகளின் முற்பகுதியில் திணித்தார்கள். இது போன்று இரண்டாவது முறையும், பின்னர் மூன்றாவது முறையும் செய்தார்கள். பிறகு தனது வலது கையினால் ஒரு கையளவு தண்ணீர் எடுத்து தனது முகத்தில் வழியவிட்டார்கள். பிறகு தனது இரு முழங்கைகளையும் முட்டுக்கை உட்பட மும்முறை கழுவினார்கள். பிறகு தனது தலையையும் தம்மிரு காதுகளின் பின்புறத்தையும் மஸஹ் செய்தார்கள். பிறகு தன் இருகைகளையும் சேர்த்து பாத்திரத்தில் நுழைத்து இரு கையளவு நீரெடுத்து அதை செருப்புடன் கூடிய தமது காலில் அடித்து தண்ணீரில் (நனையும் படி அசைத்து) திருகி விட்டார்கள். இதைப் போன்றே மற்றொரு காலிலும் செய்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூற நான், செருப்புடன் இருக்கும் போதா? என்ற கேட்க, செருப்பு அணிந்திருக்கும் போது தான் என்று பதில் அளித்தார்கள். செருப்பு அணிந்திருக்கும் போது தானா? என்று நான் மீண்டும் கேட்க செருப்பு அணிந்திருக்கும் போது தான் என்றார்கள். செருப்பு அணிந்திருக்கும் போதா? என்று நான் மீண்டும் கேட்க செருப்பு அணிந்திருக்கும் போது தான் என்று கூறினார்கள் என உபைதுல்லாஹ் அல்கவ்லானி அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) கூறியதாக அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூது குறிப்பிடுகின்றார்கள்: அதாவது ஷைபா அவர்களிடமிருந்து இப்னு ஜுரைஜ் அவர்கள் அறிவிக்கின்ற (இந்த) ஹதீஸ் அலீ (ரலி) அவர்களின் ஹதீஸிற்கு ஒத்து இருக்கிறது. ஏனெனில் இப்னு ஜுரைஜ் அவர்களிடமிருந்து ஹஜ்ஜாஜ் பின் முஹம்மது அறிவிக்கின்ற ஹதீஸில் 'அகி (ரலி) அவர்கள் தமது தலைக்கு ஒரு தடவைதான் மஸஹ் செய்தார்கள் என்று அறிவிக்கின்றார். அதே இப்னு ஜுரைஜ் அவர்களிடம் இருந்து இப்னு வஹ்ப் அறிவிக்கின்ற போது 'தமது தலைக்கு மூன்று தடவை மஸஹ் செய்தார்கள்' என அறிவிக்கிறார்.

(குறிப்பு: இப்னு ஹிப்பானிலும், பஸ்ஸாரிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 118

யஹ்யா அல்மாஸினி அவர்கள் தன் தந்தை அப்துல்லாஹ் பின் ஸைது ஆஸிம் (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் எப்படி உலூ செய்தார்கள்? என்பதை எனக்கு செய்து காட்ட முடியுமா? என்று வினவினார்கள். அதற்கு அப்துல்லாஹ் பின் ஸைது (ரலி) அவர்கள் 'ஆம்' என்று பதிலளித்து விட்டு தண்ணீர் கொண்டு வரச் செய்து அதை தமது இருகைகளிலும் ஊற்றிக் கழுவினார்கள். பிறகு மூன்று முறை வாய் கொப்பளித்து மூன்று முறை முகத்தைக் கழுவினார்கள். பின்பு தனது இருகைகளையும் முட்டுக்கைகள் வரை இரண்டிரண்டு முறை கழுவினார்கள். பிறகு தனது இருகைகளாலும் தலையின் முன் பாகத்தில் துவங்கி பிடரி வரை கொண்டு சென்று ஆரம்பித்த இடத்திற்கே கைகளைத் திருப்பிக் கொண்டு வந்து மஸஹ் செய்தார்கள். பிறகு இருகால்களையும் கழுவினார்கள் என இப்னு யஹ்யா அறிவிக்கிறார்.

(குறிப்பு: இதே ஹதீஸ் நஸயீயிலும் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 119

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. அதில் ஒரு கையளவு தண்ணீரில் வாய் கொப்பளித்து, நாசிக்கு நீர் செலுத்தி மூக்கையும் சுத்தம் செய்ததாகவும் அதை மும்முறை செய்ததாகவும் கூறப்பட்டுள்ளது.

(குறிப்பு: 118, 119 ஆகிற இரண்டு ஹதீஸ்களும் புகாரி, முஸ்லிம், திர்மிதி, நஸயி, இப்னுமாஜா, தாரிமி ஆகிய நூல்களிலும் இடம் பெற்றுள்ளன.)

ஹதீஸ் எண்: 120

அப்துல்லாஹ் பின் ஸைது பின் ஆஸிம் அல்மாஸின் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை உலூச் செய்யக் கண்டதாக அறிவிக்கும் போது, நபி (ஸல்) அவர்கள், (கையில் உள்ள ஈரத்தைக் கொண்டு தலைக்கு மஸஹ் செய்யாமல்) புதிதாக தண்ணீர் எடுத்து தலைக்கு மஸஹ் செய்ததாகவும் தமது இருகால்களையும் (அவற்றிலுள்ள அழுக்கு போய்விடும் அளவு) நன்கு சுத்தமாவது வரை கழுவியதாகவும் குறிப்பிட்டுள்ளார்கள்.

அறிவிப்பவர்: வாஸிஃ.

(குறிப்பு: முஸ்லிம், தாரமி, திர்மிதி ஆகியோரும் இந்த ஹதீஸை பதிவு செய்து உள்ளனர்.)

ஹதீஸ் எண்: 121

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுக்கு உலூச் செய்யத் தண்ணீர் கொண்டு வரப்பட்டதும், அவர்கள் உலூச் செய்யத் துவங்கி தமது முன்னங்கைகளை மூன்று முறையும், தமது முகத்தை மூன்று முறையும், முழங்கைகளை மும்மூன்று முறைகளும் கழுவினார்கள். பின்பு மூன்று முறை வாய் கொப்பளித்து, நாசிக்கு தண்ணீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்தார்கள். பிறகு தலைக்கு மஸஹ் செய்து இரு காதுகளின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் மஸஹ் செய்தார்கள் என மிக்தாம் பின் மஃதீகரிப் அல்கின் திய்யீ (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: அஹ்மதிலும் இது இடம் பெற்றுள்ளது. இப்னுமாஜாவில் சுருக்கமாக இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 122

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்யக் கண்டேன். அவர்கள் தலைக்கு மஸஹ் செய்யும் கட்டத்தை அடைந்த போது தன் இரு முன்னங்கைகளையும் தமது முன்னந்தலையில் வைத்து அவற்றை பிடரி வரை கொண்டு சென்று பின்னர் ஆரம்பித்த இடத்திற்கே தம் கைகளைக் கொண்டு வந்தார்கள் என மிக்தாம் பின் மஃகீ (ரலி) அறிவிக்கிறார்கள்.

மஹ்மூது பின் காலித் அவர்கள் தமக்கு முந்தைய அறிவிப்பாளராக வலீத் பின் முஸ்லிமைக் கூறாமல் அதற்கடுத்த அறிவிப்பாளரான ஹரீஸ் தமக்கு அறிவித்ததாக குறிப்பிடுகிறார்.

(குறிப்பு: புகாரி, முஸ்லிம், நஸயீ, திர்மிதி, அஹ்மது, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 123

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. இதில் 'தனது இரு காதுகளின் வெளிப்புறத்தையும் உட்புறத்தையும் மஸஹு செய்தார்கள் என அறிவிப்பாளர் வலீது பின் முஸ்லிம் அறிவிக்கிறார். 'தமது விரல்களை காதுகளின் துவாரத்தில் செலுத்தினார்கள்' என்று ஹிஷாம் மேலதிகமாக அறிவிக்கின்றார்.

(குறிப்பு: இப்னுமாஜாவில் சுருக்கமாக இவ்விஷயம் பதிவாகி உள்ளது.)

ஹதீஸ் எண்: 124

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை உலூச் செய்யக் கண்டது போன்று முஆவியா (ரலி) அவர்கள் மக்களுக்கு உலூச் செய்து காட்டினார்கள். அப்போது அவர்கள் தலைக்கு மஸஹ் செய்யும் கட்டத்தை அடைந்ததும் ஒரு சிரங்கை அளவு தண்ணீரை இடது கையால் அள்ளி வழிந்தோடும் அளவுக்கு (அல்லது வழிந்தோடத் துவங்கும அளவுக்கு) நடுத்தலையில் விட்டு பின்னர் தமது தலையின் முன்புறத்திலிருந்து பின்புறம் வரையிலும் பின்புறத்திலிருந்து முன்புறம் வரைக்கும் மஸஹ் செய்தார்கள் என முகீரா பின் ஃபர்வா, யஸீத் பின் அபீமாலிக் (ரலி) ஆகியோர் அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 125

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. இதில் ஒவ்வொரு உறுப்பையும் மும்மூன்று முறை கழுவி உலூச் செய்தார்கள் எனவும், எண்ணிக்கையைக் குறிப்பிடாமல் இரு கால்களையும் கழுவினார்கள் எனவும் வலீது பின் முஸ்லிம் அறிவிக்கின்றார்கள்.

ஹதீஸ் எண்: 126

எங்களிடம் ரஸுல் (ஸல்) அவர்கள் அடிக்கடி வந்து செல்பவர்களாக இருந்தனர். அப்போது அவர்கள் உலூச் செய்வதற்காக எனக்கு தண்ணீர் ஊற்றுங்கள் எனக் கூறினார்கள். (ஊற்றத் துவங்கியதும்) இரண்டு முன்கைகளையும் மூன்று தடவையும், முகத்தை மூன்று தடவையும் கழுவினார்கள். ஒரு முறை வாய் கொப்பளித்து மூக்கிற்கும் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்தார்கள். இரு கைகளையும் மும்மூன்று முறை கழுவினார்கள். தலைக்கு இரண்டு தடவை மஸஹ் செய்தார்கள். அதாவது தமது தலையின் பின்புறம் துவங்கி முன்புறம் கொண்டு வந்தார்கள். பிறகு முன்புறம் துவங்கி பின்புறம் கொண்டு சென்றார்கள். (இதன் மூலம்) உட்புறம், வெளிப்புறம் அனைத்திலும் மஸஹ் செய்தார்கள். பிறகு இரண்டு கால்களையும் மும்மூன்று முறை கழுவினார்கள் என ருபைய்யி பின்த் முஅவ்வித் (ரலி) அறிவிக்கிறார்கள்.

இமாம் அபூதாவூத் அவர்கள் இது முஸத்தத் அவர்கள் அறிவிக்கும் ஹதீஸின் கருத்து எனக் கூறியுள்ளார்கள்.

(குறிப்பு: திர்மிதி, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடரில் அப்துல்லாஹ் பின் முஹம்மத் பின் உகைல் என்பவர் இடம் பெற்றுள்ளார். அவரைப்பற்றி ஹதீஸ் கலை வல்லுனர்கள் குறை கூறியுள்ளனர்.)

ஹதீஸ் எண்: 127

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. எனினும் இதில் மூன்று முறை வாய் கொப்பளித்து மூக்கை சுத்தம் செய்ததாகக் காணப்படுகிறது.

(குறிப்பு: இத்தொடரிலும் குறை கூறப்பட்ட அப்துல்லாஹ் பின் முஹம்மத் பின் உகைல் இடம் பெறுகிறார்.)

ஹதீஸ் எண்: 128

என்னிடம் வந்திருந்த போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்தார்கள். அப்போது தலையின் மேல் பாகம் முதல் கீழ்ப்பாகம் வரை தலை முழுவதையும் மஸஹ் செய்தார்கள். தலைமுடி அதன் அமைப்பை விட்டும் கலைந்து விடாத முறையில் மஸஹ் செய்தார்கள் என்று முஅவ்வித் பின் அஃப்ராஃ (ரலி) அவர்களின் மகளார் ருபைய்யி (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இதிலும் மேற்கூறப்பட்ட அப்துல்லாஹ் பின் உகைல் இடம் பெறுகிறார்.)

ஹதீஸ் எண்: 129

'நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை உலூச் செய்யக் கண்டேன். அவர்கள் தமது தலைக்கு மஸஹ் செய்யும் போது முற்பகுதியிலும், பிற்பகுதியிலும், தமது நெற்றிப்பொட்டு, காதுகளிலும் ஒரு தடவையே மஸஹ் செய்தார்கள் என ருபைய்யி பின்த் முஅவ்வித் (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: திர்மிதியிலும் இது இடம் பெற்றுள்ளது. இதிலும் குறை கூறப்பட்ட அப்துல்லாஹ் பின் முஹம்மத் உகைல் இடம் பெறுகிறார்.)

ஹதீஸ் எண்: 130

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் (கைகளை முழங்கை உட்பட கழுவிய பின்னர்) கையில் எஞ்சியிருந்த தண்ணீரினால் தமது தலைக்கு மஸஹ் செய்தார்கள் என ருபைய்யி பின்த் முஅவ்வித் (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: திர்மிதீ, தாரகுத்னீ ஆகிய நூல்களிலும் இது போன்ற கருத்துள்ள ஹதீஸ்கள் இடம் பெற்றுள்ளன. இதிலும் குறை கூறப்பட்ட அப்துல்லாஹ் பின் முகம்மத் பின் உகைல் இடம் பெறுகிறார்.)

ஹதீஸ் எண்: 131

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உலூச் செய்யும் போது தனது இரு விரல்களையும் தம் இரு காதுகளின் துவாரங்களில் செலுத்தினார்கள் என ருபையி பின்த் முஅவ்வித் (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இப்னுமாஜாவிலும் இது இடம் பெற்றுள்ளது. இதிலும் மேற்கண்ட அப்துல்லாஹ் பின் முஹம்மத் உகைல் இடம் பெற்றுள்ளார்.)

ஹதீஸ் எண்: 132

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (உலூவில்) மஸஹ் செய்யும் போது கைகள் பிடரியின் ஆரம்பப் பகுதியை அடையும் வரை ஒரு தடவை

தலைக்கு மஸஹ் செய்யக் கண்டேன் என தல்ஹா பின் முஸர்ரிஃப் அவர்கள் தமது பாட்டனாரிடமிருந்து தமது தந்தை கூறியதாக அறிவிக்கிறார்.

இந்த ஹதீஸை முஸத்தத் அவர்கள் அறிவிக்கும் போது 'அவர்கள் தன் தலைக்கு அதன் முற்பகுதியிலிருந்து பிற்பகுதி வரை மஸஹ் செய்து முடித்து இறுதியில் தன் கைகளை இரு காதுகளின் கீழ்புறமாக வெளிக்கொணர்ந்தனர்' என அறிவிக்கிறார்கள்.

இந்த ஹதீஸை நான் யஹ்யா பின் ஸயீது அல்கத்தான் அவர்களிடம் எடுத்துரைத்த போது இதை அவர்கள் நிராகரிக்கத்தக்கது (முன்கரான ஹதீஸ்) என்று கூறிவிட்டார்கள் எனவும் முஸத்தத் தெரிவிக்கிறார்.

இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்: இமாம் சுஃப்யான் பின் உயைனா அவர்கள் இதை நிராகரிக்கத் தக்கது என்று கூறியதாக ஹதீஸ்களை வல்லுனர்கள் கருதுகிறார்கள் என்றும் தல்ஹா அவர்கள் தமது தந்தை வாயிலாக பாட்டனார் மூலம் அறிவிக்கின்ற இத்தொடரை இது ஒரு அறிவிப்புத் தொடரே இல்லை என்று விமர்சிப்பதாகவும் இமாம் அஹ்மது பின் ஹன்பல் கூறக் கேட்டேன்.

(குறிப்பு: இது அஹ்மது என்ற நூலிலும் இடம் பெற்றுள்ளது. தல்ஹா அவர்களின் தந்தை முஸர்ரிஃப் அவர்கள் ஹதீஸ் கலையில் யாரென்றே அறியப்படாதவர். மேலும் இத்தொடரில் இடம் பெறும் லைஸ்பின் அபீஸலீம் பலவீனமானவர். இப்னு ஹிப்பான் அவர்கள் இவரைப்பற்றிக் குறிப்பிடும் போது இவர் அறிவிப்பாளர் தொடரைக் குழப்பி நபி (ஸல்) அவர்கள் கூறாதவற்றை அவர்கள் கூறியதாகச் சொல்லி நல்ல அறிவிப்பாளர் பெயரைப் பயன்படுத்தி அவர்கள் கூறாததைக் கூறிவிடுவார் எனக் குறிப்பிடுகிறார்கள். பிடரியை மஸஹ் செய்வதற்கு ஆதாரம் அறவே இல்லை என இதன் மூலம் அறியலாம்.)

ஹதீஸ் எண்: 133

உலூச் செய்யும் போது நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு உறுப்பையும் மும்மூன்று முறை கழுவி தலைக்கும் இருகாதுகளுக்கும் ஒரே தடவை மஸஹ் செய்யக் கண்டதாக இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கின்றார்கள்.

(குறிப்பு: அஹ்மது என்ற நூலிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 134

அபூஉமாமா (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உலூவின் முறையை விவரிக்கும் போது 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் இருகண்களின் குழிகளையும் தேய்த்துக் கழுவுவார்கள்' என்று கூறிவிட்டு, 'இருகாதுகளும் தலையின் ஒரு பகுதி தான்' என்றும் கூறினார்கள் என அபூஉமாமா (ரலி) அறிவிக்கிறார்கள்.

(இருகாதுகளும் தலையின் ஒரு பகுதியே என்ற) இந்த கருத்தை அபூஉமாமா (ரலி) அவர்கள் தான் கூறுகிறார்கள் என சுலைமான் பின் ஹர்ப் அறிவிக்கிறார்.

'இரு காதுகளும் தலையின் ஒரு பகுதியே' என்ற சொல் நபி (ஸல்) அவர்கள் கூறியதா? அல்லது அபூஉமாமா (ரலி) கூறியதா? என்ற விபரத்தை நான் அறியேன் என்று (இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான) ஹம்மாத் குறிப்பிடுவதாக குதைபா தெரிவிக்கின்றார்.
(குறிப்பு: திர்மிதி, இப்னுமாஜாவிலும் இது இடம் பெற்றுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடர் அவ்வளவு சரியானதல்ல என இமாம் திர்மிதி குறிப்பிடுகிறார்கள்.)

**பாடம்: 51 உலூச் செய்யும் போது உறுப்புக்களை மும்மூன்று முறை கழுவுதல்.**

ஹதீஸ் எண்: 135

நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, 'அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! உலூச் செய்வது எவ்வாறு? என்று கேட்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் ஒரு பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வரச் சொல்லி தமது இரு முன் கைகளையும் மூன்று முறை கழுவினார்கள். பிறகு தமது முகத்தை மூன்று முறையும், தமது கைகளை முட்டுக்கை வரை மூன்று முறையும் கழுவினார்கள். பிறகு தனது தலைக்கு மஸஹ் செய்துவிட்டு தனது இரு ஆட்காட்டி விரல்களையும் இரு காதுகளுக்குள் செலுத்தி இருகாதுகளின் வெளிப்பாகத்தை தனது இரு பெருவிரல்களாலும் உட்பாகத்தை ஆட்காட்டி விரல்களாலும் மஸஹ் செய்தார்கள். பிறகு தனது இருகால்களையும் மும்மூன்று முறை கழுவினார்கள். பின்னர் உலூச் செய்யும் விதம் இவ்வாறு தான். யார் இதைவிடக் கூடுதலாகச் செய்கிறாரோ அல்லது இதைவிடக் குறைத்து விட்டாரோ அவரும் தீங்கு இழைத்து விட்டார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அம்ருபின் ஷுஐப் (ரலி) தனது தந்தை மூலமாகப் பாட்டனார் கூறியதாக அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: நஸயீ, இப்னுமாஜா, அஹ்மத், இப்னு குஸைமா அகியோரும் பதிவு செய்துள்ளனர்.)

பாடம்: 52 உலூச் செய்யும் போது உறுப்புக்களை இரண்டிரண்டு முறை கழுவி உலூச் செய்தல்.

ஹதீஸ் எண்: 136

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உலூச் செய்யும் போது ஒவ்வொரு உறுப்புகளையும் இரண்டிரண்டு முறை கழுவி உலூச் செய்தார்கள் என அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: புகாரி, அஹ்மத், திர்மிதி ஆகிய நூல்களில் இது இடம் பெற்றுள்ளது. இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் அப்துல்லாஹ் பின் அல்பழ்ல் அல்ஹாஷிமி விமர்சனத்திற்கு உரியவர்.)

ஹதீஸ் எண்: 137

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் எப்படி உலூச் செய்தார்கள் என்பதை உங்களுக்கு நான் செயல் முறையில் காட்ட விரும்புகின்றீர்களா? என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கேட்டு விட்டு, ஒரு பாத்திரத்தில்

தண்ணீர் கொண்டு வரச் சொன்னார்கள். தமது வலக்கரத்தினால் ஒரு சிரங்கையளவு நீரள்ளி வாய் கொப்பளித்து நாசிக்கும் நீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்தார்கள். பிறகு இன்னொரு கையளவு நீர் அள்ளி, இரண்டு கைகளையும் ஒன்றாகச் சேர்த்து தனது முகத்தைக் கழுவினார்கள். பிறகு இன்னொரு கையளவு நீர் அள்ளி தனது இடது கையைக் கழுவினார்கள். பிறகு ஒரு கைப்பிடி அளவு நீர் அள்ளி அந்தக் கையை உதறிவிட்டு பின்னர் தலைக்கும் காதுக்கும் மஸஹ் செய்தார்கள். பிறகு ஒரு கைப்பிடி அளவு தண்ணீர் எடுத்து செருப்பணிந்திருந்த தனது வலது காலில் தெளித்து ஒரு கையை கால்பாதத்திற்கு மேலும் மற்றொரு கையை செருப்பிற்கு கீழுமாக ஆக்கி இரு கைகளினால் மஸஹ் செய்தார்கள். (தடவினார்கள்) பிறகு இது போன்று இடது காலிலும் செய்தார்கள் என அதா.ஃ பின் யஸார் (ரலி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: புகாரி, திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 53 உறுப்புக்களை ஒரு தடவை மட்டும் கழுவி உலூச் செய்தல்.**

ஹதீஸ் எண்: 138

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் உலூச் செய்யும் முறையை உங்களுக்குத் தெரிவிக்கவா? என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கேட்டுவிட்டு ஒவ்வொரு உறுப்பையும் ஒரு தடவை மட்டும் கழுவி உலூச் செய்தார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) கூறியதாக அதா.ஃ பின் யஸார் (ரலி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: புகாரி, அஹ்மது, நஸயீ, இப்னுமாஜா, திர்மிதி ஆகியவற்றிலும் இடம் பெற்றுள்ளது.)

**பாடம்: 54 வாய் கொப்பளிப்பதையும் மூக்கை சுத்தம் செய்வதையும் தனித்தனியாகச் செய்தல்.**

ஹதீஸ் எண்: 139

நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது உலூச் செய்து கொண்டிருந்த அவர்களின் முகம் மற்றும் தாடியிலிருந்து தண்ணீர் மார்பில் வழிந்தோடக் கண்டேன். அவர்கள் வாய் கொப்பளிப்பதற்கும் நாசிக்கும் தண்ணீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்யவும் தனித்தனியாகத் தண்ணீர் எடுக்கக் கண்டேன் என தல்ஹா (ரலி) அவர்கள் தமது தந்தை கூறியதாக பாட்டனாரிடமிருந்து அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: இது பலவீனமான ஹதீஸ். அறிவிப்பாளர் தல்ஹா (ரலி) அவர்களின் தந்தை முஸர்ரி.ஃப் அவர்கள் ஹதீஸ்கலையில் யாரென்றே அறியப்படாதவர். மேலும் இதன் அறிவிப்பாளர் தொடரில் இடம் பெறும் லைஸ் பின் அபீஸலீம் பலவீனமானவர். ஹதீஸ் என் 132 ன் குறிப்பு பார்க்க.)

பாடம்: 55 நாசிக்கு தண்ணீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்தல்.

ஹதீஸ் எண்: 140

'உங்களில் ஒருவர் உலூச் செய்யும் போது அவர் தனது நாசிக்கு தண்ணீர் செலுத்தி மூக்கைச் சிந்தி சுத்தம் செய்யவும்' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 141

'நீங்கள் (உலூச் செய்யும் போது) இரண்டு முறையோ அல்லது மூன்று முறைகளோ தண்ணீரை நாசிக்குள் நன்கு செலுத்தி மூக்கை சிந்தி சுத்தம் செய்யுங்கள்' என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இப்னுமாஜா, அஹ்மத், ஹாகிம் ஆகிய நூல்களிலும் இது இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 142

பனூ முன்த.ஃபிக் கூட்டத்தினரின் சார்பில் தூதராக அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் நான் வந்திருந்தேன். (அல்லது அத்தூதுக்குழுவில் ஒருவனாக இருந்தேன்.) நாங்கள் வந்த போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை அவர்களது இல்லத்தில் காண வில்லை. ஆனால் ஆயிஷா (ரலி) அவர்களைக் கண்டோம். அவர்கள் எங்களுக்கு கஸீரா என்ற உணவைத் தயாரிக்க உத்தரவிட்டார்கள். அது தயாரிக்கப்பட்டு விட்டது. பின்னர் எங்களுக்கு பேரீத்தம் பழங்கள் அடங்கிய தட்டு கொண்டு வரப்பட்டது.

பின்னர் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் வந்து 'நீங்கள் ஏதாவது சாப்பிட்டீர்களா?' என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள் 'ஆம் அல்லாஹ்வின் தூதர் அவர்களே!' என்று பதில் அளித்தோம். நாங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் அமர்;ந்திருக்கும் போது அவர்களின் ஆடு மேய்ப்பாளர் நபி (ஸல்) அவர்களுக்குச் சொந்தமான ஆடுகளை கொட்டடிக்கு ஓட்டிச் சென்றார். அவரிடம் அப்போது தான் பிறந்த ஆட்டுக் குட்டியும் சப்தமிட்டுக் கொண்டிருந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவரிடம் 'என்னப்பா! நமது ஆடு என்ன குட்டி ஈன்று உள்ளது?' என்று கேட்டார்கள். அதற்கு அவர் 'பெண் ஆட்டுக்குட்டி' என்றார். (நமக்கு ஒரு குட்டி கிடைத்து விட்ட காரணத்தால்) அதற்கு பதிலாக நமது ஆடுகளில் ஒன்றை அறுப்பீராக! என்று சொன்னார்கள். பிறகு (விருந்தினர்களை நோக்கி நபி (ஸல்) அவர்கள்) உங்களுக்காக நாங்கள் (சிரமேற் கொண்டு) அதை அறுக்;கின்றோம் என்று நீர் எண்ணிவிடாதீர்! எங்களிடம் நூறு ஆறுகள் இருக்கின்றன. அதை விட ஒன்று அதிகமாவதை நாங்கள் விரும்புவதில்லை. எங்களின் ஆடு, ஒரு பெண்குட்டியை ஈன்று விட்டால் அதற்குப் பகரமாக நாங்கள் ஒரு ஆட்டை அறுப்போம் என்று சொன்னார்கள். அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! எனது மனைவிக்கு நாக்கு கொஞ்;சம் நீளம் - அதாவது தீயவார்த்தைகளைப் பேசும் வாயாடி என்று நான் சொன்னதும் 'நீ அவளை விவாகரத்து செய்துவிடு!' என்றார்கள்.

அதற்கு நான் 'அல்;லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களே அவள் மூலம் எனக்கு ஒரு குழந்தை இருப்பதோடு, அவளிடம் நான் பாசமுடனும் இருக்கின்றேன்' என்று கூறியதும், 'நீ அவளுக்கு அறிவுரை கூறு! அவளிடம் நல்லெண்ணம் இருப்பின் அவள் நல்லவிதமாக நடந்து கொள்வாள். நீ உனது அடிமைப் பெண்ணை அடிப்பது போல உனது மனைவியை அடிக்காதே! என்று கூறினார்கள். அடுத்து, அல்;லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களே! எனக்கு உலூச் செய்யும் தெரிவித்துக் கொடுங்கள்' என்றேன். அதற்கு அவர்கள் உலூவை பூரணமாகச் செய். உலூச் செய்யும் போது உனது கைவிரல்களுக்கிடையே கோதிக்கழுவு. நீ நோன்பாளியாக இருந்தாலே தவிர நாசிக்கு நன்கு தண்ணீர் செலுத்தி மூக்கை சுத்தம் செய்! என்று கூறினார்கள் என லகீத் பின் ஸபிரா (ரலி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: திர்மிதி, அஹ்மத், நஸயீ, ஹாகிம், இப்னுமாஜா, பைஹகீ, இப்னுகுஸைமா, இப்னு ஹிப்பான் ஆகியவற்றிலும்; இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 143

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. அதில் 'நாங்கள் சென்று அமர்ந்திருக்க மாட்டோம்' அதற்குள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வேகமாக அடியெடுத்து வைத்து இருபக்கமாகவும் சாய்ந்து சாய்ந்து நடந்து வந்து விட்டார்கள் என்றும், கஸீரா என்ற உணவு தயாரிக்கப்பட்டது என்ற இடத்தில் 'அஸீதா' என்ற உணவு தயாரிக்கப்பட்டது எனவும் கூறப்பட்டுள்ளது.
(குறிப்பு: இறைச்சி, மாவு, தண்ணீர் கலந்து தயாரிக்கப்படும் உணவு கஸீரா எனப்படும். இறைச்சி இல்லாமல் மாவு, தண்ணீரால் தயாரிக்கப்படும் உணவு அஸீதா எனப்படும்.)

ஹதீஸ் எண்: 144

மேற்கண்ட ஹதீஸே இங்கும் இடம் பெற்றுள்ளது. அதில் நீ உலூச் செய்யும் போது வாய் கொப்பளி என்பது மேலதிகமாக வந்துள்ளது.

**பாடம்: 56 தாடியைக் கோதி விடுதல்.**

ஹதீஸ் எண்: 145

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்யும் போது ஒரு கையளவு தண்ணீர் எடுத்து தமது முகவாய்க் கட்டைக்குக் கீழே அதைச் செலுத்தி தமது தாடியைக் கோதி விடுவார்கள். மேலும் 'எனது இறைவன் எனக்கு இவ்வாறு தான் கட்டளையிட்டுள்ளான்' எனவும் கூறினார்கள் என்று அனஸ் பின் மாலிக் (ரலி) அறிவிக்கிறார்கள்.
(குறிப்பு: திர்மிதி, இப்னுமாஜா, இப்னு குஸைமா, ஹாகிம், தாரகுத்னீ, இப்னு ஹிப்பான் போன்ற நூல்களிலும் தாடியைக் கோதிக் கழுவுவது பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது. எனினும் இவற்றில் எந்த ஹதீஸுமே ஆதாரமாகக் கொள்ளத்தக்கதல்ல. இமாம் புகாரி அவர்கள் திர்மிதியில் இடம் பெறும் 31 வது ஹதீஸை ஏற்றுக் கொள்ளத்தக்க (ஹஸன்) ஹதீஸ் எனக் குறிப்பிடுகிறார்கள்.

மேற்கண்ட ஹதீஸில் இடம் பெறும் அல்வலீத் பின் ஸவ்ரான் யாரென்றே அறியப்படாதவர்.)

**பாடம்: 57 தலைப் பாகையில் மஸஹ் செய்தல்.**

ஹதீஸ் எண்: 146

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு சிறு படையை அனுப்பினார்கள். (அவர்கள் சென்ற இடத்தில்) அவர்களைக் கடும் குளிர் தாக்கியது. அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்த(தும் முறையிட்டனர். அப்)போது அவர்களது தலைப்பாகைகளிலும் காலுறைகளிலும் கஸஹ் செய்து கொள்ள அனுமதித்தார்கள் என சவ்பான் (ரலி) அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: இதன் அறிவிப்பாளர் தொடரில் சவ்பான் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் ராஷித் பின் ஸஃது அவர்கள் சவ்பான் (ரலி) அவர்களுக்கு முன்னரே மரணித்து விட்டார். எனவே அவர்களிடம் கேட்டிருக்க முடியாது என இமாம் அஹ்மது குறிப்பிடுகிறார்கள். எனினும் இதே கருத்தில் முஸ்லிம், நஸயீ, திர்மிதி, அஹ்மத், ஹாகிம், தாரகுத்னியில் இடம் பெற்றுள்ளது. எனவே இது ஏற்றுக் கொள்ளத் தக்க ஹதீஸ் ஆகிவிடுகிறது.)

ஹதீஸ் எண்: 147

வண்ணக் கோடுகள் போடப்பட்ட தலைப்பாகை அணிந்து கொண்டு ரஸூல் (ஸல்) அவர்கள் உலூச் செய்யக் கண்டேன்.

(குறிப்பு: அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கும் அபூமஃகல் அவர்கள் ஹதீஸ் கலையில் யாரென்றே அறியப்படாதவர்.)

**பாடம்: 58 கால்களைக் கழுவும் முறை**

ஹதீஸ் எண்: 148

'நபி (ஸல்) அவர்கள் உலூச் செய்யும் போது தனது கால்விரல்களை தனது சுண்டு விரலால் தேய்ப்பதை நான் கண்டேன்' என்று முஸ்தவ்ரித் பின் ஷத்தாத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

(குறிப்பு: திர்மிதி, இப்னுமாஜாவிலும் இடம் பெற்றுள்ளது. இதில் இப்னு லஹ்யஆ என்ற பலவீனமான நபர் இடம் பெற்று உள்ளார்.)

பாடம்: 59 காலுறைகள் மீது மஸஹ் செய்தல்.

ஹதீஸ் எண்: 149

தபூக் யுத்தத்தின் போது, அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் நானும் பயணத்தில் இருந்தேன். பஜ்ரு தொழுகைக்கு முன்பு நபி (ஸல்) அவர்கள் (முக்கிய பாதையை விட்டும்) வேறு பாதையில் திரும்பினார்கள். நானும் அவர்களுடன் திரும்பிச் சென்றேன். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தமது ஒட்டகத்தைப் படுக்க வைத்துவிட்டு (தனது மலஜலத்) தேவைகளை நிறைவேற்ற தனித்து சென்றார்கள். அவர்கள் திரும்பி வந்ததும் தோல்பையிலிருந்து அவர்களது கையில் நான் தண்ணீர் ஊற்றினேன். அவர்கள்

தமது இரு முன்கைகளையும் வெளியே கொண்டு வர முற்பட்டார்கள். அவர்கள் அணிந்திருந்த குளிர் ஆடையின் கைகள் இறுக்கமாக இருந்ததால் அவற்றை சுருட்ட சிரமப் பட்டார்கள்.

(வெளியே கொண்டு வர முடியவில்லை) இரு கைகளையும் சட்டையின் உட்புறமாக வெளியே கொண்டு வந்து (சட்டைக் கைகளை தோள்புஜங்கள் மேல் போட்டுக் கொண்டு) இரு கைகளை முழங்கை வரை கழுவினார்கள். தலைக்கு மஸஹ் செ;யதார்கள். பிறகு தமது இரு காலுறைகளின் மீது மஸஹ் செய்தார்கள். பின்னர் பயணமானார்கள். நாங்கள் (நபித் தோழர்கள் இருந்த இடத்திற்கு) வந்த போது மக்கள் அப்துர்ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களைப் பின் பற்றித் தொழுது கொண்டிருக்கக் கண்டேன். அவர் உரிய நேரத்தில் அவர்களுக்கு தொழுகை நடத்திக் கொண்டிருந்தார். நாங்கள் அப்துர்ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களை பஜ்ரு தொழுகையில் ஒரு ரக்அத்தை முடித்து விட்ட நிலையில் அடைந்தோம். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் அபதுர்ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) அவர்களைப் பின் பற்றி முஸ்லிம்களுடன் அணியில் நின்று இரண்டாவது ரக்அத்தை தொழுதார்கள். அப்துர்ரஹ்மான் பின் அவ்ஃப் (ரலி) ஸலாம் கூறியதும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் (வடுபட்டதை தொழ) எழுந்து நின்றார்கள். இதை முஸ்லிம்கள் (இது வரை கண்டிராததால்) உடனே திடுக்குற்று தஸ்பீஹை அதிகமாக்கினார்கள். (ஸுப்ஹானல்லாஹ் ஸுப்ஹானல்லாஹ் எனக் கூறினார்கள்) ஏனெனில் அவர்கள் நபி (ஸல்) அவர்களை விட முந்தித் தொழுது விட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஸலாம் கூறியதும் அவர்களை நோக்கி நீங்கள் முறையாகச் செய்தீர்கள் என்றோ அல்லது நல்லதைச் செய்தீர்கள் என்றோ கூறினார்கள் என்று முகீரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 150

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்தார்கள். (அவ்வாறு உலூச் செய்யும் போது) தமது தலையின் முன்பாகத்தில் மஸஹ் செய்தார்கள். பிறகு தலைப்பாகையின் மேல் மஸஹ் செய்தார்கள் என்று முகீரா (ரலி) கூறியதாக யஸயா பின் ஸயீத் அறிவிக்கின்றார்.

இதையே முஃதமர் என்பார் அறிவிக்கும் போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் இரு காலுறைகள் மீதும் தம் தலையின் முன்பாகத்திலும் தலைப்பாகையின் மீதும் மஸஹ் செய்தார்கள் என்று அறிவிக்கின்றார். (குறிப்பு: இந்த ஹதீஸ் முஸ்லிமிலும் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 152

'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (தபூக் யுத்த பயணத்தின் போது) பின் தங்கி விட்டார்கள்' என்று முகீரா (ரலி) அவர்கள் இந்த சம்பவத்தை கூறி தொடர்ந்து பின்வருமாறு அறிவிக்கின்றார்கள். நாங்கள் மக்களிடம் வரும்போது அப்துற்ரஹ்மான் பின் அவ்ப் (ரலி) அவர்கள் மக்களுக்கு சுப்ஹ் தொழுகை நடத்திக் கொண்டிருந்தார்கள். அவர் நபி (ஸல்) அவர்களை கண்டதும்

(அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தொழுகையை நடத்துவதற்காக) அவர் பின்னால் வர விரும்பினார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவரை நோக்கி அவர் (தொழுகையை) தொடரும்படி சைகை செய்தார்கள். நானும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் அவருக்குப் பின்னால் ஒரு ரக்அத்தை தொழுதோம் அவர் ஸலாம் கொடுத்ததும் நபி (ஸல்) அவர்கள் எழுந்து நின்று விடுபட்ட ரக்அத்தை தொழுதார்கள். அவர்கள் அதைவிட வேறு எதையும் அதிகமாகச் செய்ய வில்லை.
இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்:
(ஜமாஅத்) 'தொழுகையில் ஒரு ரக்அத்தை அடைபவர் சஜ்தா சஹ்வு செய்ய வேண்டும்' என்று அபூசயீத் அல்குத்ரீ இப்னு உவர் ஆகியோர் தெரிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 153

அபூ அப்துற்றஹ்மான் அஸ்ஸலமீ என்பார் அப்துர்ரஹ்மான் பின் அவ்ப் (ரலி) அவர்கள் முன்னிலையில் இருந்தனர். அப்போது அப்துர்ரஹ்மான் பின் அவ்ப் (ரலி) அவர்கள் பிலால் (ரலி) அவர்களிடம் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் உலூவின் முறையைக் கேட்டனர். அதற்கு பிலால் (ரலி) அவர்கள், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் 'தனது தேவையை நிறைவேற்ற செல்வார்கள். நான் அவர்களுக்கு தண்ணீர் கொண்டு செல்வேன். அவர்கள் உலூச் செய்வார்கள். தனது தலைப்பாகையின் மீதும் காலுறைகள் மீதும் மஸஹ் செய்து கொள்வார்கள்' என்று பதிலளித்தனர் என்று அபூஅப்துல்லாஹ் அறிவிக்கின்றார் என இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

அபூஅப்துர்ரஹ்மான் அஸ்ஸலமீ அவர்களிடமிருந்து அறிவிக்கும் அறிவிப்பாளர் தைம் பின் முர்ரா கிளையாரின் அடிமையான அபூஅப்துல்லாஹ் என்பவராவார்.

ஹதீஸ் எண்: 154

ஜரீர் (ரலி) அவர்கள் சிறுநீர் கழித்தார்கள். பின்னர் உலூச் செய்து தனது காலுறைகளுக்கு மஸஹ் செய்தனர். பிறகு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை நான் மஸஹ் செய்யக் கண்டிருக்கும் போது (அவ்வாறு) நான் மஸஹ் செய்வதை எது தடுத்திட முடியும்? என்று கூறினார். (உடனே) தோழர்கள் கால்களை கழுவிக் கொள்ளுங்கள் என்ற வசனம் உள்ளடங்கிய மாயிதா என்ற அத்தியாயம் இறங்குவதற்கு முன்பு தானே (அனுமதிக்கப்பட்டது?) என்று வினவியதும் அவர் நான் மாயிதா என்ற வசனம் இறங்கிய பின்பே தவிர இஸ்லாமாக வில்லை என்று பதிலளித்தனர்.
அறிவிப்பவர்: அபூசுர்ஆ அவர்கள்.

ஹதீஸ் எண்: 155

நஜ்ஜாஷி (மன்னர்) அவர்கள் இரண்டு சாதாரண கருப்பு நிற காலுறைகளை அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்புச் செய்தார். அவ்விரண்டையும் அவர்கள் அணிந்து கொண்டார்கள். பின்னர், உலூச் செய்து கால்களை கழுவுவதற்கு பதில் அவ்விரண்டின் மீது மஸஹ் செய்தார்கள்.

அறிவிப்பவர்: புரைதா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 156

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலுறைகளுக்கு மஸஹ் செய்தார்கள். அப்போது நான் அவர்களிடம் அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! நீங்கள் (கால்களை கழுவ) மறந்து விட்டீர்களா? என்று வினவியதற்கு நீர் தான் மறந்து விட்டீர். இ(வ்வாறு மஸஹ் செய்வ)தையே இறைவன் கட்டளையிட்டுள்ளான் என்று அவர்கள் பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: முகீராபின் ஷுஃபா (ரலி) அவர்கள்.

பாடம்: 60 காலுறைகளை மஸஹ் செய்யும் கால வரம்பு.

ஹதீஸ் எண்: 157

காலுறைகளை மஸஹ் செய்யும் காலம் பயணிக்கு மூன்று நாட்களாகும். உள்ளூர்வாசிக்கு ஒரு பகலும் ஒரு இரவுமாகும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: குஜைமா பின் சாபித் (ரலி) அவர்கள்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

தனது இஸ்நாத் மூலம் (இதை) இப்றாகீம் அத்தைமீ என்பாரிடமிருந்து மனசூர் பின் அல்முஃதமர் அறிவிக்கும் போது இந்த காலவரையை நீங்கள் நீட்டிக் கேட்டிருந்தால் நபி (ஸல்) அவர்கள் நீட்டித்தந்திருப்பார்கள் என்று அறிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 158

உபைப் பின் இமாரா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! நான் இருகாலுறைகளின் மீதும் மஸஹ் செய்யலாமா? என்று வினவியதும் அவர்கள் 'ஆம்' என்றனர். ஒரு நாள் (முழுவதும் செய்யலாமா?) என்று அவர் வினவியதும் அண்ணலார் அவர்கள் ஒருநாள் (முழுதும் செய்யலாம்) என்றனர். இரு நாட்கள் (வரை செய்யலாமா?) என்று அவர் வினவ அண்ணலார் அவர்கள் இருநாடகள்! (வரை) என்று பதிலளித்தார்கள். மூன்று நாட்கள் (வரை செய்யலாமா?) என்று அவர் வினவ அண்ணலார் அவர்கள் 'ஆம்' நீர் விரும்பிய நாட்கள் வரை என்று பதிலளித்தார்கள்.

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் இரு கிப்லாக்களை (பைத்துல் மக்தஸ், கஃபா) முன்னோக்கித் தொழுதவர் என்று உபை பின் இமாரா (ரலி) அவர்களைப் பற்றி இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யஹ்யா பின் அய்யூப் என்பார் குறிப்பிடுகின்றார்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

இப்னு அபூமர்யம் என்பார் அறிவிக்கும் தனது ஹதீஸில் (நாட்களை நீட்டிக் கொண்டிருந்த) உபைய் பின் இமாரா (ரலி) அவர்கள் ஏழு என்று எண்ணிக்கையை அடைந்த போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் 'ஆம், உமக்கு தோன்றிய நாட்கள் (வரை) என்று பதிலளித்தார்கள்' என்று அறிவிக்கிறார்.

இமாம் அபூதாவூத் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

மேலுள்ள முதல் அறிவிப்பாளரான யஹ்யா பின் அய்யூப் என்பாரின் 'இஸ்னாதில்' கருத்து வேற்றுமை காணப்படுவதோடு இவர் ஹதீஸில் வல்லுனராக இல்லை.

பாடம்: 61 ஜவ்ரபின் மீது மஸஹ் செய்தல்.

(ஜவ்ரப் என்பது காலுறைகளுக்கு மேல் அணியக் கூடிய கரண்டைக்கு மேல் உயரமான பெரிய காலணியாகும்.)

ஹதீஸ் எண்: 159

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்தார்கள். அவர்கள் (சில சமயங்களில்) ஜவ்ரபின் மீதும், (சில சமயங்களில்) செருப்புகள் மீதும் மஸஹ் செய்தார்கள்.

அறிவிப்பவர்: முகீரா பின் ஷுஃபா (ரலி) அவர்கள்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

அப்துர்ரஹ்மான் பின் மஹ்தியா அவர்கள் இந்த ஹதீஸை அறிவிப்பதில்லை. காரணம் முகீரா (ரலி) அவர்களிடம் இருந்து அறிவிக்கப்படும் தெளிவான ஹதீஸ் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலுறை மீது மஸஹ் செய்தார்கள் என்பது தான்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஜவ்ரபின் மீது மஸஹ் செய்தார்கள் என்று மீண்டும் இந்த ஹதீஸை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூமூஸா அல் அஸ்அரீ அவர்கள் வாயிலாக அறிவிக்கப்படுகின்றது. ஆனால் தொடர்பு அறுந்ததாகவும் பலமற்றதாகவும் உள்ளது.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

அலீ பின் அபூதாலிப், இப்னு மஸ்வூத், பராபின் ஆஸிப் அனஸ் பின் மாலிக், அபூஉமாமா, சஹ்ல் பின் சஃது, அம்ர் பின் ஹுரைஸ் ஆகியோர் ஜவ்ரபின் மீது மஸஹ் செய்துள்ளனர். இதை உமர் பின் அல்கத்தாப், இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்தும் அறிவிக்கப்படுகின்றது.

பாடம்: 62

ஹதீஸ் எண்: 160

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உலூச் செய்தார்கள். தனது செருப்புகளின் மீதும், பாதங்களின் மீதும் மஸஹ் செய்தார்கள்.

அறிவிப்பவர்: அவ்ஸ் பின் அபூஅவ்ஸ் அத்தகரீ அவர்கள்.

முஸத்தத் அவர்களும், அப்பாத் அவர்களும் இணைந்து அறிவிக்கும் இந்த ஹதீஸில் 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை ஒரு கூட்டத்தினரின் சிறு ஊற்றுகள் அடங்கிய நீர் துறைக்கு (உலூச் செய்யும் இடத்திற்கு) வரக் கண்டேன்' என்று அறிவிக்கின்றார்.

(அவ்ஸ் கூறியதாக) அப்பாத் அவர்கள் தனியாக அறிவிக்கின்றார். சிறு ஊற்றுகள் அடங்கிய நீர்துறை உலூச் செய்யுமிடம் என்று முஸத்தத் தனது அறிவிப்பில் குறிப்பிடவில்லை. 'அவர்கள் உலூச் செய்தார்கள், தனது இரு

செருப்புகளின் மீதும், பாதங்களின் மீதும் மஸஹ் செய்தார்கள்' என்று இருவரும் கூட்டாக அறிவிக்கின்றனர்.

**பாடம்: 63 மஸஹ் செய்யும் முறை**

ஹதீஸ் எண்: 161

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலுறைகள் மீது மஸஹ் செய்பவர்களாக இருந்தனர்.

அறிவிப்பவர்: முகீரா பின் ஷுஃபா (ரலி) அவர்கள்.

இதன் அறிவிப்பாளர் முஹம்மது அல்லாதர் 'காலுறைகள் மேற்பாகத்தின் மீது மஸஹ் செய்தார்கள்' என்று அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 162

மார்க்கம் மனித அபிப்பிராயத்தின்படி அமைந்திருப்பின் காலுறையின் அடிப்பாகமே அதன் மேல்பாகத்தை விட மஸஹ் செய்வதற்கு தகுதியானதாகும்.

ஆனால் நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை தனது காலுறைகளின் மேல்பாகத்தின் மீதே மஸஹ் செய்யக் கண்டுள்ளேன் என்று அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அப்து கைர் அவர்கள்.

ஹதீஸ் எண்: 163

'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை தனது இரு பாதங்களின் அடிப்பாகம் தான் கழுவுவதற்கு பெரிய பகுதி என்று நான் கருதியிருந்தேன். இந்த ஹதீஸை அஃமஷ் அவர்கள் தனது இஸ்னாதைக் கொண்டு அறிவிக்கிறார்.

ஹதீஸ் எண்: 164

மார்க்கம் மனித அபிப்பிராயத்தின்படி அமைந்திருக்குமானால் பாதங்களின் அடிப்பாகமே மேற்பாகத்தைவிட மஸஹ் செய்வதற்கு உரியதாகும். ஆனால் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களோ தனது காலுறைகளின் மேற்பாகத்தில் மஸஹ் செய்துள்ளார்கள் என்று அலீ (ரலி) அவர்கள் கூறினார்கள்.

'நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை பாதங்களின் மேற்பாகத்தில் மஸஹு செய்யக் காணுகின்ற வரை பாதங்களின் அடிப்பாகந்தான் மேற்பாகத்தைவிட மஸ்ஹு செய்வதற்கு உரியது என்று கருதியிருந்தேன்' என்று அஃமஷ் அவர்களிடமிருந்து அதே இஸ்னாத் மூலம் அறிவிக்கின்ற வகீஃ என்பார் பாதங்கள் என்றால் காலுறைகள் என்றே (இந்த இடத்தில்) இதன் பொருள் என்று விளக்குகிறார். வகீஃ அறிவிப்பது போன்றே அஃமஷ் என்பாரிடமிருந்து ஈஸா பின் யூனுஸ் அறிவிக்கின்றார்.

நான் அலீ (ரலி) அவர்களை உலூச் செய்யக் கண்டேன். அப்போது அவர்கள், தனது பாதங்களின் மேல் பகுதியை கழுவியதும் 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை இதை (இவ்வாறு) நான் செய்யக் கண்டிருக்கவில்லையானால்' என்று கூறினார்கள் என தன் தந்தை வாயிலாக

அறிவிக்கும் அப்துகைா் மூலமாக அபு அஸ்ஸவ்்்தா என்பார் அறிவித்து இந்த ஹதீஸை தொடர்கிறார்.

ஹதீஸ் எண்: 165

தபூக் யுத்தத்தின் போது நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கட்கு உலூச் செய்ய நீர் ஊற்றினேன். அவர்கள் காலுறைகளின் (மேல் பாகத்திலும்) அடிப்பாகத்திலும் மஸஹ் செய்தார்கள்.

அறிவிப்பவர்: முகீரா (ரலி) வாயிலாக அவரின் எழுத்தாளர்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

'இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் வரிசையில் இடம் பெறும் சவ்ர் என்பார் தனக்கு முன்னுள்ள அறிவிப்பாளர் ரஜமி என்பாரிடமிருந்து இந்த ஹதீஸை செவியுறவில்லை' என எனக்கு தகவல் கிடைத்தது.

**பாடம்;: 64 தண்ணீர் தெளித்தல்**

ஹதீஸ் எண்: 166

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் சிறுநீர் கழித்தால் உலூ செய்வார்கள். மேலும் (மர்ம உறுப்பில்) நீர் தெளிப்பார்கள்.

அறிவிப்பவர்: சுப்யான் பின் ஹகம் சகபீ அல்லது சுப்யான் பின் இப்னு ஹகம் சகபீ அவர்கள்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

இந்த இஸ்னாதை சரிகாண்பதில் சுப்யான் அவர்களுக்கு அறிஞர்கள் குழு உடன்பட்டுள்ளது. அவர்களில் சிலர், ஹகம் அல்லது இப்னு ஹகம் என்றும் கூறுகின்றனர்.

ஹதீஸ் எண்: 167

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள், சிறுநீர் கழித்து விட்டு பிறகு தன் மர்ம ஸ்தானத்தில் தண்ணீர் தெளிக்கக் கண்டிருக்கிறேன்.

அறிவிப்பவர்: தன் தந்தை வாயிலாக சகீபைச் சார்ந்த ஒருவர்.

ஹதீஸ் எண்: 168

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் சிறுநீர் கழிப்பார்கள். பிறகு உலூச் செய்து விட்டு தனது மர்ம உறுப்பில் நீர் தெளிப்பார்கள்.

அறிவிப்பவர்: தன் தந்தை வாயிலாக ஹகம் அல்லது இப்னுல் ஹகம் அவர்கள்.

**பாடம்: 65 உலூச் செய்த பின் கூற வேண்டியவை**

ஹதீஸ் எண்: 169

நாங்களும், அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களும் எங்கள் அலுவல்களை நாங்களே பார்த்துக் கொள்வோம். நாங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் இருந்து கொண்டிருந்தோம். எங்களுடைய ஒட்டகங்களை மேய்ப்பதற்கு நாங்கள் முறை வைத்துக் கொள்வோம். எனது மேய்ப்பு முறை வந்ததும், மாலையில் நான் அவற்றை (தொழுவத்திற்கு) ஓட்டி

வந்தேன். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் மக்களுக்கு உரையாற்றிக் கொண்டிருக்கும் போது அவர்களை அடைந்தேன். அப்போது அவர்கள் கூற நான் செவியுற்றேன். 'உங்களில் ஒருவர் உலூச் செய்யும் போது அவ்வுலூவை அவர் அழகுறச் செய்து பின்பு (தொழுவதற்கு) நின்று தனது அகத்தாலும் முகத்தாலும் அவர் ஒருமுகப்பட்டு இரண்டு ரக்அத்துகளை தொழுதால் அவருக்கு (சுவனம்) நிச்சயமாகி விடும். அப்போது ஆஹா என்ன அருமை என்றேன். (ஆச்சர்ய மேலீட்டால்) சப்புக் கொட்டினேன். எனக்கு முன்பிருந்த ஒருவர் 'உக்பாவே! இதற்கு முன்பு ஆற்றிய உரை இதைவிட அருமை' என்று கூறினார். (யார் என்று) பார்த்தேன். அவர் உமர்பின் கத்தாப் (ரலி) அவர்கள் தான்! அபூஹப்ஸ் அவர்களே! அது என்ன உரை என்று கேட்டேன். நீ வருவதற்கு சற்று முன்பு தான் அண்ணலார் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அவர்கள் கூறலானார்கள். 'உங்களில் ஒருவர் உலூச் செய்யும் போது அவ்வுலூவை அழகுறச் செய்து, அவர் அதை நிறைவு செய்யும் போது அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹுவஹ்தஹு லாஷரீக லஹு, வ அன்ன முஹம்மதன் அப்துஹுவரசூலுஹு (வணக்கத்திற்கு தகுதியானவன் அல்லாஹ் தவிர யாருமில்லை, அவன் தனித்தவன், அவனுக்கு இணையில்லை என்று நான் சான்று பகர்கின்றேன். முஹம்மது (ஸல்) அவர்கள் அவனது அடியாரும், திருத்தூதரும் ஆவார்கள் என்றும் சான்று பகர்கின்றேன்) என்று கூறினால் அவருக்காக எட்டு சுவனங்களின் வாயில்கள் திறக்கப்பட்டு விடும். அவற்றில் அவர் விரும்பிய எதிலும் நுழையலாம்.
அறிவிப்பவர்: உக்பா பின் ஆமிர் (ரலி)

ஹதீஸ் எண்: 170

இந்த ஹதீஸின் அறிவிப்பாளர் உக்பா பின் ஆமிர் அவர்களிடமிருந்து மேலுள்ள ஹதீஸை போன்று அறிவிக்கின்றார். இவர் ஒட்டகை மேய்ப்பு செய்தியை குறிப்பிடாததோடு 'அவர் அவ்வுலூவை அழகுறச் செய்து' என்று வரும் இடத்தில் 'பிறகு தனது பார்வை விண்ணோக்கி உயர்த்தி மேற்கண்டவாறு கூற வேண்டுமென' தொடர்ந்து அறிவிக்கின்றார்.

**பாடம்: 66 ஒருவர் ஒரே உலூவில் பல தொழுகை தொழுதல்**

ஹதீஸ் எண்: 171

நான் அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்களிடம் உலூவைப் பற்றி வினவினேன். அதற்கு அவர்கள் 'அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்வார்கள். ஆனால் நாங்கள் ஒரே உலூவில் பல தொழுகைகளை தொழுது கொள்வோம்' என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: அபூ அஸத் பின் அம்ர் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 172

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் மக்கா வெற்றி நாளின் போது ஒரே உலூவில் ஐந்து நேரத் தொழுகைகளை தொழுதார்கள். தனது காலுறைகளுக்கு மஸ்ஹுசெய்து கொண்டார்கள். அப்போது அவர்களை

நோக்கி உமர் (ரலி) அவர்கள் 'நீங்கள் இதுவரை செய்திராத ஒன்றை இன்று நீங்கள் செய்யக் காண்கிறேனே? (ஏன்?) என்ற வினவியதும் 'நான் வேண்டுமென்றுதான் செய்தேன்' என்று அண்ணலார் பதிலளித்தார்கள்.

**பாடம்: 67 உறுப்பில் ஒரு பகுதி நனையாமல் விடுபடுதல்**

ஹதீஸ் எண்: 173

'அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் உலூச் செய்து விட்டு தனது பாதங்களில் ஒரு நக அளவு நனையாமல் விட்டவராக வந்தார். அவரை நோக்கி அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் 'நீர் திரும்பிச் சென்று உமது உலூவை அழகுறச் செய்க' என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: அனஸ் பின் மாலிக் (ரலி)

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகிறார்கள்: இந்த ஹதீஸை இதன் அறிவிப்பாளர் வரிசையில் இடம் பெற்றுள்ள ஜரீர் பின் ஹாசிம் என்பாரிடமிருந்து அறிய முடியவில்லை. இதை இதே வரிசையில் இடம் பெற்றுள்ள இப்னு வஹப் மட்டுமே அறிவிக்கின்றார்.

'நீர் திரும்பிச் சென்று உமது உலூவை அழகுறச் செய்க' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக உமர் (ரலி) அவர்கள் வாயிலாக ம:.மல் அவர்களிடமிருந்து இதைப் போன்று அறிவிக்கப்படுகின்றது.

ஹதீஸ் எண்: 174

அறிவிப்பாளர் பெயர்கள் மாற்றத்துடன் மேலுள்ள ஹதீஸே இங்கு இடம் பெறுகிறது.

ஹதீஸ் எண்: 175

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒருவரை தொழுது கொண்டிருக்கக் கண்டார்கள். அவருடைய மேற்பாகத்திற்கு மேல் திர்ஹம் (நாணயம்) அளவிற்கு நீர்படாமல் வெண்மை தெரிந்தது. அவருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உலூவையும் தொழுகையையும் மீட்டுமாறு உத்தரவிட்டார்கள்.
அறிவிப்பவர்: நபித்தோழர்களில் ஒருவர்.

**பாடம்;: 68 ஹதஸ் ஆகிவிட்டோமோ என்று ஐயம் கொள்தல்**

ஹதீஸ் எண்: 176

ஒருவர் தொழுது கொண்டிருக்கும் போது காற்று பிரிவது போன்று உணர்வது பற்றி கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள் காற்று பிரிந்த சப்தத்தை அல்லது அதன் நாற்றத்தை உணரும் வரை தொழுகையை முறிக்க வேண்டாம் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

ஹதீஸ் எண்: 177

உங்களில் ஒருவர் தொழுது கொண்டிருக்கும் போது தனது வயிற்றுக்குள் இறைச்சலை உணர்ந்து தான் ஹதஸ் ஆகிவிட்டோமா அல்லது ஹதஸ் ஆகவில்லையா என்று சந்தேகம் கொண்டால் அவர் சப்தத்தை கேட்கின்ற

வரை அல்லது நாற்றத்தை உணர்கின்ற வரை தொழுகையை முறிக்க வேண்டாம் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) அவர்கள்.

**பாடம்: 69 முத்தமிட்டால் உலூ முறியுமா?**

ஹதீஸ் எண்: 178

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்னை முத்தமிட்டார்கள். அவர்கள் உலூச் செய்யவில்லை என்று ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

இந்த ஹதீஸ் முர்ஸலாகும். காரணம் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து இதை அறிவிக்கின்ற இப்றாகீம் என்பார் அன்னையாரிடமிருந்து எதையும் செவியுறவில்லை. அபூஅஸ்மா என்று இடுகுறிப் பெயரால் அழைக்கப்படும் இப்றாகீம் அத்தைமூ என்பார் நாற்பது வயதை அடையும் முன்பே இவர் மரணித்து விட்டார் என்று இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்.

இவ்வாறே இந்த ஹதீஸை பர்யாபீ அவர்களும் மற்றவர்களும் அறிவிக்கின்றனர் என்று இமாம் அவர்கள் குறிப்பிடுகின்றனர்.

ஹதீஸ் எண்: 179

அண்ணல் நபி (ஸல்) தனது மனைவியரில் ஒருவரை முத்தமிட்டுவிட்டு பிறகு உலூச் செய்யாமல் தொழச் சென்றார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

இதை அன்னையாரிடமிருந்து அறிவிக்கின்ற உர்வா அவர்கள் தெரிவிக்கின்றார். 'உங்களைத் தவிர அது வேறு யாராகவும் இருக்க முடியாதே' என்று நான் வினவியதற்கு அன்னையார் அவர்கள் சிரித்தார்கள்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

இவ்வாறே இதை சாயிதா என்பவரும் அப்துல் ஹமீது அல்ஹிம்மானி அவர்களும் சுலைமான் அல்அஃமஷ் என்பாரிடமிருந்து அறிவிக்கின்றார்கள்.

ஹதீஸ் எண்: 180

இதே ஹதீஸை அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து உர்வா அல்முஸ்னீ என்பார் வாயிலாக எமது அறிவிப்பாளர்கள் அறிவித்தனர் என்று அஃமஷ் அறிவிக்கின்றார்.
('எமது அறிவிப்பாளர்கள்' என்று குறிப்பிடப்படுபவர்களில் ஹபீப் பின் உபைப் சாபித் என்பாரை தவிர வேறு யாரும் அறியப்படாதவர்கள் ஆவர்.)

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

ஹபீப் என்பாரிடமிருந்து அஃமஷ் அறிவிக்கும் இந்த ஹதீஸையும் உதிரப்போக்குள்ளவள் ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்ய வேண்டும் என்று இதே இஸ்நாத் மூலம் அஃமஷ் அறிவிக்கும் ஹதீஸையும் இவ்விரண்டு ஹதீஸ்களும் பலவீனமானவையே என்று மக்களுக்கு அறிவித்திடுக என்று யஹ்யா பின் சயீத் அல்கதான் என்பார் ஒருவருக்கு தெரிவித்தார்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:
'உர்வா அல் முஸ்னீ என்பாரிடமிருந்து மட்டும் தான் ஹபீப் அறிவிக்கின்றார். அதாவது இவர் உர்வா பின் ஜுபைர் அவர்களிடமிருந்து எதையும் அறிவிப்பார்களுக்கு அறிவிக்க வில்லை' என்று சவ்ரீ அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகின்றது.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து உர்வா பின் ஜுபைர், ஹபீப் ஆகியோர் வழியாக ஹம்ஸா அச்சய்யாத் அவர்கள் சரியான ஹதீஸை அறிவிக்கின்றனர்.

**பாடம்: 70 ஆண்குறியை தொடுவதால் உலூ நீங்குமா?**

ஹதீஸ் எண்: 181

நான் மர்வா பின் அல்ஹகம் என்பாரிடம் சென்றிருந்தேன். எதனால் உலூ நீங்கும் என்பதை அவரிடம் விவாதித்தோம். ஆண்குறியை தொடுவதினால் உலூ முறியும் என்று மாவான் கூறினார். இதை 'நான் (இது வரை) அறியவில்லையே' என்றேன். அதற்கு மர்வான் யார் தனது ஆண்குறியை தொடுகிறாரோ அவர் உலூச் செய்து கொள்வாராக! என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூற தான் செவியுற்றதாக புஸ்ரா பின்த் சப்வான் எனக்கு அறிவித்தார்கள் என்று சொன்னார்.
அறிவிப்பவர்: உர்வா பின் ஜுபைர் அவர்கள்.

**பாடம்: 71 ஆண்குறியை தொடுவதற்கு அனுமதி**

ஹதீஸ் எண்: 182

நாங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் சென்றிருந்தோம். அப்போது கிராமவாசி போல் ஒருவர் வந்தார். அல்லாஹ்வின் நபி அவர்களே! 'ஒருவர் உலூச் செய்த பிறகு தனது ஆண்குறியை தொடுவது தொடர்பாய் நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று வினவினார். அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'அதுவும் அவரது ஒரு உறுப்பு தானே?' என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: தன் தந்தை வாயிலாக கைஸ் பின் தல்க் அவர்கள்.

இந்த ஹதீஸை தல்க் பின் கைஸ் என்பாரிடமிருந்து முஹம்மது பின் ஜாபிர் வழியாக ஹிஷாம் பின் ஹஸ்ஸான், ஸுப்யான் சவ்ரீ, ஃஷுஃபா, இப்னு உஜனா, ஜரீர் அர்-ராசி ஆகியோர் அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 183

முந்தைய ஹதீஸின் இஸ்நாத் கருத்தை கொண்ட ஹதீஸை கைஸ் பின் தல்க் அவர்களிடமிருந்து முஹம்மது பின் ஜாபிர் அறிவிக்கின்றார். ஒருவர் 'தொழுகையில்' தன் ஆண்குறியை தொடுவது தொடர்பாய் என்ன கருதுகின்றீர்கள் என்று வினவியதாக இதில் அறிவிக்கின்றார்.

**பாடம்: 72 ஒட்டகை இறைச்சி உண்ணுவதால் உலூ நீங்குமா?**

ஹதீஸ் எண்: 184

ஒட்டகை இறைச்சியை சாப்பிட்டால் உலூ செய்ய வேண்டுமா? என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்டது. 'அதைச் சாப்பிட்டால் உலூச் செய்யுங்கள்' என்று பதிலளித்தனர். ஆட்டிறைச்சியைச் சாப்பிட்டால் உலூச் செய்ய வேண்டுமா? என்று வினவப்பட்ட போது 'அதற்காக நீங்கள் உலூச் செய்ய வேண்டாம்' என்று பதிலளித்தனர்.

ஒட்டகை தொழுவங்களில் தொழலாமா? என்று வினவப்பட்ட போது 'ஒட்டகைத் தொழுவங்களில் தொழாதீர்கள். காரணம் அவை (ஒட்டகங்கள்) ஷைத்தான்களின் வகையாகும் என்று பதிலளித்தனர். ஆட்டுக் கொட்டில்களில் தொழலாமா? என்று வினவப்பட்ட போது அவற்றில் 'நீங்கள் தொழுங்கள், அவை (ஆடுகள்) அபிவிருத்திக்குரியவை' என்று பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: பர்ரா பின் அஸிப் (ரலி) அவர்கள்.

பாடம்: 73 பச்சைக்கறியை தொடுவதினாலோ அல்லது கழுவுவதினாலோ உலூ நீங்குமா?

ஹதீஸ் எண்: 185

ஆட்டை உரித்துக் கொண்டிருக்கும் ஒரு சிறுவனுக்கு அருகில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நடந்து சென்ற போது அவரை நோக்கி அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் நீ விலகுக! நான் உனக்கு (உரித்துக்) காட்டுகிறேன் என்று கூறி தனது கையை தோலுக்கும் இறைச்சிக்கும் இடையே உட்படுத்தி அதை பலமாக உள்ளே கொண்டு சென்றார்கள். அவர்களது கை அக்குள் வரை மறைந்து விட்டது. பிறகு சென்று உலூச் செய்யாமல் தொழுதார்கள்.

அய்யூப், அமர் ஆகிய இதன் அறிவிப்பாளர்கள் அபூசயீத் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள் என்று கருதுகின்றோம் என்று தெரிவிக்கின்றார்கள்.

அமர் என்பவர் தனது ஹதீஸ் அறிவிப்பில் அதாவது நபிகள் (ஸல்) அவர்கள் தண்ணீரை தொடாமல் என்று கூடுதலாக அறிவிக்கின்றார்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்: இதே ஹதீஸை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அபூசயீத் (ரலி) அவர்களை குறிப்பிடாமல் 'அதா' விடமிருந்து ஹிலால் வாயிலாக அப்துல் வாஹித் பின் ஜியாத் அபூமுஆவியா ஆகியோர் முர்ஸலாக அறிவிக்கின்றனர்.

இந்த ஹதீஸை அறிவிக்கும் அறிவிப்பாளர்களின் வரிசையில் இடம் பெற்றுள்ள ஹிலால் என்பார் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) (நபித்தோழர்) அவர்களிடமிருந்து (அதாபின் யஸீத் அவர்கள் நேரடியாக அறிவிக்காமல்) என்று தான் அறிகின்றேன் எனக் கூறுகிறார்கள்.

**பாடம்: 74 இறந்தவற்றை தொட்டால் உலூ நீங்குமா?**

ஹதீஸ் எண்: 186

தன் இரு பக்கங்களிலும் மக்களுடன் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் மதீனாவின் மேட்டுப்பகுதியிலிருந்து கடைத்தெருவிற்குள் நுழைந்தார்கள். செத்த, இரு காதுகளும் இணைந்திருக்கும் ஒரு ஆட்டுக்குட்டிக்கருகில் சென்ற போது அதை அதன் காதை பிடித்து தூக்கி பிறகு 'இதை உங்களில் யார் விரும்புவார்? என்று வினவினார்கள்' என்று ஜாபிர் (ரலி) அறிவிக்கின்றார்கள்.

**பாடம்: 75 சமைத்த உணவை சாப்பிடுவதால் உலூ நீங்குமா?**

ஹதீஸ் எண்: 187

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு ஆட்டின் தொடை பகுதியை சாப்பிட்டார்கள். பிறகு உலூச் செய்யாமல் தொழுதார்கள்.
அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 188

ஓர் இரவு நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் விருந்தாளியாக தங்கினேன். அவர்கள் சிறிதளவு இறைச்சியை வறுவல் செய்ய சொன்னார்கள். அவர்கள் கத்தியை எடுத்து அதை எனக்கு வெட்டத் துவங்கினார்கள். அப்போது பிலால் (ரலி) அவர்கள் வந்து, அவர்களுக்கு தொழுகையை அறிவித்தார்கள். உடனே அவர்கள் கத்தியை போட்டு விட்டு இவருக்கு என்ன அவசரம்? அவரது கையில் மண் படியட்டும் என்று கூறி தொழலானார்கள்.
அறிவிப்பவர்: முகீரா பின் ஷுஃபா (ரலி) அவர்கள்.

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அன்பாரி அவர்கள் எனக்கு மீசை அதிகமாக வளர்ந்திருக்கிறது. அதை எனக்கு ஒரு பற்குச்சியை (அளவாக) வைத்து (அதற்கு மேற்பட்டதை) கத்தரித்து விட்டார்கள் என்றோ அல்லது பற்குச்சியை (அளவாக) வைத்து உனக்கு நான் அதை கத்தரிப்பேன் என்றோ அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்பதாக கூடுதலாக அறிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 189

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள், ஆட்டின் தொடைப் பகுதியை சாப்பிட்டார்கள். பிறகு தனக்கு கீழிருந்து விரிப்புத்துணியில் தனது கையை துடைத்தார்கள். பிறகு நின்று தொழலானார்கள்.
அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 190

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஆட்டின் தொடைப் பகுதியை கடுவாய் பற்களால் கடித்து சாப்பிட்டார்கள். பிறகு உலூச் செய்யாமல் தொழுதனர்.
அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 191

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு நான் இறைச்சியும் ரொட்டியும் அளித்தேன். அவர்கள் சாப்பிட்டார்கள். பிறகு உலூச் செய்ய தண்ணீர் கொண்டு வரச் சொல்லி அதில் உலூச் செய்தார்கள். பிறகு லுஹர் தொழுதார்கள். பிறகு தனது மிச்ச உணவை கொண்டு வரும்படி கூறி சாப்பிட்டார்கள். பிறகு உலூச் செய்யாமல் தொழலானார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி)

ஹதீஸ் எண்: 192

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் இரு செயல் முறைகளில் இறுதியானது (நெருப்பில்) சமைக்கப்பட்ட பொருட்களை சாப்பிடுவதினால் உலூ செய்யாமலிருப்பது தான்.

அறிவிப்பவர்: ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள்.

இது முந்தைய ஹதீஸின் சுருக்கமே என்று இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

ஹதீஸ் எண்: 193

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் அல்ஹர்ஸ் பின் ஜஸ்உ (ரலி) அவர்கள் எகிப்து நாட்டில் எங்களிடம் வருகையளித்தனர். எகிப்திய பள்ளிவாயிலில் அவர்கள் ஹதீஸ் அறிவிக்கும் போது நான் செவியுற்றேன். அவர் கூறலானார்: ஒருவரது வீட்டில் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் நாங்கள் ஆறேழு பேர்கள் இருந்தோம் என எண்ணுகிறேன். அப்போது பிலால் (ரலி) அவர்கள் வந்து அவர்களை தொழுகைக்கு அழைத்தார்கள். உடனே நாங்கள் புறப்பட்டு சட்டியை நெருப்பில் (அடுப்பில்) வைத்திருந்த ஒருவருக்கருகில் சென்றோம். அவரிடம் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உனது சமையல் ஆகிவிட்டதா? என்று வினவினார்கள். அவர் ஆம்! எனது தந்தையும் தாயும் தங்களுக்கு அர்ப்பண மாகட்டும்! என்று பதிலளித்தார். அதிலிருந்து அவர்கள் ஒரு துண்டை எடுத்து அதை தொழுகைக்கு அவர்கள் தக்பீர் கட்டும் வரை மெண்று கொண்டிருந்தார்கள். நான் அவர்களையே உன்னிப்பாய் கவனித்துக் கொண்டிருந்தேன்.

அறிவிப்பவர்: உபைத் பின் சுமாமா அல்முராதீ அவர்கள்.

பாடம்: **76 சமைத்ததை சாப்பிட்டால் உலூச் செய்ய வேண்டும் என்று வலியுறுத்துதல்**

ஹதீஸ் எண்: 194

நெருப்பில் சமைத்த(தை சாப்பிடுவ)தினால் உலூச் செய்வது அவசியமாகும் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 195

அபூசுப்யான் பின் சயீத் பின் அல்முகீரா அவர்கள் உம்மு ஹபீபா (ரலி) அவர்களிடம் சென்றார்கள். அவரை உம்முஹபீபா (ரலி) அவர்கள் (மாவு கலந்த) பானத்தை அருந்தச் செய்தனர். அவர் (பருகியதும்) தண்ணீர் கொண்டு வரச் சொல்லி வாய்க் கொப்பளித்தார்கள். அப்போது உம்முஹபீபா (ரலி) அவர்கள் 'எனது சகோதரியின் மகனே! நீ உலூச் செய்ய வேண்டாமா? அண்ணல் நபி (ஸல்) அவர்கள், நெருப்பில் சமைத்த பொருள் உண்பதினால் உலூச் செய்யுங்கள் என்று சொன்னார்கள்' என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஸலாமா (ரலி) அவர்கள்.

**பாடம்: 77 பால் பருகியதும் உலூச் செய்தல்**

ஹதீஸ் எண்: 196

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பால் பருகினார்கள். பிறகு தண்ணீர் கொண்டு வரச்செய்து வாய் கொப்பளித்தார்கள். பிறகு இது கொழுப்பு அடங்கியது என்று சொன்னார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்.

பாடம்: 78 பால் பருகியதும் உலூச் செய்யாமலிருக்க அனுமதி

ஹதீஸ் எண்: 197

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் பால் பருகினார்கள். ஆனால் வாய்க் கொப்பளிக்காமலும், உலூச் செய்யாமலும் தொழுதார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள்.

இதன் அறிவிப்பாளர்களின் ஒருவரான ஜைத் அல்ஹப்பாப் என்பார் தனக்கு அறிவித்த அறிவிப்பாளர் முதீபின் ராஷித் என்பாரை பற்றி பின்வருமாறு கூறுகிறார்: 'எனக்கு இந்த அறிவிப்பாளரை அறிமுகப்படுத்தியவர் ஷுஃபா ஆவார்.

**பாடம்: 79 இரத்தம் வெளிப்படுவதால் உலூ நீங்குமா?**

ஹதீஸ் எண்: 198

'தாத ரிகாஃ' என்ற போரின் போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் சென்றோம். (எங்கள் தோழர்களில்) ஒருவர் இணை வைப்பாளர்களின் ஒருவனின் மனைவியை கொன்று விட்டார். அவளது கணவன் முஹம்மதுடைய தோழர்களில் எவரையேனும் கொல்லாமல் ஓயப்போவதில்லை என்று சத்தியம் செய்து கொண்டான். எனவே அவன் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அடிச்சுவற்றை தொடரலானான். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஓரிடத்தில் தங்கலானார்கள். அப்போது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நம்மை காவல் புரிபவர்கள் யார்? என வினவினார்கள். முஹாஜிரீன்களில் ஒருவரும் அன்சாரிகளில் ஒருவரும் பதிலளித்ததும் நீங்கள் இருவரும் கணவாயின் வாயிலில் (காவல்) இருந்து கொள்ளுங்கள் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள். அவ்விருவரும்

கணவாயின் வாயிலுக்கு சென்றதும் முஹாஜிரித் தோழர் படுத்துக் கொண்டார். அன்சாரித் தோழர் தொழத் துவங்கினார். (சபதம் செய்த அம்மனிதன் வந்து விட்டான் அவன் (தொழுகின்ற) அவரின் தோற்றத்தை கண்டதும் அவர் அக்கூட்டத்தின் காவலாளர் என்று விளங்கிக் கொண்டான். அவரை நோக்கி அவன் அம்பெய்தான். அதை அவர் மேல் (குறி தவறாது) விழச் செய்தான். அதை அவர் கழற்றி விட்டார். இவ்வாறு அவன் மூன்று அம்புகளை அவரை நோக்கி எறியும் வரை (அவர் அவற்றை கழற்றி விட்டார்) பிறகு ருகூஃ செய்து சஜ்தா செய்தார். பிறகு அவரது தோழர் தூங்கி எழுந்தார். அவர்கள் விழிப்படைந்து விட்டார்கள் என்று (எதிரி) அவன் புரிந்து கொண்டதும் பயந்தோடி விட்டான். அன்சாரித் தொழரின் இரத்தக் காட்சியை முஹாஜிர் தோழர் கண்ட போது 'சுப்ஹானல்லாஹ்' (அல்லாஹ் தூய்மையானவன்) அவன் அம்பெய்த ஆரம்பத்திலேயே என்னை எழுப்பியிருக்கக் கூடாதா என்று வினவினார். அதற்கு அவர் நான் ஓதிக் கொண்டிருந்த சூராவில் (அத்தியாயத்தில்) ஆழ்ந்து விட்டேன். அதை நான் துண்டிக்க விரும்பவில்லை என்று அவர் பதில் சொன்னார்.

அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி) அவர்கள்.

**பாடம்: 80 உறங்குவதால் உலூ நீங்குமா?**

ஹதீஸ் எண்: 199

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) ஓர் இரவில் (ஒரு முக்கிய பணியில்) முழு ஈடுபாடாக இருந்து விட்டார்கள். இதனால் அவர்கள் இஷாவை பிற்படுத்தி விட்டார்கள். எந்த அளவுக்கெனில் பள்ளியில் நாங்கள் உறங்கினோம். பிறகு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களிடம் வருகையுற்று, 'உங்களைத் தவிர யாரும் தொழுகைக்காக காத்திருப்பவர்கள் யாருமில்லை' என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 200

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் தோழர்கள் இஷாவை (உறக்கத்தினால்) தங்களது தலைகள் சரிந்து விழும் அளவிற்கு எதிர் பார்த்துக் கொண்டிருப்பார்கள். பிறகு அவர்கள் உலூச் செய்யாமலேயே தொழுவார்கள்.
அறிவிப்பவர்: அனஸ் (ரலி) அவர்கள்.

இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்:

'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் நாங்கள் (இஷா தொழுகையை எதர்பார்த்து) தலைகள் சரிந்து விழும் வரை தூங்கிக் கொண்டிருப்போம்' என்று அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாக கதாதா அவர்கள் கூடுதலாக அறிவிக்கிறார்.

இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்:

இதை இப்னு அபீ அரூபா என்பவர் கதாதா அவர்களிடமிருந்து வேறொரு உரைநடையில் அறிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 201

இஷா தொழுகைக்கு இகாமத் கூறப்பட்டது. அப்போது ஒருவர் எழுந்து நின்று, அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! எனக்கு ஒரு தேவை உள்ளது என்று சொன்னார். அவர்கள் அவரிடம் மக்கள் அல்லது மக்களில் சிலர் சிறு துயில் கொள்ளும் வரை பேசிக் கொண்டிருந்தனர். பிறகு அவர்கள் மக்களுக்கு தொழுகை நடத்தினர்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிப்பவர் சாபித் அல்புனானீ ஆவார். இவர் உலூவைப் பற்றி இதில் குறிப்பிடவில்லை.

ஹதீஸ் எண்: 202

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஸுஜுது செய்வார்கள். பிறகு உலூச் செய்யாமலேயே குறட்டை விட்டவாறு (ஸஜ்தாவில்) உறங்குவார்கள். பிறகு எழுந்து தொழுவார்கள். அவர்களிடம் நான் 'உறங்கிய நீங்கள் உலூச் செய்யாமல் தொழுதீர்களே! என்று வினவினேன். 'படுத்து உறங்கியவர் தான் உலூச் செய்ய வேண்டும்' என்று பதிலளித்தனர்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்.

உஸ்மான், ஹன்னாத் ஆகிய அறிவிப்பாளர்கள் 'ஏனெனில் (ஒருவர்) படுத்து உறங்கும் போது மூட்டிணைப்புகள் தளர்வுறுகின்றன (அதனால் காற்று வெளியேற வாய்ப்புண்டு) என்று கூடுதலாக அறிவிக்கின்றனர்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

'படுத்து உறங்கியவர் தான் உலூச் செய்ய வேண்டும்' என்ற அவரது அறிவிப்பு முன்கரான நிராகரிக்கப்பட்ட ஹதீஸ் ஆகும். கதாதாவிடமிருந்து யசீத் அபூகாரித் தாலனியை தவிர வேறு யாரும் இதை அறிவிக்க வில்லை.

இதன் ஆரம்பத்தை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து பெருங்குழுவினரே அறிவிக்கின்றனர். அவர்கள் யசீத் கூறியதிலிருந்து எதையுமே குறிப்பிடவில்லை.

'அண்ணல் நபி (ஸல்) அவர்கள் (உள்ளமும் சேர்ந்து உறங்குவதை விட்டும்) பாதுகாக்கப்பட்டவர்களாவார்கள்' என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

'எனது கண்கள் உறங்கும், எனது உள்ளம் உறங்காது' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஷுஃபா அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

கதாதா அவர்கள் அபுல் ஆலியாவிடமிருந்து செவியுற்றவை நான்கு ஹதீஸ்களை மட்டும் தான். அவை யூனுஸ் பின் மத்தா அவர்கள் தொடர்பான ஹதீஸ், தொழுகை தொடர்பான இப்னு உமர் (ரலி) ஹதீஸ், நீதிபதிகள் மூவர் என்ற ஹதீஸ், எனக்கு விருப்பமானவர்கள் என்னருகில் உள்ளனர். அவர்களில்

உமர் (ரலி) ஆவார் என்று ரசூல் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ் ஆகியவையாகும்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

யசீத் அபூகாலித் தாலானியின் ஹதீஸை இமாம் அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) அவர்களிடம் தெரிவித்தேன். இதை அவர்கள் மறுக்கும் விதமாக என்னை கடிந்து கொண்டார்கள். அதோடு கதாதா அவர்களின் அறிவிப்பாளர்கள் கூறாததை அவர்கள் கூறியதாக அவர்களின் மீது புகுத்திச் சொல்ல யசீத் அபூகாலித் தாலானிக்கு என்ன அவசியம் ஏற்பட்டு விட்டது? என்றும் கூறினார்கள். மேலும் அவர்கள் இதை ஒரு பொருட்டாக கூட கருதவில்லை. (காரணம் இது பலவீனமாகும்)

ஹதீஸ் எண்: 203

'ஆசன வாயின் கட்டுப்பாடு கண்களாகும். யார் உறங்கி விட்டாரோ அவர் உலூச் செய்து கொள்வாராக' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### பாடம்: 81 கழிவுப் பொருள்களை காலால் மிதித்தால்!

ஹதீஸ் எண்: 204

கழிவுப் பொருள் காலால் மிதி பட்டால் நாங்கள் உலூச் செய்ய மாட்டோம். (தொழும் போது எங்களுடைய) தலைமுடி, ஆடை (தரையில் விழுவதை) நாங்கள் தடுக்க மாட்டோம்.

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி) அவர்கள்.

### பாடம்: 82 தொழும் போது உலூ நீங்கி விடுதல்

ஹதீஸ் எண்: 205

'உங்களில் ஒருவருக்கு தொழுகையில் காற்று விட்டால் அவர் (தொழுகையை விட்டு விட்டு) உலூச் செய்து திரும்பத் தொழுவாராக!' என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

### பாடம்: 83 மதீ (இச்சை நீர்) வெளிப்படுதல்

ஹதீஸ் எண்: 206

எனக்கு (மதீ) இச்சை நீர் அதிகமாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. இதனால் என் முதுகு ஒடிகின்ற (குளிர் வேதனையினால்) அளவிற்கு அடிக்கடி குளித்துக் கொண்டிருந்தேன். இதை நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் முறையிட்டேன். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் 'நீ அவ்வாறு வெளிப்படுவதை கண்டால் உனது ஆண்குறியை கழுவிக் கொள். பிறகு தொழுகைக்கு நீ உலூச் செய்வது போல் உலூச் செய்து கொள்க! உனக்கு இந்திரியம் வெளிப்பட்டால் குளித்துக் கொள்க!' என்று பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: அலீ (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 207

ஒருவர் தன்னுடைய மனைவியை நெருங்கும் போது அதனால் அவருக்கு மதீ வெளிப்பட்டால் அவர் என்ன செய்ய வேண்டும்? அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் மகளார் எனக்கு மனைவி என்பதால் அவர்களிடம் இதை நான் கேட்க வெட்கமடைகிறேன்' எனக் கூறி அலீ (ரலி) அவர்கள் மிக்தாத் பின் அஸ்வத் (ரலி) அவர்களை அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் விளக்கம் கேட்கும்படி சொன்னார்கள். மிக்தாத் (ரலி) அவர்கள் கூறுகின்றார்கள். இதைப் பற்றி நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவினேன். அவர்கள் 'உங்களில் ஒருவர் இதைக் கண்டால் தனது மர்ம உறுப்பில் நீர் தெளித்து, தொழுகைக்கு உலூச் செய்வது போன்று அவர் உலூச் செய்வாராக!' என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: மிக்தாத் பின் அஸ்வத் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 208

அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் மிக்தாத் (ரலி) அவர்களிடம் (மேற்கண்டவாறு) கேட்டதாக இதன் அறிவிப்பாளர் மேலுள்ள ஹதீஸைப் போன்று அறிவிக்கின்றார். அதை மிக்தாத் (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவிய போது 'அவர் தனது ஆண்குறியையும் விரையையும் கழுவிக் கொள்ளட்டும்' என்று பதிலளித்ததாகவும் அதன் அறிவிப்பாளர் அறிவிக்கின்றார்.

இமாம் அபூதாவூத் அவர்கள் கூறுகின்றார்கள்:

இதை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அலீ, மிக்தாத் ஆகியோர் வாயிலாக தன் தந்தை மூலம் ஹிஷாம் அவர்கள் அறிவிக்கின்றார். ஹிஷாம் அவர்களிடமிருந்து சவ்ரீ அவர்களும் ஒரு பெருங்குழுவினரும் அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 209

அதே ஹதீஸ் இங்கும் இடம் பெறுகின்றது.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

அலீ பின் அபீதாலிப் (ரலி) அவர்களிடமிருந்து தன் தந்தை வாயிலாக அறிவிக்கின்ற ஹிஷாம் அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை முபல்லல் பின் புலாலா, ஒரு பெருங்குழுவினர், சவ்ரி, இப்னு உஜன் ஆகியோர் அறிவிக்கின்றனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து விரைகளை என்று குறிப்பிடாமல் மிக்தாத் அவர்களிடமிருந்து தன் தந்தை வழியாக அறிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 210

நான் அதிகமாக மதி வெளிப்படுவதால் சிரமத்தை அடைந்தேன். அதிகமாக குளித்தேன். இதை நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவிய போது 'இதற்காக நீ உலூச் செய்வதே போதுமானதாகும்' என்று பதிலளித்தார்கள். அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! ஆடையில் மதீ பட்டுவிட்ட பகுதியை என்ன செய்வது? என்று நான் கேட்ட போது 'ஒரு கையளவு நிரள்ளி அது உன் ஆடையில் கலந்து விட்டது என்று நீ

காணுமளவுக்கு தண்ணீர் தெளிப்பது உனக்கு போதுமாகும்' என்று அவர்கள் பதில் சொன்னார்கள்.
அறிவிப்பவர்: ஸுஹைல் பின் ஹுனைப் (ரலி) அவர்கள். ஹதீஸ் எண்: 211

தொடர்ந்து கசிகின்ற இச்சை நீரைப் பற்றியும் குளிப்பு கடமையாக்கும் காரியங்கள் பற்றியும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் நான் கேட்டேன். அதற்கு அவர்கள் அது மதி (இச்சை நீராகும்) ஆண் உயிரினங்கள் அனைத்தும் இச்சை நீரை வெளிப்படுத்தக் கூடியவைதான். அது வெளிப்பட்டு விட்டால் உனது உறுப்பையும், விதைகளையும் கழுவிக் கொள். மேலும் தொழுகைக்கு நீ உலூச் செய்வது போன்று நீ உலூச் செய்து கொள் என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் ச.்து அல் அன்சாரி (ரலி) அவர்கள்.
ஹதீஸ் எண்: 212

எனது மனைவி மாதவிடாய் ஆனவளாக இருக்கும் போது எனக்கு அவளிடத்தில் அனுமதியானது என்ன? என்று ஹிசாம்பின் ஹகீம் அவர்களின் சிறிய தந்தை அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களிடம் வினவிய போது, 'இடுப்புக்கு மேற்பகுதி உனக்கு அனுமதியாகும்' என்று பதிலளித்தார்கள், என்று அறிவித்து இதன் அறிவிப்பாளர் மாதவிடாய் பெண்ணுடன் கலந்துண்ணுவதை கூறி இந்த ஹதீஸை தொடர்கிறார்.
அறிவிப்பவர்: தனது சிறிய தந்தை வாயிலாக ஹிசாம் பின் ஹகீம் அவர்கள்.
ஹதீஸ் எண்: 213

தனது மனைவி மாதவிலக்கானவளாக இருக்கும் போது ஒருவருக்கு அவளிடம் அனுமதிக்கப்பட்டது என்ன? என்று நான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவிய போது இடுப்புக்கு மேற்பகுதி ஆகும். ஆனால் இதை விட்டு தவிர்ந்திருப்பது சிறந்ததாகும். என்று அவர்கள் பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: முஆத் பின் ஜபல் (ரலி) அவர்கள்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்: இந்த ஹதீஸ் வலுவானது அல்ல.

### பாடம்: 84 விந்து வெளிப்படாது உடலுறவு கொள்ளல்

ஹதீஸ் எண்: 214

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (இதை) உடலுறவு கொண்டு விந்து வெளிப்பட வில்லையானால் குளிக்க வேண்டியதில்லை என்பதை இஸ்லாமிய ஆரம்ப காலத்தில் மக்களுக்கு அனுமதி வழங்கிய காரணம் ஆடைகள் போதாமையினால் தான். பிறகு குளிக்க வேண்டுமென்று கட்டளை விதித்து, அதற்கு தடை விதித்து விட்டார்கள்.
அறிவிப்பவர்: உபைபி பின் க.்ப் (ரலி) அவர்கள்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:
(இதை என்பதன் விளக்கமாக விந்து வெளிப்பட்டாலே குளிக்க வேண்டும் என்பதாகும்)

நீருக்கு நீர் பரிகாரம் என்றால் உடலுறவின் போது இந்திரியம் வெளிப்பட்டால் மட்டும் குளிப்பது கடமையாகும் என்பதைக் குறிக்கும் இது ஆரம்ப காலத்தில் உள்ள சலுகை என்று இந்த ஹதீஸில் அறிகின்றோம்.

ஹதீஸ் எண்: 215

விந்து வெளிப்பட்டால் குளிக்க வேண்டும் என்று அவர்கள் அளித்த தீர்ப்புகள் யாவும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் இஸ்லாமிய துவக்க காலத்தில் வழங்கிய அனுமதியே பின்னர் அவர்கள் குளிக்கும்படிக் கட்டளையிட்டனர்.

அறிவிப்பவர்: உபையி பின் கஃப் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 216

ஒருவன் தன் மனைவியுடைய நான்கு கிளைகளுக்கு இடையே அமர்ந்து ஆண்குறியை பெண்குறியோடு இணைத்தால் விந்து வெளிப்படாவிட்டாலும் குளிப்பது கடமையாகிவிடும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்.

ஹதீஸ் எண்: 217

விந்து வெளிப்பட்டாலே குளிக்க வேண்டும் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் சொன்னார்கள்.

அபூஸலமா அவர்கள் இவ்வாறே செய்வார்கள்.

**பாடம்: 85 குளிக்காமல் மறுமுறை உடலுறவு கொள்ளல்**

ஹதீஸ் எண்: 218

ஒரு நாள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தனது மனைவியர்களிடம் சென்று விட்டு கடைசியில் ஒரு தடவையே குளித்துக் கொண்டார்கள்.

அறிவிப்பவர்: அனஸ் (ரலி) அவர்கள்.

இந்த ஹதீஸை அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து ஹிஷாம் பின் ஜைத் அவர்களும் அனஸ் (ரலி) அவர்களிடமிருந்து கதாதா அவர்கள் வாயிலாக மஃமர் அவர்களும், ஜுஹ்ரி வாயிலாக சாலிஹ் பின் அபுல் அகலர் ஆகிய அனைவருமே அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அனஸ் (ரலி) வாயிலாக அறிவிக்கின்றனர்.

**பாடம்: 86 திரும்ப உடலுறவு கொள்ளும் முன் உலூச் செய்தல்**

ஹதீஸ் எண்: 219

ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தனது மனைவியர்களிடம் சென்று விட்டு ஒவ்வொரு தடவையும் குளித்தார்கள். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களே! இதை நீங்கள் மொத்தமாக ஒரு தடவை குளித்திருக்கக் கூடாதா? என்று நான் வினவிய போது இதுவே உள்ளும் புறமும் சுத்தமானதாக ஆகும் என்று பதில் அளித்தனர்.

அறிவிப்பவர்: அபூராபிஃ அவர்கள்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:
அனஸ் (ரலி) அவர்களது ஹதீஸ் இதைவிட மிகச் சரியானதாகும்.

ஹதீஸ் எண்: 210

உங்களில் ஒருவர் தனது மனைவியிடம் உடலுறவு கொண்டு விட்டு மீண்டும் அவருக்கு உடலுறவு கொள்ள வேண்டும் என்று தோன்றினால் அவ்விரண்டிற்கும் இடையில் அவர் உலூச் செய்வாராக! என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள். பாடம்: 87 குளிப்புக் கடமையானவர் குளிக்காமலே உறங்குதல்

ஹதீஸ் எண்: 221

உமர் பின் கத்தாப் (ரலி) அவர்கள் தனக்கு இரவில் குளிப்பு கடமை ஏற்பட்டு விடுகிறதே! என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் குறிப்பிட்ட போது உன் ஆண்குறியை கழுவி உலூச் செய்து பிறகு உறங்குக என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள்.

பாடம்: 88 குளிப்புக் கடமையானவர் குளிக்காமலேயே உண்ணுதல்

ஹதீஸ் எண்: 222

குளிப்புக் கடமையான நிலையில் நபி (ஸல்) அவர்கள் உறங்க எண்ணும் போது தொழுகைக்காக செய்வது போல் உலூச் செய்து கொள்வார்கள்.
அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 223

இந்த ஹதீஸ் சுஹ்ரீ வழியாக வேறொரு அறிவிப்பாளர் தொடரைக் கொண்டு அறிவிக்கப்படுகிறது. இதில், 'குளிப்புக் கடமையானவர் உண்ண விரும்பினால் கைகள் இரண்டையும் கழுவிக் கொள்ள வேண்டும்' என்பது கூடுதலாக உள்ளது.

இமாம் அபூதாவூது அவர்கள் கூறுகிறார்கள்:

1. இந்த ஹதீஸ் யூனுஸ் வழியாக இபுனு வஹ்ப் அவர்கள் அறிவிக்கிறார்கள். இதில் குளிப்புக் கடமையானவர் உண்ணலாம் என்பது ஆயிஷா (ரலி) அவர்களின் கூற்றாக அறிவிக்கப்பட்டுள்ளது.
2. இதே ஹதீஸ் வேறொரு அறிவிப்பாளர் தொடரைக் கொண்டு இப்னு முபாரக் வழியாகவும் அறிவிக்கப்படுகிறது. இதை உர்வா அல்லது அபூஸலமாவிடமிருந்து அவர் அறிவிக்கிறார்.
3. அல் அவ்ஸிஈ அவர்களும் இப்னு முபாரக் அறிவிப்பது போலவே அறிவிக்கிறார். இதை நபி (ஸல்) அவர்களிடமிருந்து யூனுஸ், அவர்களிடமிருந்து அல்அவ்ஸிஈ அவர்கள் அறிவிக்கிறார்.

**பாடம்: 89 குளிப்புக் கடமையானவர் உண்ண உறங்க நாடும் போது உலூச் செய்து கொள்வது.**

ஹதீஸ் எண்: 224

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் உண்ண அல்லது உறங்க விரும்பும் போது உலூச் செய்து கொள்வார்கள். குளிப்புக் கடமையாக இருக்கும் போது (அவ்வாறு செய்தார்கள்) என்பதையே அவர்கள் குறிப்பிட்டார்கள்.

ஹதீஸ் எண்: 225

குளிப்புக் கடமையான ஒருவருக்கு உலூச் செய்த பின் உண்ணவும் உறங்கவும் நபி (ஸல்) அவர்கள் அனுமதியளித்தார்கள்.
அறிவிப்பவர்: அம்மார் பின் யாசிர் (ரலி) அவர்கள்.

இமாம் அபூதாவூது அவர்கள் கூறுகிறார்கள்:

1. இதன் அறிவிப்பாளர் தொடரில் எஹ்யா பின் எஃமுர், அம்மார் பின் யாசிர் இருவருக்கும் இடையே ஒரு அறிவிப்பாளர் விடுபட்டு இருக்கிறார்.
2. அலி இப்னு அபூதாலிப், இப்னு உமர், அப்துல்லா பின் அம்ர் கூறுகிறார்கள்: குளிப்புக் கடமையானவர் உண்ண விரும்பும் போது உலூச் செய்ய வேண்டும்.

**பாடம்: 90 குளிப்புக் கடமையானவர் குளிப்பதை தாமதிக்க அனுமதி.**

ஹதீஸ் எண்: 226

குதைப் பின் அல்ஹரித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

நான் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்டேன். (குளிப்புக் கடமையான) நபி (ஸல்) அவர்கள் குளிப்பதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவர்கள் எப்போது குளிப்பார்கள்? இரவின் ஆரம்பத்திலா அல்லது இறுதியிலா? அதற்கு அவர்கள் பதிலளித்தார்கள், சிலவேளை அவர்கள் இரவின் ஆரம்பத்திலும் சிலவேளை இரவின் இறுதியிலும் குளிப்பார்கள். அதற்கு நான், அல்லாஹ் மிகப்;பெரியவன், இந்த விஷயத்தில் சலுகையளித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று வியந்து கூறினேன். மீண்டும் நான் அன்னை ஆயிஷா அவர்களிடம் கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் வித்ருத் தொழுகையை இரவின் ஆரம்பத்தில் தொழுதார்களா? அல்லது இறுதியில் தொழுதார்களா? அதற்கு அவர்கள் பதிலளித்தார்கள், சிலவேளை அவர்கள் இரவின் ஆரம்பத்திலும் சிலவேளை இரவின் இறுதியிலும் தொழுவார்கள். அதற்கு நான் அல்லாஹ் மிகப்பெரியவன், இந்த விஷயத்தில் சலுகையளித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று வியந்து கூறினேன். மீண்டும் நான் அன்னை ஆயிஷா அவர்களிடம் கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் குர்ஆனை சப்தமிட்டு ஓதுவார்களா? அல்லது சப்தமின்றி ஓதுவார்களா? அதற்கு அவர்கள் பதிலளித்தார்கள். சிலவேளை அவர்கள் சப்தத்துடனும் சிலவேளை சப்தமின்றியும் ஓதுவார்கள். அதற்கு நான், அல்லாஹ் மிகப்;பெரியவன், இந்த

விஷயத்தில் சலுகையளித்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் என்று வியந்து கூறினேன்.

ஹதீஸ் எண்: 227

உருவப்படம், நாய், குளிப்புக் கடமையானவர் இருக்கும் வீட்டில் மலக்குகள் நுழைய மாட்டார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அலி (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 228

குளிப்புக் கடமையான நிலையில் நபி (ஸல்) அவர்கள் தண்ணீரைத் தொடாமலேயே தூங்கி விடுவார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி) அவர்கள்.

இமாம் அபூதாவூது சொல்கிறார்கள்:

யஸீது பின் ஹாரூன் சொல்லக் கேட்டதாக ஹஸன் பின் அலி அல்வஸீத்தி கூறுகிறார்கள்: இந்த ஹதீஸ் தவறாக புரிந்து கொள்ளப்பட்டிருக்கிறது, ஏனெனில் இந்த ஹதீஸ் அபூஇஸ்ஹாக் என்பவரால் அறிவிக்கப்படுகிறது.

**பாடம்: 91 குளிப்புக் கடமையானவர் குர்ஆனை ஓதுதல்**

ஹதீஸ் எண்: 229

அப்துல்லாஹ் பின் ஸலமா சொன்னார்கள்:

இரண்டு பேரில் ஒருவர் எங்களைச் சேர்ந்தவர் மற்றவர் பனூ அஸத் கூட்டத்தாரைச் சேர்ந்தவர் இவர்களோடு நானும் அலி (ரலி) அவர்களின் அழைப்பின் பேரில் சென்றிருந்தோம். அவ்விருவரையும் ஒரு கூட்டத்தாரிடம் 'நீங்கள் வலிமை மிக்கவர்களாக இருக்கிறீர்கள். உங்களின் வலிமையை மார்க்கத்தில் காட்டுங்கள்' என்று சொல்லி அனுப்பினார்கள். பிறகு எழுந்து கழிப்பறைக்குச் சென்றுவிட்டார்கள். அதன் பின்னர் அவர்கள் வெளியே வந்து தண்ணீர் கேட்டு வாங்கி ஒரு கையளவு தண்ணீரைக் கொண்டு (கைகள்) மீது தடவினார்கள். பிறகு குர்ஆன் ஓதினார்கள். அவர்கள் இந்த செயலினால் ஆச்சர்யமடைந்தனர். அப்போது அவர்கள் சொன்னார்கள்: 'நபி (ஸல்) அவர்கள் கழிப்பறையிலிருந்து வெளியே வந்த பிறகு எங்களுக்குக் குர்ஆன் கற்றுக் கொடுத்தார்கள், எங்களோடு இறைச்சியை உண்டார்கள். எதுவும் அவர்களை தடுக்க வில்லை. அறிவிப்பாளர் சொன்னார்: குர்ஆனை ஓதுவதிலிருந்து எதுவும் தடுக்க வில்லை, குளிப்புக் கடமையைத் தவிர.

பாடம்: 92 குளிப்புக் கடமையானவரோடு கைகொடுக்க செய்ய அனுமதி

ஹதீஸ் எண்: 230

ஹுதைபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அவரை (ஹுதைபாவை) சந்தித்து கைகொடுப்பதற்காக அவரை நோக்கி வந்த போது, அவர் சொன்னார், 'நான் குளிப்புக் கடமையானவனாக இருக்கிறேன்'. அதற்கு நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள், 'ஒரு முஸ்லிம் அசுத்தமாக மாட்டார்'

ஹதீஸ் எண்: 231

மதீனாவின் ஒரு தெருவில் குளிப்புக்கடமையான என்னை நபி (ஸல்) அவர்கள் சந்தித்தார்கள். நான் பாதையை மாற்றிக் கொண்டு வேறு வழியாக சென்று விட்டேன். நான் குளித்து விட்டு நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். 'அபூஹுரைராவே! நீர்; எங்;கே சென்றிருந்தீர்' என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அப்போது நான், 'நான் குளிப்புக்கடமையானவனாக இருந்தேன், தூய்மையற்ற நிலையில் உங்கள் முன் அமர்ந்திருப்பதை வெறுத்தேன்' என்றேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! ஒரு முஸ்லிம் அசுத்தமாக மாட்டான்' என்றார்கள்.
அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
இமாம் அபூதாவூது அவர்கள் கூறுகிறார்கள்:

பிஸ்ர் அறிவிக்கும் இதே ஹதீஸில் பக்ர் என்பவரிடமிருந்து ஹுமைத் அறிவிக்கிறார்.
(குறிப்பு: 222 முதல் 231 வரை உள்ள ஹதீஸ்கள் லுஹா அவர்களின் மொழிபெயர்ப்பு அல்ல.)

**பாடம்: 93 குளிப்புக் கடமையானவர் பள்ளியில் பிரவேசித்தல்**

ஹதீஸ் எண்: 232

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்களின் வீட்டு வாயில்கள் (பள்ளிக்குள் வந்து போக வசதியாக பள்ளியை முன்னோக்கியவாறு) பள்ளியை ஒட்டி இருந்தன. அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) இந்த (வீட்டு) வாயில்களை பள்ளியை விட்டும் (வேறு திசையை) நோக்கி மாற்றியமையுங்கள் என்று கட்டளையிட்டார்கள். பிறகு அண்ணல் நபி (ஸல்) (வீட்டிற்குள் அல்லது பள்ளிக்குள்) நுழைந்து விட்டனர். தங்களுக்கு (இந்த உத்தரவில்) சலுகை கிடைக்கும் என்று மக்கள் எதிர்பார்த்து அவர்கள் எதையுமே செய்யாதிருந்தனர். இதற்கு பிறகு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவர்களிடம் வந்து, 'இந்த வீட்டு வாயில் பள்ளியை விட்டும் (வேறு திசையை நோக்கி) மாற்றியமையுங்கள். ஏனெனில் பள்ளியை மாதவிடாய் ஆனவளுக்கும், குளிப்புக் கடமையானவர்களுக்கும் (நுழைவதற்கு) நான் அனுமதிக்க மாட்டேன்' என்று சொன்னார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.
இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:

இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்லத் என்பவர் புலைத் அல்ஆமிரி ஆவார்.

**பாடம்: 94 குளிப்புக் கடமையானவர் மறதியாக மக்களுக்கு தொழுகை நடத்துதல்**

ஹதீஸ் எண்: 233

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் பஜ்ர் தொழுகையில் நுழைந்தார்கள். அப்போது 'நீங்கள் உங்களுடைய இடங்களில் இருந்து கொள்ளுங்கள்' என்று சைகை செய்தார்கள். பிறகு தனது தலையிலிருந்து நீர் சொட்டியவாறு வந்து அவர்களுக்கு தொழுகை நடத்தினார்கள்.
அறிவிப்பவர்: அபூபக்ரா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 234

இந்த ஹதீஸ் மேலுள்ள அதே இஸ்னாத், பொருளைக் கொண்டே இடம் பெறுகிறது. இதன் அறிவிப்பாளர்களில் ஒருவரான யசீத்; பின் ஹாரூன் இந்த ஹதீஸின் ஆரம்பத்தில் (நுழைந்தார்கள்) என்பதை அடுத்து தக்பீர் கூறினார்கள் என்றும் அதன் கடைசியில் 'அவர்கள் தொழுகையை முடித்த போது நானும் மனிதன் தான், நான் குளிப்புக் கடமையாக இருந்தேன்' என்று சொன்னார்கள் என்றும் அறிவிக்கின்றார்கள்.
இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

அபூஹுரைரா (ரலி) அவர்களிடமிருந்து அபூசலமா வாயிலாக ஜுஹ்ரி அவர்கள் இந்த ஹதீஸை அறிவிக்கும் போது அவர்கள் தான் தொழுமிடத்தில் நின்று அவர்கள் தக்பீர் சொல்வார்கள் என்று நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த போது அவர்கள் (தொழுகையை விட்டும்) திரும்பி விட்டார்கள். பிறகு 'அப்படியே இருங்கள்' என்று சொன்னார்கள் என்ற குறிப்பிடுகின்றனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தக்பீர் கூறினார்கள். பிறகு கையினால் மக்களுக்கு உட்காருங்கள் என்று சைகை செய்து விட்டு சென்று குளித்தார்கள் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து இந்த ஹதீஸை முர்ஸலாக முஹம்மத் அவர்கள் வாயிலாக அய்யூப், இப்னுஅவ்ன், ஹிஷாம் ஆகியோர் அறிவிக்கிறார்கள்.

இதே போன்று (முர்ஸலாக) 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் தக்பீர் சொன்னார்கள்' என்று அதா பின் யஸார் வழியாக இஸ்மாயீல் பின் அபூஹகீம் மூலம் இமாம் மாலிக் அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'தக்பீர் கூறினார்கள்' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து ரபீஃ பின் முஹம்மது, யஹ்யா, அபான் ஆகியோர் வாயிலாக இதை எமக்கு முஸ்லிம் பின் இப்ராகீம் அறிவிக்கின்றார்கள்.

ஹதீஸ் எண்: 235

இகாமத் சொல்லப்பட்டு மக்கள் அணியில் நின்றார்கள். அப்போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (இல்லத்திலிருந்து) வெளிவந்து தனது இடத்தில் வந்து நின்றதும் தான் குளிக்க வில்லை என்று அவர்களுக்கு

ஞாபகம் வந்தது. உடனே மக்களை நோக்கி உங்களுடைய இடத்தில் இருந்து கொள்ளுங்கள் என்று சொன்னார்கள். பிறகு தன்னுடைய வீட்டிற்கு திரும்பிச் சென்று குளித்துவிட்டு தனது தலையிலிருந்து நீர் சொட்டியவாறு அணியில் நின்று கொண்டிருந்த எங்களிடம் வந்தார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) அவர்கள்.

இது இதன் அறிவிப்பாளரான இப்னு ஹர்ப் என்பாரின் உரை நடையாகும். அய்யாஷ் என்பார் தனது அறிவிப்பில் 'அவர்கள் குளித்து விட்டு எங்களிடம் வருகின்ற வரை நாங்கள் அவர்களை நின்றவாறே எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம்' என்று கூறுகிறார்.

**பாடம்: 95 இரவில் தூங்கி எழுந்து ஆடையில் ஈரத்தை காணுதல்**

ஹதீஸ் எண்: 236

(ஒரு மனிதர் ஒரு மாதிரியான கனவு கண்டு விந்து வெளிப்பட்டதாக அவருக்கு நினைவு இல்லை) ஆனால் ஆடையில் ஈரத்தைக் காண்கிறார். (அவர் குளிக்க வேண்டுமா?) என்று நபி (ஸல்) அவர்களிடம் வினவப்பட்ட போது, 'அவர் குளிக்க வேண்டும்' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள். 'ஒருவர் (ஒரு மாதிரியான) கனவு கண்டதாக நினைவு கொள்கிறார். ஆனால் அவர் ஈரத்தைக் காண்வில்லை என்றால் (அவர் குளிக்க வேண்டுமா?) என்ற வினவப்பட்ட போது அவர் குளிக்க வேண்டியதில்லை' என்று பதிலளித்தார்கள். அப்போது உம்மு ஸுலைம் (ரலி) அன்ஹா அவர்கள் ஒரு பெண் இதை (ஈரத்தை) காணுகிறாள் என்றால் அவள் மீது குளிப்புக் கடமையாகுமா? என்று கேட்ட போது 'ஆம் பெண்கள் ஆண்களை (இது விஷயத்தில்) ஒத்தவர்கள் தான்' என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி) அவர்கள்.

**பாடம்: 96 ஆண்களை போன்று பெண்களும் ஈரத்தைக் கண்டால்**

ஹதீஸ் எண்: 237

ஆசியா, உம்முஸுலைம் அனஸ் பின் மாலிக் அவர்களின் தாயார் அவர்கள், அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! உண்மையைக் கூற அல்லாஹ் வெட்கமடைய மாட்டான். ஒரு பெண் தூக்கத்தில் ஆண் காண்பதையே கண்டால் அவள் குளிக்க வேண்டுமா? அல்லது வேண்டாமா? தாங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்று வினவிய போது, 'ஆம் அவள் நீரைக் கண்டால் குளிக்க வேண்டும்' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள் என அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறி அன்னையார் அவர்கள் தொடர்ந்து அறிவிக்கின்றார்கள்: நான் அவர்களை (உம்முஸுலைம்) நோக்கி சீ! ஒரு பெண்ணும் இதை காண்பாளா? என்று கேட்ட போது, அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் என்னை நோக்கி, 'ஆயிஷாவே! உனது வலக்கரம் மண்ணை தழுவட்டும்' பின் எவ்வாறு (தாய்க்கும் பிள்ளைக்கும் இடையே உருவ) ஒற்றுமை தோன்றுகிறது? என்று கேட்டார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

ஜுஹ்ரி அவர்களிடமிருந்து மாலிக் அவர்கள் மூலம் ஜுபைதி, உகைல், யூனுஸ், ஜுஹ்ரி அவர்களுடைய சகோதரன் மகனும், ஜுஹ்ரி அவர்களிடமிருந்து மாலிக் மூலம் இப்ராகீம் பின் அபுல் வசீர் ஆகியோரும் இவ்வாறே அறிவிக்கின்றனர்.

ஜுஹ்ரி அவர்களுக்கு உடன்பட்டு முஸாபி∴ அல்ஹஜபீ என்பார் 'ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து உர்வா மூலம் என்றே அறிவிக்கின்றார். ஆனால் ஹிஷாம் பின் உர்வா அவர்கள் உம்முஸுலைம் அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்' என்று உம்முஸலமா, ஜைனப் பின்த் அபீஸலமா வாயிலாக உர்வா அவர்களிடமிருந்து என்று அறிவிக்கிறார்.

**பாடம்: 97 குளிப்பதற்கு போதுமான தண்ணீர் அளவு**

**ஹதீஸ் எண்:** 238

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை ஒரு பரக் அளவு பாத்திரத்தில் நிறைவேற்றுவார்கள். அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

ஒரு பரக் அளவு (நீர்) கொள்ளும் ஒரே பாத்திரத்தில் நானும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களும் குளிப்போம் என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்தார்கள் என்று இந்த ஹதீஸில் ஜுஹ்ரி வாயிலாக ம∴மர் அறிவிக்கின்றார்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

மாலிக் அவர்களின் (முதலிலுள்ள) ஹதீஸை போன்று இப்னு உஜனா அவர்களும் அறிவிக்கின்றார்.
மேலும் இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

பரக் என்பது 16 ராத்தல்களாகும்.
குறிப்பு: வழக்கொழிந்து விட்ட இந்த ராத்தல் முறையை வைத்து நாம் பரக் என்பதற்கு விளக்கம் காண்பது மிகவும் சிரமம்;. ஒரு பரக் எத்தனை 'சாஉ' க்களைக் கொண்டது என்பதை வைத்து அதன் அளவை நாம் அறியலாம்.

மூன்று 'சாஉ'க்கள் கொண்டது ஒரு பரக் ஆகும் என்று சுப்யான் பின் உஜனா அவர்கள் கூறுவதாக முஸ்லிமில் வரும் அறிவிப்பு தெரிவிக்கிறது.

இவ்வாறே ஒரு பெருங்கூட்டம் தெரிவிக்கின்றது என்று இமாம் நவவீ அவர்கள் தெரிவிக்கின்றார்கள். (அவ்னுல் ம∴பூத்)

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் 'சாஉ' என்பது நான்கு முத்துகள் ஆகும் என புகாரியின் விளக்கவுரையில் கிர்மானி என்பவர் கூறுகின்றார். நடுத்தரமான ஒரு மனிதரின் இரு சிரங்கைகள் நிரம்பியிருப்பது ஒர முத்து ஆகும் என்று காமூஸ் (அரபி அகராதி) தெரிவிக்கின்றது. (அவ்னுல் ம∴பூத்)

**பாடம்: 98 கடமையான குளிப்பை நிறைவேற்றும் முறை**

ஹதீஸ் எண்: 239

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் முன்னிலையில் கடமையான குளிப்பு பற்றி பேசி கொண்டிருந்தனர் அப்போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) நான் எனது தலையில் மூன்று தடவை (நீரை) ஊற்றுவேன் என்று கூறி மேலும் தனது இரு கைகளில் எப்படி ஊற்றுவது என்று சைகை செய்து காட்டினார்கள்.

அறிவிப்பவர்: ஜுபைர் இப்னு முத்இம் (ரலி)

ஹதீஸ் எண்: 240

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றுவதாக இருந்தால் ஹிலாபை கொண்டு வரச் செய்வார்கள். பிறகு தன் கைகளால் அள்ளி தனது தலை (முழுவதும்) யில் ஊற்றுவார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

ஹலாப் ஒரு ஒட்டகையில் கரக்கும் பாலை கொள்கின்ற பாத்திரமாகும்.

ஹதீஸ் எண்: 241

நான் எனது தாயாருடனும், சிறிய தாயாருடனும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் சென்றிருந்தோம். அப்போது அவ்விருவர்களில் ஒருவர் குளிக்கும் போது என்ன செய்வீர்கள்? என்று அன்னையாரிடம் வினவினார். அதற்கு அன்னையார் அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தொழுகைக்கு உலூச் செய்வது போன்று உலூச் செய்வார்கள் பிறகு தனது தலையில் மூன்று தடவை தண்ணீரை ஊற்றுவார்கள் நாங்கள் எங்களது தலைகளில் (தலைமுடி) பின்னல்கள் காரணமாக ஐந்து தடவைகள் ஊற்றுவோம் என்று பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: ஜுமைஃபின் உமைர் அவர்கள்

ஹதீஸ் எண்: 242

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்: அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும் போது இரு கைகளையும் கழுவி நீரை வலது கையின் மீது ஊற்றுவார்கள். பிறகு மர்மஸ்தானத்தை கழுவுவார்கள். பிறகு இடது கைக்கு ஊற்றுவார்கள் பிறகு தொழுகைக்கு உலூச் செய்வார்கள். பிறகு தம் இருகைகளையும் பாத்திரத்தில் நுழைத்து (தண்ணீர் எடுத்து) தம் தலையை கோதி விடுவார்கள். (தலையின்) அடிப்பாகம் நனைந்து விட்டது என்று தோன்றியதும் தம் தலையில் மூன்று தடவை ஊற்றிக் கொள்வார்கள். அதற்கு பிறகு தண்ணீர் மிச்சமாக இருந்தால் தலையில் ஊற்றி விடுவார்கள்.

ஹதீஸ் எண்: 243

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்ற விரும்பினால் தன் முன்னங்கைகளைக் கழுவத் துவங்கி அவ்விரண்டையும் கழுவிய பின்பு கைகால்களின் அந்தரங்கப் பகுதிகளை

கழுவி பிறகு தண்ணீர் ஊற்றுவார்கள். இரு கைகளையும் அவர்கள் சுத்தம் செய்ததும் அவ்விருகைகளையும் சுவரில் தேய்ப்பார்கள். பிறகு உலூச் செய்து தனது தலையில் தண்ணீர் ஊற்றுவார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்

ஹதீஸ் எண்: 244

நீங்கள் விரும்பினால் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும் இடத்தில் உள்ள சுவரில் அவர்களின் கைத்தடத்தை உங்களுக்கு காட்டுவேன் என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஷுஃபீ அவர்கள்

ஹதீஸ் எண்: 245

நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு கடமையான குளிப்பை நிறைவேற்ற தண்ணீர் எடுத்து வைத்தேன். அவர்கள் பாத்திரத்தை தனது வலது கையில் சாய்த்து (ஊற்றி) அதை இரு தடவைகளோ அல்லது மூன்று தடவைகளோ கழுவினார்கள். பிறகு தனது மறைவு உறுப்பில் (நீர்) ஊற்றி தன் மறைவு உறுப்பை இடது கையினால் கழுவினார்கள். பிறகு தனது கையை தரையில் தேய்த்து அதையும் கழுவினார்கள். பிறகு வாய்க்கொப்பளித்து, நாசிக்கு நீர் செலுத்தினார்கள். பிறகு தனது முகத்தையும் இருகைகளையும் கழுவினார்கள். பிறகு தனது தலைக்கும் தனது உடலுக்கும் தண்ணீர் ஊற்றினார்கள். பிறகு குளிக்கும் இடத்தை விட்டு கொஞ்சம் தள்ளி நின்று தனது இரு கால்களையும் கழுவினார்கள். அவர்களுக்கு நான் (துடைப்பதற்கு) துண்டு கொடுத்தேன் அவர்கள் அதை எடுக்கவில்லை. அவர்கள் தனது உடலிலிருந்த தண்ணீரை உதறி விட்டேன்.
அறிவிப்பவர்: அன்னை மைமூனா (ரலி) அவர்கள்
(இதன் அறிவிப்பாளர் அஃமத் கூறுகின்றார்) இந்த (துடைக்கவில்லை என்ற) செய்தியை இப்ராகீம் அன்னநயீ அவர்களிடம் வினவினேன். அதற்கு அவர் (நபித்தோழர்கள்) துண்டைக் கொண்டு துடைப்பதை தவறாக கருதவில்லை. ஆனால் வழக்கமாக செய்வதை விரும்பவில்லை என்று பதிலளித்தார்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:
முஸத்தத் தெரிவிக்கின்றார்.

நான் (இதன் அறிவிப்பாளரான) அப்துல்லாஹ் பின் தாவூத் அவர்களிடம் வழக்கமாக செய்வதற்காகத்தான் இதை அவர்கள் விரும்பவில்லையா என்று வினவிய போது அது அப்படித்தான் என்று சொன்னார்கள் எனினும் இந்த எனது இந்த நூலில் இவ்வாறு (ஹதீஸ் மட்டும்) தான் உள்ளது.

ஹதீஸ் எண்: 246

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கடமையான குளிப்பை நிறைவேற்றும் போது தனது வலது கையால் இடது கைக்கு ஒரு தடவை தண்ணீர் ஊற்றுவார்கள். பிறகு தனது மறைவு உறுப்பை கழுவுவார்கள். தான் எத்தனை தடவை ஊற்றினோம் என்பதை அவர்கள் ஒரு தடவை மறந்து விட்ட போது

என்னிடம் நான் எத்தனை தடவை ஊற்றினேன் என்று வினவினார்கள். நான் எனக்கு தெரியாது என்று சொன்னதும் உனக்குத் தாய் இல்லாமல் போகட்டும்! ஏன் உனக்குத் தெரியவில்லை என்று கேட்டார்கள். பிறகு அவர்கள் தொழுகைக்கு உலூச் செய்வது போன்று உலூச் செய்வார்கள். பிறகு தன் மேனியில் தண்ணீரை ஊற்றுவார்கள். பிறகு இவ்வாறு தான் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் குளிப்பார்கள் என கூறுவார்கள்.
அறிவிப்பவர்: ஷுஃபா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 247

ஐம்பது நேரங்கள் தொழவேண்டும் குளிப்பு கடமையாகி விட்டால் எழு முறை குளிக்க வேண்டும். சிறுநீர் பட்ட ஆடையை ஏழு முறை கழுவ வேண்டும் என்ற சட்டம் இருந்தது. அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் (இதனை மாற்றுமாறு அல்லாஹ்விடம்) கேட்டுக் கொண்டே இருந்தார்கள். (முடிவில்) தொழுகை ஐந்தாகவும், கடமையான குளிப்பு ஒரு தடவையாகவும், ஆடையில் பட்ட சிறுநீரை ஒரு தடவை கழுவுவதெனவும் ஆக்கப்பட்டது.
அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 248

ஒவ்வொரு முடியின் அடிப்பகுதியிலும் தீட்டு இருக்கிறது. எனவே முடியை நன்கு கழுவுங்கள். மேலும் மேனியை சுத்தம் செய்யுங்கள் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) அவர்கள்.
இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: இதன் அறிவிப்பாளரான ஹரீஸ் பின் வஜீஹ் என்பவரின் ஹதீஸ் முன்கராகும். (நிராகரிக்கப் படக்கூடியதாகும்) இவர் பலவீனமானவராவார்.

ஹதீஸ் எண்: 249

கடமையான குளிப்பை நிறைவேற்றும் போது ஒருவர் ஒரு முடியின் இடத்தை கழுவாது விட்டுவிடுவாராயின் அவருக்கு நரகத்தின் இன்னின்னவாறு (வேதனை) செய்யப்படுகிறது என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். இதனால் தான் நான் எனது முடியை வெறுத்து (வெட்டி) விட்டேன் என்று அலி (ரலி) அவர்கள் மூன்று தடவை கூறினார்கள். மேலும் அவர்கள் முடியை வெட்டும் வழக்கமுடையவராக இருந்தார்கள்.

## பாடம்: 99 குளித்த பின் உலூச் செய்தல்

ஹதீஸ் எண்: 250

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குளிப்பார்கள் (பஜ்ரின் முன் சுன்னத்தான) இரண்டு ரக்அத்துக்களையும், பஜ்ர் தொழுகையையும் அவர்கள் தொழுவார்கள். மேலும் அவர்கள் குளித்தபின் புதிதாக உலூச் செய்வார்கள் என்று நான் கருதவில்லை.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

**பாடம்: 100 குளிக்கும் போது பின்னலை பெண்கள் அவிழ்த்து விடுதல்**

ஹதீஸ் எண்: 251

முஸ்லிம்களில் ஒரு பெண்மணி, அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களே! நான் தலையை இறுக்கமாக பின்னிக் கொள்பவளாக இருக்கிறேன். கடமையான குளிப்பின் போது நான் (அதனை) அவிழ்த்து விட வேண்டுமா? என்று வினவிய போது 'நீ அதன் மீது இருகை நிரம்ப தண்ணீரை ஊற்று. ஊற்றுவதே உனக்குப் போதுமானதாகும். பிறகு உனது உடலின் மற்ற பகுதியில் நீரை ஊற்றிக் கொள். நீ அப்போது தூய்மையாகி விடுவாய்' என்று அவர்கள் பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்: உம்முஸலமா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 252

உம்முஸலமா (ரலி) அவர்களிடம் ஒரு பெண்மணி வந்தார்கள் என்று இந்த ஹதீஸை இதன் அறிவிப்பாளர் அறிவிக்கின்ற போது 'அப்பெண்மணிக்காக நான் நபி (ஸல்) அவர்களிடம் (விளக்கம்) கேட்டேன்' என்று உம்முஸலமா (ரலி) அவர்கள் கூறினார்கள் என்று மேலுள்ள ஹதீஸின் பொருளையே தெரிவிக்கின்றனர். ஒவ்வொரு இரு கையளவு நீரின் போதும் உனது பின்னலை அழுந்த தேய்ப்பாயாக என்று (அண்ணலார் கூறியதாக) இதில் அறிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 253

எங்களில் ஒருத்திக்கு குளிப்புக்கடமை ஏற்பட்டு விட்டால் அவள் மூன்று தடவை இரு கைகள் அளவு தண்ணீரை இவ்வாறு (என்று அன்னையர் அவர்கள்) தனது இரு கைகளையும் இணைத்துக் காட்டினார்கள். அள்ளி தனது தலையில் ஊற்றும் போது ஒரு கை(யளவு தண்ணீரை)யை எடுத்து (தலையின்) ஒரு பகுதியில் ஊற்றுவாள். இன்னொரு கை(யளவு தண்ணீரை)யை இன்னொரு பக்கம் ஊற்றுவாள் என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஸபிய்யா பின் ஷைபா அவர்கள்.

ஹதீஸ் எண்: 254

நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் இஹ்ராம் கட்டியவர்களாகவும், கட்டாதவர்களாகவும் இருக்கும் போது எங்களுடைய தலைகளின் மீது லிமாத் (லிமாத் என்றால் தலையில் இருகக் கட்டியுள்ள துணி) இருக்கும் நிலையிலேயே குளிப்போம்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்

ஹதீஸ் எண்: 255

தங்களுக்கு ஸப்வான் (ரலி) அவர்கள் (கீழ்கண்டவாறு) அறிவித்தார்கள் என கடமையான குளிப்பு முறையை பற்றி எனக்கு ஜுபைர் பின் நுபைர் தீர்ப்பளித்தார். (சப்வான் இன்னும் மற்றவர்களும்) கடமையான குளிப்பு முறை பற்றி அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் தீர்ப்புக் கோரிய போது 'ஒரு ஆண்

(குளிக்கும் போது) தனது தலை முடியை விரித்து விட வேண்டும். பிறகு முடிகளின் அடிக்காம்புகளுக்கு நீர் சென்று அடையும் அளவுக்கு அதை அவர் கழுவ வேண்டும். ஒரு பெண் அவள் மீது (முடியை) அவிழ்த்து விடாமல் இருப்பது தவறில்லை. அவள் தமது இருகைகளால் மூன்று தடவைகள் தண்ணீரை அள்ளி தலையில் விட வேண்டும்' என்று அண்ணலார் பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: ஷுரைஹ் பின் அபீத் அவர்கள்

**பாடம்: 101 மூலிகையைத் தேய்த்து கடமையான குளிப்பை நிறைவேற்றுதல்**

ஹதீஸ் எண்: 256

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கடமையான குளிப்பின் போது தனது தலையை கித்மிய்யா (என்ற மூலிகையி)னால் தேய்த்து கழுவுவார்கள். இதைக் கொண்டே போதுமாக்கிக் கொள்வார்கள். இதற்கு மேல் தண்ணீர் ஊற்ற மாட்டார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்

**பாடம்: 102 கடமையான குளிப்பை நிறைவேற்றுதல்**

ஹதீஸ் எண்: 257

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் (உடலுறவின் போது வழிகின்ற) இந்திரியம் தொடர்பாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிடும் போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு கையளவு தண்ணீர் எடுத்து இந்திரியம் பட்ட இடத்தில் ஊற்றுவார்கள். பிறகு ஒரு கையளவு நீர் எடுத்து அதில் (மறைவுறுப்பில்) ஊற்றுவார்கள் என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஸவாஆ பின் ஆமிர் கிளையினரில் ஒருவர்.

**பாடம்: 103 மாதவிலக்கான பெண்ணுடன் உண்ணுதல், உடலுறவு கொள்ளுதல்**

ஹதீஸ் எண்: 258

யூதர்கள் தங்களுடைய இனத்தில் ஒரு பெண் மாதவிலக்காகி விட்டால் அவளை வீட்டிலிருந்து வெளியேற்றி விடுவார்கள். அவளுடன் அவர்கள் சேர்ந்து உண்ணவும், குடிக்கவும் மாட்டார்கள். எனவே, இதைப் பற்றி அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வினவப்பட்ட போது, (நபியே!) மாதவிடாய் பற்றி அவர்கள் உம்மிடம் கேட்கிறார்கள். நீர் கூறும் 'அது (அசுத்தமான) ஓர் உபாதை. எனவே மாதவிடாய் காலத்தில் பெண்களை (உடலுறவு செய்வதை விட்டும்) விலகி இருங்கள்' (2:222) என்ற வசனத்தை அல்லாஹ் இறக்கியருளினான். எனவே அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள், 'வீடுகளில் அவர்களுடன் ஒன்று கலந்திருங்கள், உடலுறவைத் தவிர அனைத்தையும் செய்து கொள்ளுங்கள்' என்று சொன்னார்கள். உடனே யூதர்கள், இவர் (முஹம்மது (ஸல்)) நம்முடைய காரியத்தில் எதையுமே விட்டு வைக்க விரும்ப வில்லை. அதில் அவர் நமக்கு வேறுபாடு காட்டாமல் விட்டு

வைப்பதில்லை என்று பேசிக் கொண்டனர். அப்போது உசைத் பின் ஹுபைர், அப்பாத் பின் பிஷ்ர் ஆகிய இருவரும் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! யூதர்கள் இன்னின்னவாறு பேசிக் கொள்கிறார்களே! நாம் (யூதர்களுக்கு முழுமையாக வேறுபடுகின்ற விதத்தில்) ஏன் அவர்களிடம் (பெண்களிடம்) மாதவிடாய் காலத்திலும் உடலுறவு கொள்ளக் கூடாது? என்று அவர்களிருவரும் வினவியதும், அண்ணலார் (ஸல்) அவர்களின் முகம் (சினத்தால்) மாறி விட்டது. அவ்விருவரின் மீதும் அவர்கள் (கடுமையாக) கோபமடைந்து விட்டார்கள் என்றே நாங்கள் கருதினோம். உடனே அவ்விருவரும் புறப்பட்டு சென்றனர். அப்போது அவர்களுக்கு எதிரிலேயே அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுக்கு அன்பளிப்பாக பால் வந்தது. அவர்கள் அவ்விருவரும் சென்ற தடத்தில் (ஆள்) அனுப்பி (அழைத்து வரச் செய்து) அவ்விருவரையும் பால் அருந்தச் செய்தனர். அப்போது நாங்கள் அவர்கள் அவ்விருவர் மீதும் கோபங்கொள்ள வில்லை என்று எண்ணிக் கொண்டோம்.
அறிவிப்பவர்: அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 259

நான் மாதவிலக்காக இருக்கும் போது எலும்பை (கொண்ட இறைச்சியை) கடிப்பேன். பிறகு நான் அதை அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு கொடுப்பேன். அவர்கள் நான் வாய்வைத்த அதே இடத்திலேயே வாய் வைத்து சாப்பிடுவார்கள். நான் பானம் பருகிவிட்டு அதை அவர்களிடம் அளிப்பேன். நான் எந்த இடத்தில் (வாய் வைத்து) பருகினேனோ அதே இடத்தில் அவர்களும் வாய் வைத்து பருகுவார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 260

நான் மாதவிலக்காக இருக்கும் போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தனது தலையை என் மடியில் வைத்து (படுத்து) இருப்பார்கள் அப்போது அவர்கள் (குர்ஆன்) ஓதுவார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 261

(வெளியே நின்று கொண்டு) பள்ளியிலிருந்து, 'தொழுகை விரிப்பை எனக்கு எடுத்துத் தா' என்று என்னிடம் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம் கேட்ட போது நான் மாதவிலக்கானவள் என்று பதிலளித்தேன். அதற்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் 'உன் மாதவிலக்கு உன் கையில் இல்லை' என்று சொன்னார்கள்.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்

**பாடம்: 105 மாதவிலக்கானவள் தொழுகையை களா செய்யத் தேவையில்லை**

ஹதீஸ் எண்: 262

ஒரு பெண்மணி அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடம் மாதவிலக்கானவள் தொழுகையை களா செய்ய வேண்டுமா? என்று வினவிய போது அன்னையார் அவர்கள் (அவளை நோக்கி) நீ ஹரூரிய்யா (ஹரூரைச் சார்ந்தவள்) தானே? (என்று கேட்டுவிட்டு) அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் நாங்கள் மாதவிலக்காவோம். அப்போது நாங்கள் (தொழுகையை) களாச் செய்யமாட்டோம். நாங்கள் தொழுகையைக் களாச் செய்யும்படி கட்டளையிடப்படவும் இல்லை என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: முஆதா அவர்கள்

ஹதீஸ் எண்: 263

இதே ஹதீஸ் பின்வரும் அறிவிப்பாளர் வழியாக பதிவு செய்யப்பட்டுள்ளது. அறிவிப்பாளர் தொடர்....

நோன்பை களாச் செய்யும்படி நாங்கள் கட்டளையிடப் பட்டோம். ஆனால் தொழுகையை களாச் செய்யும்படி நாங்கள் கட்டளையிடப்பட வில்லை என்று இதன் அறிவிப்பாளர் கூடுதலாக அறிவிக்கிறார் என இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்.

**பாடம்: 106 மாதவிலக்கானவளிடம் உடலுறவு கொள்ளல்**

ஹதீஸ் எண்: 264

யார் தனது மனைவி மாதவிலக்காக இருக்கும் போது உடலுறவு கொள்கிறாரோ அவர் ஒரு தீனார் அல்லது அரை தீனார் தர்மம் செய்வாராக! என்று அண்ணல் நபி (ஸல்) சொன்னார்கள்.
அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள்
இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்:

ஒரு தீனார் அல்லது அரை தீனார் என்று கூறியதாகத்தான் சரியான அறிவிப்பு வந்துள்ளது.

நபி (ஸல்) கூறியதாக அறிவிக்கும் ஷுஃபா வேறொரு அறிவிப்பில் இப்னு அப்பாஸ் கூறுவதாக அறிவிக்கிறார்.

ஹதீஸ் எண்: 265

ஒருவர் தன் மனைவியை மாதவிடாய் துவக்கத்தில் உடலுறவு கொண்டால் ஒரு தீனார்! அவளை மாதவிடாய் நின்று போகும் போது உடலுறவு கொண்டால் அரை தீனார்! (தர்மம் செய்ய வேண்டும்) என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.
அறிவிப்பவர்: மிக்ஸம் அவர்கள்

ஹதீஸ் எண்: 266

ஒருவர் தனது மனைவியிடம் அவள் மாதவிலக்காக இருக்கும் போது உடலுறவு கொண்டால் அவர் அரை தீனார் தர்மம் செய்வாராக! என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி)

இமாம் அபூதாவூது குறிப்பிடுகிறார்கள்:

இதைப் போன்று தான் அலீ பின் பதீமா அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வழியாக முர்ஸலாக அறிவிக்கிறார்.

'அவ்(வாறு உடலுறவு கொண்ட)வர் ஒரு தீனாரில் ஐந்தில் இரண்டை தர்மம் செய்ய வேண்டும் என்று நான் அவருக்கு உத்திரவிடுகின்றேன்' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அவ்ஸாஹீ அவர்கள் அறிவிக்கிறன்றார். இந்த ஹதீஸ் - முர்ஸல் - அதாவது இதன் அறிவிப்பாளர்கள் வரிசையில் தொடராக இருவர் அல்லது இருவருக்கும் மேல் விடுபட்ட தொடர் ஆகும்.

குறிப்பு: சஹீஹான (சரியான) அறிவிப்பு ஒரு தீனார் அல்லது அரை தீனார் என்று தான் வந்துள்ளது என்று இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிட்டதிலிருந்து ஒரு தீனார் என்றும் அரை தீனார் என்றும் அறிவிக்கப்படுகின்ற இந்த ஹதீஸ்கள் சரியானவை அல்ல என்பதை கருத்தில் கொள்ளவும்.

## பாடம்: 107 உடலுறவு அல்லாத காரியம் செய்தல்

ஹதீஸ் எண்: 267

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தனது மனைவியர்களில் மாதவிலக்காகி இருக்கும் மனைவியை அவர் மே(னியி)ல் பாதி தொடைகள் வரை அல்லது முட்டுகள் வரை மறைக்கின்ற ஆடையிருக்கும் போது கட்டி அணைப்பார்கள்.

அறிவிப்பவர்: மைமூனா (ரலி) அவர்கள்

ஹதீஸ் எண்: 269

நான் மாதவிலக்காகி இருக்கும் போது நானும், அல்லாஹ்வுடைய திருத்தூதர் (ஸல்) அவர்களும் (இடுப்பாடை அல்லாத) ஒரே மேலாடையில் (இருவரும் படுத்து) இரவைக் கழிப்போம். என்னிடமிருந்து எதுவும் (இரத்தம்) அதில் (அவ்வாடையில்) பட்டு விடும்போது அதனுடைய இடத்தை (மட்டும்) அ(து பட்ட இடத்)தை மட்டும் அவர்கள் கழுவுவார்கள். பிறகு அதை அணிந்தவாறு தொழுது கொள்வார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 270

எங்களில் ஒருவர் மாதவிலக்காகி விடுவார். அவளுக்கும் அவருடைய கணவருக்கும் ஒரு விரிப்பைத் தவிர இருக்காது. (அப்போது என்ன செய்ய வேண்டும்?) என்று தனது அத்தை ஆயிஷா (ரலி) அவர்களிடம் வினவிய

போது, அன்னையார் அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் என்ன செய்தார்கள் என்பதை உனக்கு அறிவிக்கிறேன் என்று (பின்வருமாறு) கூறினார்கள். அவர்கள் (நான் மாத விலக்காகி இருக்கும் போது என்னிடம்) வந்தார்கள். பிறகு உடனே அவர்கள் தனது பள்ளிக்கு (இங்கு இமாம் அபூதாவூது அவர்கள் அண்ணலார் அவர்களது வீட்டில் உள்ள பள்ளி (தொழுமிடம்) என்று குறிப்பிடுகிறார்கள்) சென்றார்கள். எனது கண்கள் (உறக்கத்தில்) என்னை ஆட்கொள்ளும் வரை அவர்கள் திரும்பவில்லை. அவர்களை குளிர் வதைத்ததும் (என்னிடம் வந்து) நீ நெருங்கி வா! என்று கூறினார்கள். நான் மாதவிலக்கானவள் என்று பதிலளித்தேன். அப்போது அவர்கள் உனது தொடைகளை வெளிப்படுத்துக என்று சொன்னதும் எனது தொடைகளை வெளிப்படுத்தினேன். அவர்கள் தனது கன்னத்தையும் மார்பையும் எனது தொடையின் மீது வை(த்துப்படு)த்தார்கள். நான் அவர்கள் மீது குப்புற சாய்ந்தேன். அவர்கள் (உடல்) சூடாகி (வெதுவெதுப்படைந்து) உறங்கி விட்டார்கள் என்று தனக்கு தன் அத்தை அறிவித்ததாக உமார பின் குராப் அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

குறிப்பு: உமார பின் குராப்: இவர் அறியப்படாதவர் என்று ஹாபிழ் அறிவிக்கும் அப்துற்றஹ்மான் பின் ஸியாஹ், அப்துல்லாஹ் பின் உமர் பின் கானிம் ஆகியோர் அனைவரின் ஹதீஸையும் ஆதாரமாக கொள்ளப்படாது என்று முன்தரி அவர்கள் கூறுகின்றார்கள்.

ஹதீஸ் எண்: 271

நான் மாதவிலக்கடைந்து விட்டால் விரிப்பை விட்டு விலகி பாய்க்கு வந்து விடுவேன். நாங்கள் சுத்தமாகும் வரை அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை நெருங்கவும் மாட்டோம் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்

ஹதீஸ் எண்: 272

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மாதவிலக்கானவரிடம் எதையும் விரும்பினால் அ(ம்மனைவியருடைய)வருடைய மறைவுறுப்பில் ஆடை இருக்கச் செய்வார்கள்.

அறிவிப்பவர்: அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனைவியருள் ஒருவர் (குறிப்பு: இதன் இஸ்நாத் மிகவும் வலுவானது என்று ஹாபிழ்; இப்னு ஹஜர் அவர்கள் பத்ஹுல் பாரியில் குறிப்படுகின்றார்.)

ஹதீஸ் எண்: 273

எங்களுடைய மாதவிடாய் பெருக்கெடுக்கும் போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் எங்களை இடுப்பாடை உடுத்தும் படி கட்டளையிடுவார்கள். பிறகு எங்களை கட்டியணைப்பார்கள். உங்களில் யார் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் தனது தேவையை கட்டுப்படுத்துவது போன்று தனது தேவையை கட்டுப்படுத்த முடியும்? என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி)

**பாடம்: 108 சூதக இரத்தம் காணும் பெண்மணி தொழுகையை விடலாமா?**

ஹதீஸ் எண்: 274

ஒரு பெண்மணிக்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் சூதக ரத்த கசிவு அதிகமாகி விட்டது. அவளுக்காக உம்மு ஸலமா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் மார்க்கத் தீர்ப்புக் கோரினார்கள். அப்போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) பின்வருமாறு கூறினார்கள். இப்போது அவளை பிடித்திருக்கும் இது (இந்த சூதக இரத்தப்போக்கு) அவளுக்கு ஏற்படுவதற்கு முன்பு ஒரு மாதத்தில் அவள் (வழமையாக) மாதவிலக்கான அந்த இரவு, பகல்களின் எண்ணிக்கையை கணக்கிட்டு (இப்போது) ஒரு மாதத்தில் அந்த அளவிற்கு தொழுகையை விட்டு விடுவாளாக! அந்த (நாட்கள்) அளவை அவள் கடந்ததும் குளித்து, கட்டிக் கொள்வாளாக!

அறிவிப்பாளர்: உம்மு ஸல்மா (ரலி)

(குறிப்பு: இந்த ஹதீஸ் ஹஸன் ஆகும் என்று ஹாபிழ் முன்திரி அவர்கள் கூறுகின்றார்கள்.)

ஹதீஸ் எண்: 275

ஒரு பெண்மணிக்கு சூதக இரத்தப் போக்கு ஏற்பட்டு விட்டது என்று இதன் அறிவிப்பாளர் மேலுள்ள ஹதீஸின் கருத்தை கூறும் போது 'அந்த (நாட்கள்) அளவை அவள் கடந்ததும், தொழுகை (நேரம்) வந்தவுடன் அவள் குளிப்பாளாக! என்று மீதி உள்ள ஹதீஸை அதே கருத்தை போன்றே தொடர்ந்து இங்கும் தெரிவிக்கின்றார்.

அறிவிப்பாளர்: உம்மு ஸல்மா (ரலி)

(குறிப்பு: இதை இமாம் நஸயீ, இப்னுமாஜா ஆகியோர் பதிவு செய்துள்ளார்கள். இந்த தொடரில் அறியப்படாத ஒருவர் இடம் பெறுகின்றார்.)

ஹதீஸ் எண்: 276

ஒரு பெண்மணிக்கு சூதக இரத்தப் போக்கு ஏற்பட்டு விட்டது என்று இதன் அறிவிப்பாளர் லைஸ் அவர்களின் கருத்தை கூறும் போது அந்த (நாட்கள்) அளவை அவள் கடந்ததும், தொழுகை (நேரம்) வந்தவுடன் அவள் குளிப்பாளாக! என்று அறிவித்து மீதி உள்ள ஹதீஸை அதே கருத்தில் தொடர்கிறார்.

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் மஸ்லமா

(குறிப்பு: இங்கே 277 முதல் 296 வரையிலான ஹதீஸ்கள் விடுபட்டுள்ளன, பின்னர் மொழிபெயர்ப்பு செய்யப்படும் இன்ஷா அல்லாஹ்)

பாடம்: 113 உதிரப் போக்குடையவள் ஒவ்வொரு தொழுகைக்கும் குளிக்காமல் மாதவிடாய் நிற்கும் சமயத்தில் மட்டும் குளித்தல்.

ஹதீஸ் எண்: 297

சூதக இரத்தப் போக்குள்ளவர் தொடர்பாக அவர் தனது மாதவிடாய் நாட்களில் (மட்டும்) தொழுகையை விட்டு விடுவாராக! பிறகு குளித்து,

தொழுவாராக! மேலும், ஒவ்வொரு தொழுகைக்கும் உளுச் செய்தல் வேண்டும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர்: முஹம்மது ஜாபிர் பின் ஜியாத்
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்: உஸ்மான் பின் அபீஷைபா 'அவர் நோன்பு நோற்பாராக மேலும் தொழுவாராக!' என்று கூடுதலாக அறிவிக்கின்றார்.
(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் திர்மிதி, இப்னுமாஜா ஆகியோரும் தமது நூற்களில் பதிவு செய்துள்ளனர். கூபா நகரின் நீதிபதியான ஷரீக் என்பாரை அனேகர் குறை கூறியுள்ளனர். கூபா நகரத்தைச் சார்ந்த அபூல் யக்லான் என்ற உஸ்மான் பின் அபீர் என்பாரின் ஹதீஸை ஆதாரமாக கொள்ளப்படாது.)

ஹதீஸ் எண்: 298

பாத்திமா பின்;த் அபீஷுபைஷ் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள் என்று அன்னை ஆயிஷா (ரலி) அறிவித்தார்கள் என்று இதன் அறிவிப்பாளர் அவர்களுடைய நிகழ்ச்சியைத் தெரிவிக்கின்றார். 'பிறகு நீ குளித்துக் கொள், பிறகு ஒவ்வொரு தொழுகைக்கும் நீ உளுச் செய்து, தொழுது கொள்' என்று கூறியதாகவும் அறிவிக்கின்றார்.
அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி)

ஹதீஸ் எண்: 299

சூதக இரத்தப் போக்குள்ளவர் தொடர்பாக அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் 'அப்படிப்பட்டவர் (ஒரு தடவை மட்டும் குளிப்பாராக! பிறகு தனது மாதவிடாய் நாட்கள் வரை உளுச் செய்வாராக' என்று கூறுகின்றார்கள்.
அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி)

ஹதீஸ் எண்: 300

இதைப் போன்று அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் மஸ்ரூக் அவர்களின் மனைவி இப்னு ஷுர்மா அய்யூப் அபுல்அலா யசீத் வழியாக அஹ்மத் பின் ஸினான் அறிவிக்கின்றார்.
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்: அதீபின் சாபித் அவர்களுடைய (297வது) ஹதீஸ், ஹபீப் அவர்களிடமிருந்து அஃமஷ் அறிவிக்கின்ற (298வது) ஹதீஸ், அய்யூப் அபில்அலா அவர்களுடைய (330வது) ஹதீஸ் ஆகிய அனைத்து ஹதீஸ்களும் பலஹீனமானவையே! சரியானவை அல்ல. ஹபீப் அவர்களிடமிருந்து அஃமஷ் அவர்கள் அறிவிக்கின்ற இந்த ஹதீஸை ஹப்ஸ் பின் கியாஸ் அவர்கள் மவ்கூபாக (அன்னை ஆயிஷா (ரலி) அவர்களுடன் இத்தொடரை நிறுத்தி) அறிவித்திருப்பது இந்த ஹதீஸ் பலவீனமானது தான் என்பதை தெரிவிக்கின்றது. மேலும் ஹப்ஸ் பின் கியாஸ் அவர்கள் ஹபீப் அவர்களுடைய ஹதீஸை மர்பூஆக (அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னதாக) அறிவிப்பதை மறுத்துரைக்கின்றார்கள். மேலும் இந்த ஹதீஸை அஸ்பாத் அவர்கள் அஃமஷ் அவர்களிடமிருந்து அறிவிக்கும் போது ஆயிஷா (ரலி) அவர்களுடன் நிறுத்தப்பட்டது (மவ்கூப் ஆனது) என்றே அறிவிக்கின்றார்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்: இந்த ஹதீஸின் (ஒவ்வொரு தொழுகைக்கும் உளூ ச் செய்ய வேண்டும் என இடம் பெறாத) முந்தைய பகுதியை இப்னுதாவூத் அவர்கள் அஃமஷ் அவர்களிடமிருந்து மர்ஆ ஆனதாக அறிவிக்கின்றார். மேலும் அதில் ஒவ்வொரு தொழுகைக்கும் உளூ செய்ய வேண்டும் என்று இடம் பெற்றிருப்பதை அவர் மறுத்துரைக்கின்றார். இந்த ஹபீப் (அவர்களிடமிருந்து அஃமஷ்) அறிவிக்கின்ற ஹதீஸ் பலவீனமானது என்பதை அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து உர்வா வழியாக ஜுஹ்ரி அறிவிக்கும் ஹதீஸ் தெரிவிக்கின்றது. சூதக இரத்தப் போக்குள்ளவர் தொடர்பாக அன்னையார் அவர்கள் அந்த ஹதீஸில் 'அவர் ஒவ்வொரு தொழுகைக்கும் குளிப்பவராக இருந்தார்கள்' என்று அறிவிக்கின்றார்.

அலீ (ரலி) அவர்களிடமிருந்து தன் தந்தையார் வழியாக அறிவிக்கும் அதிபின் சாபித் அவர்களிடமிருந்து அபுல்யக்யான் அவர்களும், இப்னு அப்பாஸ் அவர்களிடமிருந்து பனூஹாஷிம் கிளையாரின் அடிமை அம்மார் அவர்களும், அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து கபீர் அவர்களுடைய ஹதீஸ் மூலம் ஷுஃபி வழியாக அப்துல் மாலிக் பின் மைஸ்ரா, பயான், முகீரா, பிராஸ், முஜாலித் ஆகிய அனைவரும் '(சூதக இரத்தப் போக்குள்ள அப்பெண்மணியை நோக்கி நீ ஒவ்வொரு தொழுகைக்கும் உளூ ச் செய்ய வேண்டும்' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றனர்.) ஒவ்வொரு நாளும் அவள் ஒரு தடவை குளிக்க வேண்டும் என்று அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து கமீர் மூலம் ஷுஃபீ வழியாக தாவூத், ஆஸிம் ஆகியோரின் அறிவிப்பு தெரிவிக்கின்றது. ஹிஷாம் பின் உர்வா தன் தந்தை வாயிலாக, சூதக இரத்தப் போக்குள்ளவர் ஒவ்வொரு தொழுகைக்கும் குளிப்பாராக என்று அறிவிக்கின்றார். இந்த ஹதீஸ்கள் அனைத்துமே பலஹீனமானவை. ஆனால், கமீர், பனூஹிஷாம் கிளையாரின் அடிமை அம்மார், தன் தந்தை வழியாக அறிவிக்கும் ஹிஷாம் பின் உர்வா ஆகிய(மூ)வர்களின் ஹதீஸ்களைத் தவிர! ஆனால் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகின்ற தெளிவான கருத்து (ஒவ்வொரு தொழுகைக்கும்) குளிக்க வேண்டும் என்பது தான்.

(குறிப்பு: இமாம் அபூதாவூத் அவர்கள் இப்பாடத்தில் ஒன்பது அறிவிப்புக்களை தெரிவிக்கின்றார்கள். இவற்றில் 297வது ஹதீஸ், 298வது ஹதீஸ், 300வது ஹதீஸ் ஆகியவை மர்பூஃ ஆனவை. 299வது ஹதீஸ் துணை எண் குறிக்கப்பட்ட ஒன்றிலிருந்து 5வது வரை உள்ள ஹதீஸ்கள் ஆகிய இந்த ஆறு ஹதீஸ்கள் மவ்கூபானவையாகும். இமாம் அபூதாவூத் அவர்கள், இவை அனைத்துமே பலஹீனமானவையே, ஆனால் மேல் குறிப்பிட்ட அம்மூவர் அறிவிக்கின்ற ஹதீஸ்களை தவிர என்று தெரிந்து இம்மூன்றில் இப்னு அப்பாஸ் அவர்களிடமிருந்து பனூஹாஷிம் கிளையாரின் அடிமை அம்மார் அறிவிக்கின்ற ஒவ்வொரு தொழுகைக்கும் நீ உளூ ச் செய்ய வேண்டும் என்ற கருத்தை முன்கர் வெறுக்கப்பட்டவை என்ற வகையில் சேர்க்கின்றார்கள் காரணம் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடமிருந்து அறிவிக்கப்படுகின்ற

தெளிவான கருத்து ம.்.ரூப் குளிக்க வேண்டும் என்று கூறியதனால் ம.்.ரூபிற்கு எதிராக அமையக் கூடிய கருத்து முன்கரே ஆகும். முன்கரும் பலவீனம் லயீப் என்ற வகையைச் சேர்ந்ததால் பலவீனத்தை விட்டும் நீக்கிய கருத்துக்கள் இங்கு இரண்டு தான். ஒன்று கமீர் அறிக்கும் கருத்து, இன்னொன்று தன் தந்தை வழியாக அறிவிக்கும் ஹிஷாம் பின் உர்வாவின் கருத்தாகும்.)

**பாடம்: 114 இரத்தப் போக்குள்ளவள் ஒரு நாளைக்கு ஒரு முறை குளித்தல்!**

ஹதீஸ் எண்: 301

க.்.கா.்., சைத்பின் அஸ்லம் ஆகிய இருவரும் அபூபக்கர் அவர்களின் அடிமையான சுமைய்யி அவர்களை சயீத் பின் அல்முஸய்யிப் அவர்களிடம், 'சூதக இரத்தப் போக்குள்ளவர் எவ்வாறு குளிக்க வேண்டும்?' என்று கேட்டு வருமாறு அனுப்பி வைத்தார்கள். அப்போது சயீத் அவர்கள் 'அப்படிப்பட்டவர் ழுஹ்ருக்கு ழுஹ்ர் குளிக்க வேண்டும். (அதாவது இன்றைய ழுஹ்ர் நண்பகல் நேரத்தில் குளித்தால் அவர் குளிப்பு மறுநாள் ழுஹ்ர் நண்பகல் நேரம் வரை அது செல்லுபடியாகும்.) மேலும் அவர் ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்ய வேண்டும். அவருக்கு இரத்தம் மிகைத்து வருமானால் பஞ்சிட்ட ஆடையைக் கொண்டு துணியில் இறுக்கி கட்டிக் கொள்ளவும் என்று பதிலளித்தார்கள்' என்று சுமைய்யி அவர்களே அறிவிக்கின்றார்கள்.

இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

இப்னு உமர் (ரலி) அவர்களிடமிருந்து அனஸ் பின் மாலிக் (ரலி), அவர்களிடமிருந்து 'அவர் ழுஹ்ருக்கு ழுஹ்ர் குளிக்க வேண்டும்' என்றே அறிவிக்கப்படுகின்றது.

அன்னை ஆயிஷா (ரலி) அவர்களிடமிருந்து கமீர் வழியாக தனது மனைவி மூலம் அறிவிக்கும் ஷு.்.பி அவர்கள் வாயிலாக தாவூத், ஆஸிம் ஆகியோரும் இவ்வாறே அறிவிக்கின்றனர். எனினும் தாவூத் அவர்கள் 'ஒவ்வொரு நாளும் (குளிக்க வேண்டும்) என்றும், ஆஸிம் தனது ஹதீஸில் 'ழுஹ்ரின் போது' என்றும் அறிவிக்கின்றனர்.

இதுவே சாலிம் பின் அப்துல்லாஹ், ஹசன், அதா ஆகியோரின் கருத்தாகும்.

இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

ழுஹ்ருக்கு ழுஹ்ர் என்று வருகின்ற இடத்தில் சயீத் பின் அல்முஸய்யிப் அவர்கள் துஹ்ருக்கு துஹ்ர் என்றே தனது ஹதீஸில் அறிவித்திருக்க வேண்டும். ஆனால் இதில் சந்தேகம் ஏற்பட்டு அறிவிப்பாளர்கள் அதை மாற்றி லுஹ்ருக்கு லுஹ்ர் என்று கூறிவிட்டனர் என்று கருதுகின்றேன் என்று மாலிக் அவர்கள் தெரிவிக்கின்றார்கள்.

இதை மின்வர் பின் அப்துல் மாலிக் பின் சயீத் பின் அப்துற்றஹ்மான் பின் யர்பூ.்.் அறிவிக்கின்ற போது 'அதில்' அவர் துஹ்ருக்கு துஹ்ர் என்றே

அறிவிக்கின்றார். ஆனால் அறிவிப்பாளர்கள் அதை ழுஹ்ருக்கு ழுஹர் என்றே மாற்றி விட்டனர்.

ழுஹர்: அரபியில் மேற்புள்ளியிட்ட 'ல' என்ற எழுத்தைக் கொண்டு ஆரம்பத்தில் இடம் பெறும் இவ்வார்த்தைக்கு நண்பகல் நேரம் என்று பொருளாகும்.

துஹ்ர்: மேற்புள்ளியிட்ட 'த' என்ற எழுத்தைக் கொண்டு ஆரம்பத்தில் இடம் பெறும் இவ்வார்த்தைக்கு துப்புரவு என்று பொருளாகும்.

துஹ்ர் துப்புரவு என்ற வார்த்தையின் படி வழமையான மாதவிடாய் காலம் முடிந்து குளிக்க வேண்டும் என்ற கருத்தாகும். ழுஹர் நண்பகல் என்ற வார்த்தையின் படி தினந்தோறும் நண்பகல் நேரத்தில் குளிக்க வேண்டும் என்ற கருத்தாகும்.

ஹதீஸ் எண்: 302

சூதக இரத்தப் போக்குள்ளவர் தனது மாதவிடாய் (காலம்) நின்றதும் (முடிந்ததும்) தினந்தோறும் குளிப்பாராக! மேலும் அவர் கொழுப்பு அல்லது ஆலிவ் எண்ணெய் தடவிய கம்பளித்துணியை (தனது மர்மஸ்தானத்தில்) வைத்துக் (கட்டிக்) கொள்வாராக! என்று அலீ (ரலி) அவர்கள் அறிவித்தார்கள்.
அறிவிப்பவர்: அலீ (ரலி)
(குறிப்பு: இது கரீப் ஆன ஹதீஸ் என்று முன்திரி அவர்கள் கூறுகின்றார்கள்.)

**பாடம்: 115 உதிரப்போக்குடையவள் அவ்வப்போது குளித்தல்**

ஹதீஸ் எண்: 303

சூதக இரத்தப் போக்குள்ளவர் தொடர்பாக முஹம்மது பின் உஸ்மான் அவர்கள் காஸிம் பின் முஹம்மது அவர்களிடம் வினவிய போது அப்படிப்பட்டவர் தனது (வழமையான) மாதவிடாய் நாட்களில் தொழுகையை விட்டுவிடுவாராக! பின்பு குளித்து தொழுவாராக! பிறகு (உதிரப்போக்கு) நாட்களில் (அவ்வப்போது) குளிப்பாராக! என்று பதிலளித்தார்.
அறிவிப்பவர்: முஹம்மது பின் உஸ்மான்

**பாடம்: 116 ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்யலாம்**

ஹதீஸ் எண்: 304

பாத்திமா பின்த் அபீஹுபைஷ் (ரலி) அவர்கள் சூதக இரத்தப் போக்குள்ளவராக ஆனபோது அவருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'இது மாதவிடாய் இரத்தமெனில் அது அடையாளங்கண்டு கொள்ளப்படும் கரிய இரத்தமாகும். இந்த இரத்தம் உனக்கு வந்தால் நீ தொழுகையை விட்டுவிடு! இதல்லாத இரத்தம் வந்தால் நீ உலூச் செய்து, தொழுது கொள்' என்று சொன்னார்கள்.
அறிவிப்பாளர்: பாத்திமா பின்த் அபீஹுபைஷ்
இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:
அறிவிப்பாளர் இப்னுல் முஸன்னா தெரிவிக்கின்றார்:

எமக்கு இப்னு அபீ அதீ அவர்கள் தனது மனனத்தின் மூலம் அறிவிக்கும் போது 'உர்வா, (அவர்களுக்கும் பாத்திமா அவர்களுக்கும் இடையில்) அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள் என்று குறிப்பிடுகின்றார். (286 ஹதீஸின் குறிப்பைப் பார்க்கவும்)

இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

இந்த ஹதீஸை அபூஜஃபர் வழியாக ஹகம் அவர்கள் மூலம் அறிவிக்கும் அலா பின் அல் முஸய்யிப் அவர்களிடமிருந்தும் ஷுஃபா அவர்களிடமிருந்தும் அறிவிக்கப்படுகின்றது. இந்த அறிவிப்புகளில் 'நீ ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்து கொள்க' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து (மர்பூஆக) அலா அவர்களும், ஷுஃபா அவர்கள் அபூஜஃபர் அவர்களுடன் நிறுத்தி (மவ்கூபாக்கி)யும் அறிவிக்கின்றனர்.

**பாடம்: 117 உளூவை நீக்கும் காரியம்**

ஹதீஸ் எண்: 305

உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் (ரலி) அவர்கள் சூதக இரத்தப் போக்குள்ளவராக ஆனபோது அவருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், 'அவர் தனது (வழமையான) மாதவிடாய்களில் (தொழுகையை விட்டுவிட்டு) காத்திருந்து, பிறகு குளித்துத் தொழுமாறும், பிறகு அதன்பின்பு எதையும் கண்டால் உலூச் செய்து தொழுவாராக! என்றும் கட்டளையிட்டார்கள்.

அறிவிப்பாளர்: இக்ரிமா அவர்கள்

(குறிப்பு: இந்த ஹதீஸ் முர்ஸலானது என்று மன்திரி அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். ஏனெனில் இக்ரிமா அவர்கள் நபித்தோழர் அல்ல!)

ஹதீஸ் எண்: 306

ரபீஆ அவர்கள், சூதக இரத்தப் போக்குள்ளவர் ஒவ்வொரு தொழுகைக்கும் உலூச் செய்ய வேண்டும் என்று கருத்துக் கொண்டிருக்க வில்லை எனினும், இரத்தமல்லாத உலூ முறிவு அவரைத் தீண்டினால் அவர் உலூச் செய்ய வேண்டும் என்பதை தவிர!.

அறிவிப்பாளர்: வஹப் லைஸ் அவர்கள்

இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: இதுவே மாலிக் பின் அனஸ் (ரலி) அவாகள் கருத்தாகும்.

**பாடம்: 118 துப்புறவுக்கு பிறகு கலங்கலான (மண்நிறம், மஞ்சள்) நிறத்தைக் கண்டால்?**

ஹதீஸ் எண்: 307

நாங்கள் (குளித்து) துப்புரவான பிறகு (வெளிப்படும்) மண் நிற இன்னும் மஞ்சள் நிற (திரவ)த்தை கவனத்தில் கொள்ள மாட்டோம் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் உடன்படிக்கை செய்துகொண்ட உம்மு அதிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

அறிவிப்பாளர்: உம்மு ஹுதைல் அவர்கள்.

(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் புகாரி, நஸயி ஆகியோர் பதிவு செய்துள்ளார்கள். அதில் நாங்கள் 'துப்புரவான பிறகு' என்ற வாசகம் இடம் பெறவில்லை.)

ஹதீஸ் எண்: 308

அதே ஹதீஸை இதன் அறிவிப்பாளர் இங்கு அறிவிக்கின்றார்.
அறிவிப்பாளர்: உம்மு அதிய்யா (ரலி)

**பாடம்: 119 சூதக இரத்தப் போக்குள்ளவரை கட்டி உடலுறவு கொள்தல்!**

ஹதீஸ் எண்: 309

உம்மு ஹபீபா (ரலி) அவர்கள் சூதக இரத்தப் போக்குள்ளவராக இருக்கும் போது அவரிடம் அவருடைய கணவர் உடலுறவு கொள்வார்.
அறிவிப்பாளர்: உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ் (ரலி)
இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

முஅல்லா பின் மன்சூர் நம்பிக்கையாளர் என்று யஹ்யா பின் முஈன் அவர்கள் தெரிவிக்கின்றார்கள். இவர் எதையும் தனது சொந்த அபிப்பிராயக் கண்ணோட்டத்துடன் அணுகுபவர் என்ற காரணத்தால் இமாம் அஹ்மத் பின் ஹன்பல் அவரிடமிருந்து எதையும் அறிவிக்கமாட்டார்கள்.

ஹதீஸ் எண்: 310

ஹிம்னா பின்த் ஜஹ்ஷ் அவர்கள் சூதக இரத்தப் போக்குடையவரானார்கள். அவருடைய கணவர் அவரிடம் உடலுறவுக் கொள்வார்கள்.
அறிவிப்பாளர்: ஹம்னா பின்த் ஜஹ்ஷ்
(குறிப்பு: முன்திர் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: இக்ரிமா அவர்கள் உம்மு ஹபீபா பின்த் ஜஹ்ஷ், ஹிம்னா பின்த் ஜஹ்ஷ் ஆகியோரிடம் செவியுற்றார் என்ற கருத்து ஆட்சேபணைக்குரியது.)

**பாடம்: 120 பேறுகால இரத்தம்**

ஹதீஸ் எண்: 311

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் பேறுகால தொடக்குள்ள பெண்கள் பேறு கால இரத்தத்திற்கு பிறகு நாற்பது பகல்கள் அல்லது நாற்பது இரவுகள் (தொழாமல், நோன்பு நோற்காமல்) இருப்பார்கள். மேலும் நாங்கள் எங்களுடைய முகங்களில் (கிளம்புகின்ற பருக்களை போக்குவதற்காக வரிஸ் என்ற செடியின் சாயத்தை பூசிக் கொள்வோம் என்று உம்மு ஸலமா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
அறிவிப்பாளர்: உம்மு ஸலமா (ரலி)
(குறிப்பு: இந்த ஹதீஸ் இமாம் திர்மிதி, இப்னுமாஜா ஆகியோரும் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளனர்.)

ஹதீஸ் எண்: 312

நான் ஹஜ்ஜு செய்ததும் உம்மு ஸலமா (ரலி) அவர்களிடம் சென்றிருந்தேன். அப்போது நான் இறை நம்பிக்கையாளரின் அன்னையே! சம்ரா பின் ஜுன்துப் (ரலி) அவர்கள் மாதவிடாய் (காலத்தில் விட்ட தொழுகையை) பெண்கள் களாச் செய்ய வேண்டும் (திருப்பித் தொழ வேண்டும்) என்று பெண்களுக்கு கட்டளையிடுகின்றாரே! என்று வினவியதற்கு அவர்கள் 'அவ்வாறு பெண்கள் களா செய்ய வேண்டாம். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனைவியரில் எவரேனும் பேறுகால இரத்தப் போக்கின் போது நாட்பது இரவுகள் (தொழாமல்) இருப்பார்கள். பேறுகால இரத்தப் போக்கின் போது விடுபட்ட தொழுகையை களா செய்யும் படி அவருக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கட்டளையிட மாட்டார்கள்' என்று பதிலளித்தார்கள்.
அறிவிப்பவர்: அஸ்தி கிளையைச் சார்ந்த முஸ்ஸா அவர்கள்

அசத்தியா: இவருடைய பெயர் முஸ்ஸா என்பதாகும். இவர் உம்முபஸ்ஸா என்ற இடுகுறி பெயரால் அழைக்கப்படுகிறார் என்று முஹம்மது பின் ஹாதம் அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம்: **121 மாதவிடாய் குளிப்பு**

ஹதீஸ் எண்: 313

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் என்னை அவர்களுடைய ஒட்டகையின் சேணத்தின் பின்பக்கம் அமர்த்தி பயணம் செய்தார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாக அவர்கள் வைகறை வரை தொடர்ந்து பயணம் செய்து, தனது ஒட்டகையை படுக்க வைத்தார்கள். நான் அவர்கள் ஒட்டகையின் சேணத்திலிருந்து இறங்கினேன். இந்த இடத்தில் எனது இரத்தம் படிந்திருந்தது! அது எனது முதல் மாதவிடாயாகும். உடனே ஒட்டகத்திற்கு பாய்ந்து சென்று விட்டேன். மேலும் நான் வெட்கமடைந்தேன். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் என்னையும் இரத்தத்தையும் கண்ட போது, 'உனக்கு என்ன நேர்ந்தது? உனக்கு மாதவிடாய் ஏற்பட்டு விட்டதா?' என்று வினவினார்கள். நான் 'ஆம்' என்றேன். அப்போது அவர்கள் 'நீ உன்னை (உனது ரத்தத்தை சேணத்தில் வழிவதை விட்டும்) சரி செய்து கொள்க! மேலும், நீ ஒரு தண்ணீர் பாத்திரத்தை எடுத்து அதில் உப்பு போட்டு சேணத்தில் பட்ட இரத்தத்தை கழுவி விடு. பிறகு உனது வாகன இருக்கைக்கு வருக என்று சொன்னார்கள். இந்நிகழ்ச்சியை தெரிவித்த பின்னர் அறிவிப்பாளர் மேலும் அறிவிக்கின்றார். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கைபரை வெற்றி கண்ட போது எங்களுக்கு யுத்தத்தில் கிடைத்த பொருளில் இருந்து கொஞ்சத்தை வழங்கினார்கள். மேலும் அவர் மாதவிடாயிலிருந்து துப்புரவாகும் போது தண்ணீரில் உப்பைக் கலக்காது (குளித்து) துப்புரவாக மாட்டார் என்றும், தான் மரணமானதும் தன்னை குளிப்பாட்டும் போது உப்பை பயன்படுத்துமாறும் அறிவுரை வழங்கியதாகவும் அந்த அறிவிப்பாளர் தெரிவிக்கின்றார்.
அறிவிப்பாளர்: கிபார் அவர்களுடைய கிளையைச் சேர்ந்த ஒரு பெண்மணி

எனக்கு அப்பெண்மணியுடைய பெயரை முஹம்மது பின் இஸ்ஹாக் எனக்கு குறிப்பிட்டார். ஆனால் நான் அதை மறந்து விட்டேன் என்று அறிவிப்பாளரில் ஒருவரான சலமா தெரிவிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 314

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அஸ்மா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வருகையுற்று, 'அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! எங்களில் ஒருவர் மாதவிடாயிலிருந்து துப்புரவானால் எப்படி குளிக்க வேண்டும்?' என்று வினவிய போது, அதற்கு அவர்கள், அவர் எலந்தை இலையும், தண்ணீரும் (கலந்து) எடுத்துக் கொண்டு உளூ ச் செய்ய வேண்டும். பிறகு தனது தலையை கழுவவும், அதை தண்ணீர் அவரது முடியின் அடிப்பாகங்களுக்கு சென்றடையும் வரை தேய்க்க வேண்டும். பிறகு தனது உடலில் (தண்ணீர்) ஊற்ற வேண்டும். பிறகு பருத்தி அல்லது கம்பளித் துண்டைக் கொண்டு அவர் சுத்தம் செய்ய வேண்டும்' என்று பதிலளித்தார்கள். அப்போது அஸ்மா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! அதைக் கொண்டு நான் எப்படி சுத்தம் செய்வது என்று வினவியதும், அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: இங்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் எதை மறைமுகமாக குறிப்பிடுகின்றார்கள் என்பதை புரிந்து கொண்டு 'அதை இரத்த கறைகாகுமிடத்தில் (மறைவுறுப்பில்) இட்டுக் கொள்க! என்று அவருக்கு பதிலளித்தேன்.

அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி)

ஹதீஸ் எண்: 315

அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் அன்சாரிப் பெண்களை குறிப்பிடும் போது அவர்களை புகழ்ந்து மார்க்க விஷயத்தை அறிந்து கொள்வதில் ஆர்வம் காட்டுவதற்காக அவர்களை பாராட்டினார்கள். மேலும், அவர்களில் ஒருவர் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வருகையுற்று, என்று மேலுள்ள ஹதீஸின் கருத்தை இந்த அறிவிப்பாளர் அறிவிக்கும் போது கஸ்தூரி வாசமூட்டப்பட்ட (பருத்தி அல்லது கம்பளி) துண்டு என்று அறிவிக்கின்றார்.

அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி)

ஹதீஸ் எண்: 316

'அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள், சபிய்யா பின்த் ஷைபா, இப்ராஹீம் பின் முஹாஜிர், ஷுஃபா, தனது தந்தை வழியாக உபைதுல்லாஹ் பின் முஆத் அல்அன்பரி இந்த தொடர் வழியாக அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் அஸ்மா (ரலி) அவர்கள் வினவிய போது' என்று இதன் அறிவிப்பாளர் மேலுள்ள ஹதீஸின் கருத்தை அறிவிக்கும் போது 'அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கஸ்தூரி வாசமூட்டப்பட்ட (பருத்தி அல்லது கம்பளித்) துண்டு என்று பதிலளித்தார்கள். நான் அதைக் கொண்டு எப்படி சுத்தம் செய்வேன் என்று அவர் வினவியதும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சுப்ஹானல்லாஹ்

(அல்லாஹ் தூய்மையானவன்) அதைக் கொண்டு நீ சுத்தம் செய்க! என்று கூறி ஒது துணியைக் கொண்டு (வெட்கத்தினால் தனது முகத்தை) மூடிக் கொண்டார்கள். மேலும் இதன் அறிவிப்பாளர், அஸமா (ரலி) அவர்கள் அண்ணலாரிடம், ஜனாபத்திற்காக குளிப்பதைப் பற்றி கேட்ட போது, நீ உனக்குரிய தண்ணீரை எடுத்து அழகிய முறையில் நிறைவான விதத்தில் சுத்தம் செய்க! பிறகு உனது தலைக்கு நீர் ஊற்றி, பிறகு உனது தலை(முடியின்) அடிப்பாகங்களில் அது சேரும் வரை அதை நீ தேய்ப்பாயாக! என்று அண்ணலார் பதிலளித்தார்கள் என்றும், பெண்களில் அன்சாரிப் பெண்கள் மிகவும் சிறந்தவர்கள்! மார்க்கத்தைப் பற்றி விளக்கம் கேட்பதற்கும், மேலும் அதில் அறிவு பெறுவதற்கும் நாணம் அவர்களுக்கு ஒரு தடையாக இருக்க வில்லை என்று அன்னை அயிஷா (ரலி) அவர்கள் பாராட்டு தெரிவித்தார்கள் என்றும் கூடுதலாக அறிவிக்கின்றார்.
(குறிப்பு: இதைப் போன்ற ஹதீஸை இமாம் புகாரி, முஸ்லிம், நஸயீ, இப்னுமாஜா ஆகியோர் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளனர்.)

## பாடம்: 123 தயம்மம்

**ஹதீஸ் எண்:** 317

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உஸைத் பின் ஹுலைர் அவர்களையும் இன்னும் சிலரையும் அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள் தொலைந்து விட்ட கழுத்து மாலையை தேடுவதற்காக அனுப்பி வைத்தார்கள். அப்போது தொழுகை நேரமாகி (தண்ணீர் கிடைக்காததால்) உளூவின்றியே அவர்கள் தொழுது விட்டனர். எனவே அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்ததும் இதை அவர்களிடம் முறையிட்ட போது, தயம்மம் தொடர்பான வசனம் இறங்கியது.
அறிவிப்பாளர்: அன்னை ஆயிஷா (ரலி)

இப்னு (முஹம்மது) நுபைலி அவர்கள் தனது அறிவிப்பில் 'அல்லாஹ் உங்களுக்கு அருள்புரிவானாக! நீங்கள் வெறுக்கின்ற எந்த காரியமும் உங்களை வந்தணுகுவதில்லை. அதில் அல்லாஹ் முஸ்லிம்களுக்கும் உங்களுக்கும் மகிழ்ச்சியை அளித்தே தவிர! என்று உஸைத் பின் ஹுலைர் அவர்கள் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களை நோக்கி கூறினார்கள்' என்று கூடுதலாக அறிவிக்கின்றார்.

**ஹதீஸ் எண்:** 318

அம்மார் பின் யாசிர் அவர்கள் அறிவிக்கின்றார்கள். அவர்கள் (நபித்தோழர்கள்) அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் இருக்கும் போது, பஜ்ர் தொழுகைக்காக மண்ணை தொட்டு தடவிக் கொள்வார்கள். அப்போது (முதலில்) அவர்கள் தங்கள் முன்னங்கைகளை மண்ணில் அடித்து தங்கள் முகங்களை ஒரே ஒரு தடவை தடவிக் கொண்டனர். அவர்கள் திரும்பவும் தங்களது முன்னங்கைகளை இன்னொரு தடவை அடித்து தங்கள்

கைகள் முழுவதையும் (வெளிப்புறங்களை) முழங்கை வரைக்கும் தங்களது உட்புறக்கைகளை அக்குள் வரைக்கும் தடவிக் கொண்டார்கள்.
அறிவிப்பாளர்: அம்மார் பின் யாசிர் (ரலி)

ஹதீஸ் எண்: 319

இதே ஹதீஸை போன்று இப்னு வஹப் அவர்களிடமிருந்து சுலைமான் பின் தாவூத் அல் மஹ்ரிய்யு அவர்களும், அப்துல் மலிக் பின் ஷுஜபு அவர்களும் அறிவிக்கின்றனர். இதன் அறிவிப்பாளர், 'முஸ்லிம்கள் (தொழத் தயாராக) கிளம்பி தங்களது முன்னங் கைகளை மண்ணில் அடித்தனர். ஆனால் அவர்கள் (தங்கள் கைகளில்) மண்ணில் எதையும் (அள்ளி) வைத்திருக்க வில்லை' என்று அறிவித்து, மேலுள்ள ஹதீஸை போன்றே தெரிவிக்கின்றார். ஆனால் இவர் முழங்கைகள், கக்குள்களை குறிப்பிடவில்லை. இப்னுல் லைஸ் (அப்துல் மலிக் பின் ஷுஜப் அவர்கள் 'முழங்கைகளுக்கு மேல் வரை (தடவினார்கள்) என்று அறிவிக்கின்றார்.
(குறிப்பு: இதை இப்னுமாஜா அவர்கள் தமது நூலில் பதிவாக்கியிருக்கிறார்கள். மேலும் இந்த ஹதீஸ் முன்கதீஃ (என்ற பலவீனமான வகையைச் சேர்ந்தது) ஆகும். உபைதுல்லாஹ் பின் அப்துல்லாஹ் பின் உத்பா அவர்கள் அம்மார் பின் யாஸிர் அவர்களை சந்திக்க வில்லை. இவரது தந்தை வாயிலாக அம்மார் பின் யாஸிர் அவர்களிடமிருந்து அறிவிக்கும் இவரது ஹதீஸை சுருக்கி பூரணமான தொடராக நஸாயி, இப்னுமாஜா ஆகியோர் அறிவிக்கின்றனர் என்று முன்திரி அவர்கள் குறிப்பிடுகின்றார்.)

ஹதீஸ் எண்: 320

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உளலாதில் ஜைவி என்ற இடத்தில் ஓய்வெடுப்பதற்காக இரவு தங்கலானார்கள். அவர்களுடன் அன்னை ஆயிஷா (ரலி) அவர்களும் இருந்தனர். ஜஸ்ஃலிபார் என்ற இடத்தில் அன்னையார் அவர்களின் கழுத்து மாலை அறுந்து விழுந்து விட்டது. இதனால் அவர்களது கழுத்து மாலையை தேடும் பணி, மக்களை அவர்களிடம் தண்ணீரில்லாத நிலையில் வைகறை வெளுக்கும் வரை (புறப்பட முடியாமல்) தடுத்து விட்டது. இதனால் அபூபக்ர் (ரலி) அவர்கள் மீது கோபங்கொண்டு, மக்களை அவர்களிடம் தண்ணீர் இல்லாத சமயத்தில் (தொழமுடியாமல்) தடுத்து நிறுத்தி விட்டாயே என்று கூறினார்கள். அவ்வமயம் அல்லாஹ் தஆலா தனது திருத்தூதர் (ஸல்) அவர்களுக்கு தூய்மையான மண்ணில் சுத்தம் செய்கின்ற சலுகையை இறக்கியருளினான். எனவே முஸ்லிம்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடன் (தயம்மம் செய்யக்) கிளம்பி, தங்கள் கைகளை மண்ணில் அடித்தனர். பிறகு தங்கள் கைகளை மண்ணிலிருந்து எதையும் அள்ளாமல் உயர்த்தி அவற்றைக் கொண்டு தங்களது முகங்களையும் தங்களது (வெளிப்பக்க) கைகளை முழங்கைகள் வரையிலும், தங்களது உட்பக்க கைகளை கக்குள் வரையிலும் தடவிக் கொண்டார்கள் என்று அம்மார் பின் யாஸிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.
அறிவிப்பாளர்: அம்மார் பின் யாஸிர் (ரலி)

'இந்த ஹதீஸை மக்கள் (ஹதீஸ் கலையினர்) சட்டை செய்ய வில்லை' என்று தனது ஹதீஸில் இப்னு ஷிஹாப் குறிப்பிடுகிறார் என்று (முஹம்மது) இப்னுயஹ்யா தனது அறிவிப்பில் கூடுதலாக தெரிவிக்கின்றார்.

இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்: இவ்வாறே இதை இப்னு இஸ்ஹாக் அறிவிக்கும் போது அந்த அறிவிப்பில் (அம்மாருக்கும் உபைதுல்லாஹ் பின் அப்துல்லாஹ்வுக்கும் இடையில்) இப்னு அவர்களிடமிருந்து என்று குறிப்பிடுகின்றார். மேலும் இவர் யூனுஸ் (317 வது ஹதீஸ்) அவர்கள் தெரிவிப்பது போன்று (மண்ணில்) இரண்டு முறை அடித்தல் என்றே தெரிவிக்கின்றார். ஜுஹ்ரியிடமிருந்து இதை மஃமர் அவர்கள் இரண்டு முறை அடித்தல் என்றே அறிவிக்கின்றார்.

அம்மார் அவர்களிடமிருந்து தன் தந்தை வாயிலாக உபைதுல்லாஹ் பின் அப்துல்லாஹ் அறிவிக்கின்றார் என்று ஜுஹ்ரி வாயிலாக மாலிக் அறிவிக்கின்றார். இவ்(மாலிக் அறிவித்த)வாறே ஜுஹ்ரி வாயிலாக அபூஉவைஸ் அறிவிக்கின்றார்.

இந்த ஹதீஸ் அறிவிப்பில் இப்னு உஜனா அவர்கள் ஒரு தடவை தன் தந்தை வாயிலாக அறிவிக்கும் உபைதுல்லாஹ்விடமிருந்து என்றும் மறுதடவை இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் வாயிலாக அறிவிக்கும் உபைதுல்லாஹ்விடமிருந்து என்றும் சந்தேகம் கொண்டவராக அறிவிக்கின்றார்.

இப்னு உஜனா அவர்கள் மேற்கூறிய இந்த ஹதீஸ் அறிவிப்பிலும் தான் ஜுஹ்ரி அவர்களிடமிருந்து (நேரடியாகவோ அல்லது ஊடே ஒரு அறிவிப்பாளரிடமிருந்தோ என்று) செவியுற்றதிலும் தடுமாறுகின்றார்.

இந்த ஹதீஸில் நான் பெயர் குறிப்பிட்ட (யூனுஸ், இப்னு இஸ்ஹாக், மஃமர் ஆகிய)வர்களை தவிர இவர்களில் வேறு யாரும் இரண்டு முறை அடித்தலை தெரிவிக்கவில்லை.

(குறிப்பு: கழுத்து மாலை அறுந்து விட்ட இந்த ஆயிஷா (ரலி) அவர்களது ஹதீஸை இமாம் புகாரி, முஸ்லிம், நஸயீ ஆகியோர் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளனர். ஆனால் தயம்மம் செய்யும் விதம் பற்றி அதில் இடம் பெறவில்லை.)

ஹதீஸ் எண்: 321

நான் அப்துல்லாஹ் (பின் மஸ்வூத்) ரலி அவர்கட்கும் அபூமூஸா (ரலி) அவர்கட்கும் மத்தியில் அமர்ந்திருந்தேன். அப்போது அபூமூஸா (ரலி) அவர்கள் (அப்துல்லாஹ்வை நோக்கி) அபூ அப்துற்-றஹ்மான் அவர்களே! ஒருவர் ஜுனுபாகி ஒரு மாதம் வரை தண்ணீர் கிடைக்க வில்லை எனில், அவர் தயம்மம் செய்து கொள்ளலாமா என்று கருதுகின்றீர்களா? என்று வினவினார்கள். அதற்கு அவர்கள் ஒரு மாதம் வரை தண்ணீர் கிடைக்க வில்லை என்றாலும் அவர் தயம்மம் செய்ய வேண்டாம்! என்று பதிலுரைத்தார்கள். உடனே அபூமூஸா (ரலி) அவர்கள், அப்படியானால், அல் மாயிதா என்ற (5 ஆம்) அத்தியாயத்தில் 'நீங்கள் (சுத்தம் செய்வதற்குரிய) நீரை

பெற்றுக் கொள்ளவில்லை என்றால் பரிசுத்தமான மண்ணைக் கொண்டு சுத்தம் செய்யுங்கள்' என்ற (6 ஆம்) வசனத்தை என்ன செய்ய போகிறீர்கள்? என்று வினவியதும் அப்துல்லாஹ் அவர்கள் இதில் அவர்களுக்கு சலுகை வழங்கப்பட்டு விட்டால், அவர்களுக்கு தண்ணீர் குளிர்ந்து விடும் போது அவர்கள் மண்ணில் தயம்மம் செய்ய துவங்கி விடுவார்கள்! என்று பதிலளித்தார்கள். அதற்காகத் தான் நீங்கள் இதை வெறுக்கின்றீர்கள்? என்று அபூமூஸா அவர்கள் கேட்ட போது அவர்கள் ஆம் என்றார்கள். பிறகு அபூமூஸா (ரலி) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம் அம்மார் (ரலி) அவர்கள் என்னை 'அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் ஒரு தேவையை முன்னிட்டு அனுப்பி வைத்தார்கள். அப்போது நான் ஜுனுபாகி விட்டேன். அப்போது தண்ணீர் கிடைக்காததால் மிருகம் (தரையில்) புரண்டெழுவது போன்று நான் (சுத்தமான) மண்ணில் பரண்டெழுந்தேன். பிறகு நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, இதை அவர்களிடம் தெரிவித்த போது அவர்கள் (நீ மண்ணில் புரள தேவையில்லை) நீ இவ்வாறு செய்தால் போதுமாகும் என்று சொல்லி, தனது கையை மண்ணில் அடித்து உதறி தனது இடது கையை வலது கையின் மீதும் பிறகு தனது வலது கையை இடது கையின் மீதும் (இப்படி) இரு முன்னங்கைகளையும் ஒன்றோடு ஒன்றாக தட்டி பிறகு தனது முகத்தில் தடவினார்கள்'. என்று கூறியதை நீங்கள் செவியுறவில்லையா? என்று கூறியதும் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் உமர் (ரலி) அவர்கள் அம்மார் (ரலி) அவர்களின் இந்தக் கூற்றைக் கொண்டு திருப்தியடையவில்லை என்று நீர் அறியவில்லையா? என்று கேட்டார்கள்.

அறிவிப்பாளர்: ஷகீக் அவர்கள்

(குறிப்பு: இதை இமாம் புகாரி, முஸ்லிம், நஸயீ ஆகியோர் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளனர்.)

ஹதீஸ் எண்: 322

அப்துற்-றஹ்மான் பின் அப்ஸா அவர்கள் அறிவிக்கின்றார்கள். நான் உமர் (ரலி) அவர்களிடம் வீற்றிருந்தேன். அப்போது அவர்களிடம் ஒருவர் வந்து, நாங்கள் ஓரிடத்தில் ஒரு மாதம் அல்லது இரு மாதங்கள் தங்குகின்றோம். (நாங்கள் எவ்வாறு தொழுவது) என்று வினவிய போது, உமர் (ரலி) அவர்கள் என்னை பொறுத்த வரையில் தண்ணீர் கிடைக்கின்ற வரை நான் தொழ மாட்டேன் என்று பதிலளித்தார்கள். அப்போது அம்மார் (ரலி) அவர்கள், இறைநம்பிக்கையாளர்களின் தலைவர் அவர்களே! உங்களுக்கு நினைவில்லையா? நானும் நீங்களும் ஒட்டகம் மேய்ப்பதில் ஈடுபட்டிருக்கும் போது நமக்கு ஜனாபத் ஏற்பட்டு விட்டது. அதனால் நான் (மண்ணில்) புரண்டெழுந்தேன். நாம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்ததும், நான் இதை அவர்களிடம் தெரிவித்தேன். அப்போது அவர்கள் நீ அவ்வாறு செய்வது உனக்கு போதுமானதாகும் என்று கூறி தனது இரு கைகளையும் மண்ணில் அடித்தார்கள். பிறகு அவ்விரண்டு கைகளையும் ஊதினார்கள். பிறகு அவ்விரண்டைக் கொண்டு தனது முகத்தையும், தனது கைகளையும் பாதி

முழங்கைகள் வரை தடவினார்கள்' என்று கூறினார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள் 'அவ்வாறன்று, அல்லாஹ் மீது ஆணையாக! இது விஷயத்தில் நீர் எதை நோக்கி திரும்பி விட்டீரோ அதை நோக்கியே உம்மை திருப்பி விடுகிறோம் (இது உன் விருப்பத்தை சார்ந்தது) என்று சொன்னார்கள்.
அறிவிப்பாளர்: அப்துற்-றஹ்மான் பின் அப்ஸா
(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் புகாரி, முஸ்லிம், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகியோரும் தமது நூல்களில் பதிவாக்கியுள்ளார்கள்.)

ஹதீஸ் எண்: 323

அம்மார் பின் யாஸிர் (ரலி) அவர்களிடமிருந்து அப்துற்றஹ்மான் அப்ஸா அறிவிக்கும் போது இந்த ஹதீஸில், அம்மாரே! நீ இவ்வாறு செய்வதே உனக்கு போதுமானதாகும் என்று அண்ணலார் கூறி பின்பு இரு கைகளையும் ஒரே ஒரு தடவை மண்ணில் அடித்தார்கள். பிறகு அவ்விரண்டில் மற்றொன்றின் மீது அடித்து, தனது முகத்தையும் முழங்கைகளையும் முட்டுக்கைகளை அடையாத வண்ணம் பாதி முழங்கைகள் வரை தடவினார்கள் என்று அறிவிக்கின்றார்.
அறிவிப்பாளர்: அம்மார் பின் யாஸிர் (ரலி)
இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:

இந்த ஹதீஸை அப்துற்றஹ்மான் பின் அப்ஸா, சலமா பின் குஹைல், அஃமஷ் வழியாக வகிஃ அறிவிக்கின்றார்.

தன் தந்தை அப்துற்றஹ்மான் பின் அப்சாவிடமிருந்து அறிவிக்கும் சயீத் ஸலமா பின் குஹைல், அஃமஷ் வழியாக இதை ஜரீர் அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 324

இந்த சம்பவத்தை அம்மார் அவர்களிடமிருந்து தன் தந்தை வாயிலாக (சயீத்) இப்னு அப்துற்றஹ்மான் பின் அப்ஸா அறிவிக்கின்ற போது, உனக்கு இதுவே போதுமானதாகும் என்றும் மேலும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தனது கையை மண்ணில் அடித்து, பிறகு அக்கையில் ஊதி அதைக் கொண்டு தனது முகத்தையும், தனது முன்னங்கைகளையும் தடவினார்கள் என்று குறிப்பிடுகின்றார். அறிவிப்பாளர் ஸலமா அவர்கள் சந்தேகம் கொண்டு இதில் முட்டுக்கைகள் வரை அல்லது முன்னங்கைகள் வரை என்று இடம் பெற்றுள்ளதா என்று எனக்கு தெரியாது என்று குறிப்பிடுகின்றார்.
அறிவிப்பாளர்: அம்மார் (ரலி)

ஹதீஸ் எண்: 325

பிறகு அக்கையில் ஊதி, அதைக் கொண்டு தனது முகத்தையும், தனது முன்னங் கைகளை முட்டுக் கைகள் வரை அல்லது முழங்கைகள் வரை தடவினார்கள் என்று மேலுள்ள அதே இஸ்நாத் மூலம் ஷுஃபா அறிவிப்பதாக ஹஜ்ஜாஜ் வழியாக அலீ பின் சஹ்ல் ரம்லீ அறிவிக்கின்றார்.

ஸலமா அவர்கள் (இந்த ஹதீஸில்) முன்னங்கைகள், முகம், முழங்கைகள் என்று அறிவிக்கும் போது ஒரு நாள் மன்சூர் என்பார் அவரை நோக்கி, நீ என்ன அறிவிக்கின்றீர் என்பதை கவனித்துக் கொள்க! ஏனெனில் உம்மைத் தவிர

வேறு யாரும் முழங்கைகளை குறிப்பிடவில்லை என்று கூறினார் என்று ஷுஃபா அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

ஹதீஸ் எண்: 326

அம்மார் (ரலி) அவர்களிடமிருந்து தன் தந்தை வழியாக சயீத் பின் அப்துற்றஹ்மான் பின் அப்ஸா அவர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸில், 'உனது இரு கைகளையும் மண்ணில் அடித்து இவ்விரண்டைக் கொண்டு உமது முகத்தையும், உமது முன்னங்கைகளையும் நீ தடவிக் கொள் உமக்கு போதுமாகும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்று குறிப்பிட்டு இந்த ஹதீஸைத் தொடர்கிறார்.

அறிவிப்பாளர்: அம்மார் (ரலி) அவர்கள்

அம்மார் ரலி அவர்கள் உரையாற்றுவதை நான் செவியுற்றேன். ஆனால் அவர்கள் ஊதவில்லை என்று தான் குறிப்பிட்டார்கள் என சயீத் பின் அப்துற்றஹ்மான் பின் அப்ஸா கூறியதாக மாலிக் மூலம் ஹுஸைன் வழியாக இதை ஷுஃபா அறிவிக்கின்றார். தனது இரு முன்னங்கைகளையும், மண்ணில் அடித்து ஊதினார்கள் என்று அவர் கூறியதாக இந்த ஹதீஸில் ஹகம் மூலம் ஷுஃபா வாயிலாக ஹுஸைன் பின் முஹம்மது குறிப்பிடுகின்றார்.

ஹதீஸ் எண்: 327

நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் தயம்மத்தைப் பற்றி வினவிய போது முகத்திற்கும், முன்னங்கைகளுக்கும் ஒரு தடவை மண்ணில் அடிக்குமாறு எனக்கு கட்டளையிட்டார்கள் என்று அம்மார் பின் யாஸிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

அறிவிப்பாளர்: அம்மார் பின் யாஸிர் (ரலி) அவர்கள்.

ஹதீஸ் எண்: 328

பயணத்தில் தயம்மம் செய்வது பற்றி கதாதா அவர்களிடம் வினவப்பட்ட போது அவர் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் முட்டுக்கைகள் வரை (தடவச்) சொன்னார்கள் என்று அம்மார் பின் யாசிர் (ரலி) அவர்கள் அறிவித்ததாக அப்துற்றஹ்மான் பின் அப்ஸா, ஷுஃபி வாயிலாக எனக்கு ஒரு அறிவிப்பாளர் அறிவித்தார் என்று பதிலளித்தார்.

அறிவிப்பாளர்: கதாதா அவர்கள்.

இந்த சனதில் அறியப்படாத ஒருவர் இடம் பெற்றார் என்று முன்திரி அவர்கள் கூறுகின்றார்.

**பாடம்: 124 ஊரில் வசிப்பவர் தயம்மம் செய்தல்**

ஹதீஸ் எண்: 329

நானும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனைவி மைமூனா (ரலி) அவர்களின் அடிமையான அப்துல்லாஹ் பின் யஸார் அவர்களும் புறப்பட்டு அபுல்ஜுஹைம் பின் அல்ஹாரிஸ் பின் சிம்மா அவர்களிடம் சென்றோம். அப்போது அபுல் ஜுஹைம் அவர்கள் (பின்வருமாறு) அறிவித்தார்கள். பிஃர்

ஜமல் என்ற இடத்திலிருந்து அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் வந்து கொண்டிருக்கும் போது, அவர்களை ஒருவர் சந்தித்து, அவர்களுக்கு ஸலாம் உரைத்தார். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் பதில் சலாம் கூறாமல் ஒரு சுவர் அருகே வந்து தனது முகத்தையும் தனது இரு கைகளையும் (தயம்மம் செய்து) தடவினார்கள். பின்பு அவருக்கு பதில் சலாம் கூறினார்கள். இவ்வாறு இப்னு அவர்கள் கூற அப்பாஸ் அவர்களிடமிருந்து செவியுற்றதாக அறிவிப்பாளர் அவர்களுடைய அடிமை உமைர் அவர்கள்.
அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களின் அடிமை உமைர்.
(குறிப்பு: இந்த ஹதீஸை இமாம் புகாரி, நஸயீ ஆகியோர் தமது நூல்களில் பதிவு செய்துள்ளார். இமாம் முஸ்லிம் அவர்கள் இதை முன்கதிஃ ஆக பதிவு செய்திருக்கின்றார்கள்.)

**ஹதீஸ் எண்:** 330

நாபி அறிவிக்கின்றார்கள். ஒரு தேவையை முன்னிட்டு நான் இப்னு உமர் (ரலி) அவர்களுடன் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் சென்று கொண்டிருந்த போது இப்னு உமர் (ரலி) அவர்கள் தன் தேவையை நிறைவேற்றிவிட்டு அன்றைய தினம் அவர்கள் அறிவித்த ஹதீஸ் இதுதான்: சிறுநீர் அல்லது மலம் கழித்து விட்டு திரும்பிய அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களை ஒருவர் ஒரு குறுகிய தெருவில் கடந்து சென்ற போது அவர்களுக்கு அவர் ஸலாம் சொன்னார். ஆனால் அவர்கள் அவருக்கு பதில் ஸலாம் கூறவில்லை. அந்த தெருவில் (பார்வையை விட்டும்) மறைகின்ற தருவாயில் தனது இருகைகளை சுவரில் அடித்து அவ்விரண்டைக் கொண்டு தனது முகத்தை தடவினார்கள். பிறகு மீண்டும் ஒரு தடவை அடித்து அவ்விரண்டைக் கொண்டு தனது முகத்தை தடவினார்கள். பிறகு மீண்டும் ஒரு தடவை அடித்து தனது இரு முழங்கைகளை தடவினார்கள். பின்பு அம்மனிதருக்கு பதில் ஸலாம் கூறினார்கள். மேலும் அவரிடம், நான் சுத்தமில்லாமல் இருந்தேன் என்பதை தவிர உமது சலாமுக்கு பதில் கூறுவதை விட்டும் என்னை வேறெதுவும் தடுக்க வில்லை என்று (விளக்கம்) கூறினார்கள்.
அறிவிப்பவர்: நாபிஃ அவர்கள்.
இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்:

முஹம்மது பின் சாபித் அவர்கள் தயம்மமுடைய பாடத்தில் முன்கரான ஹதீஸை அறிவிக்கின்றார் என்று இமாம் அஹ்மத் பின் ஹன்பல் (ரஹ்) அவர்கள் கூற நான் செவியுற்றேன்.

இமாம் அபூதாவூத் குறிப்பிட்டதாக இப்னு குறிப்பிடுகின்றார். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து இரண்டு முறை அடித்ததாக அறிவிக்கும் இந்த செய்தியில் முஹம்மது பின் சாபித் அவர்களுக்கு யாரும் உடன்படவில்லை. அவர்களெல்லாரும் இதை இப்னு உமர் (ரலி) அவர்களது செயலாக அறிவிக்கின்றனர்.

ஹதீஸ் எண்: 331

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் மலம் கழிக்கச் சென்று விட்டு (திரும்பி) வரும் போது பி்ஃர் ஜமல் என்ற இடத்திற்கு அருகில் அவர்களை ஒருவர் சந்தித்தார். உடனே அவர் அவர்களுக்கு சலாம் சொன்னதும், அவருக்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் உடன் பதிலளிக்காது ஒரு சுவருக்கு அருகில் வந்து தனது கையை சுவரில் வைத்தார்கள். பிறகு தனது முகத்தையும், தனது இரு கைகளையும் தடவினார்கள். பிறகு அம்மனிதருக்கு பதில் சலாம் கூறினார்கள்.

அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி) அவர்கள்

(குறிப்பு: இந்த ஹதீஸை முன்திரி அவர்கள் ஹசன் என்று கூறுகின்றார்.)

**பாடம்: 125 ஜுனுபானவர் தயம்மம் செய்யலாமா?**

ஹதீஸ் எண்: 332

அபூதர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் முன்னிலையில் சில ஆடுகள் திரண்டிருந்தன. அப்போது அவர்கள் (என்னை நோக்க) அபூதரே! இவற்றை நீ காட்டிற்கு ஓட்டிச் செல் என்று சொன்னார்கள். நான் ரபதா என்ற இடத்திற்கு (ஓட்டிச்) சென்றேன். (அங்கு) என்னை ஜனாபத் தீண்டி நான் (குளிக்க முடியாமல்) ஐந்து அல்லது ஆறு (நாட்கள்) தங்கியிருந்தேன். பின்பு நான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்த போது அவர்கள் என்னை, 'அபூதரே!' என்று அழைத்தார்கள். நான் (பதில் கூறாது) மௌனம் சாதித்தேன். அப்போது அவர்கள், அபூதரே! உடனது தாய் இழக்க கடவது! உமக்கு அழிவுண்டாகட்டும்! என்று கூறி எனக்காக ஒரு கருத்த அடிமைப் பெண்ணை அழைத்தார்கள். அப்பெண்மணி தண்ணீர் பாத்திரத்தை கொண்டு வந்தாள். (ஒரு புறத்தில்) அவள் ஒரு ஆடையைக் கொண்டு என்னை மறைத்தாள். நானும் (இன்னொரு புறத்தில்) ஒரு ஒட்டகையை மறைவாக்கிக் கொண்டு குளிப்பை நிறைவேற்றினேன். அப்போது தான் நான் என் மேலிருந்த மலையை இறக்கியவன் போலானேன். அப்போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் '(தண்ணீர் இல்லாது) பத்தாண்டுகள் ஆயினும் (பரிசுத்தமான) மண் ஒரு முஸ்லிமின் உளூ(விற்கு அல்லது குளிப்பிற்கு பரிகாரமாகும்)வாகும்'! எனவே எப்போது தண்ணீரை பெற்றுக் கொள்கிறாயோ அப்போது உனது உடலை தண்ணீரில் கழுவச் செய்க! இதுவே சிறந்ததாகும்' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூதர் (ரலி)

ஹதீஸ் எண்: 333

பனூ ஆமிர் கிளையினரில் ஒருவர் அறிவிக்கின்றார்

நான் இஸ்லாத்தைத் தழுவியதும் என்னுடைய மார்க்க(த்தைப் பற்றிய அறியாமை)ம் என்னை கவலை கொள்ள வைத்தது. இதனால் நான் அபூதர் அவர்களிடம் (மார்க்கத்தைத் தெரிந்து கொள்வதற்காக) வந்தேன். அப்போது அபூதர் (ரலி) அவர்கள் (பின்வருமாறு) கூறினார்கள். நான் மதீனா (எனக்கு

ஒத்துக் கொள்ளாததால்)வை வெறுத்தேன். எனவே எனக்கு அல்லாஹ் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் சில ஒட்டகங்களையும், ஆடுகளையும் (எடுத்துக் கொண்டு செல்லும் படி) உத்தரவிட்டு, அவற்றின் பாலை பருகும்படி கூறினார்கள்.

இங்கு அறிவிப்பாளர் ஹம்மாத் பாலுக்கு பதிலாக சிறுநீர் என்று கூறினாரா? என்று சந்தேகடைகிறேன் என்று குறிப்பிடுகின்றார்.

அபூதர் தொடர்ந்து கூறுகின்றார்கள்: எனவே நான் தண்ணீரில் உள்ள பகுதியை விட்டும் நான் தூரமாகி விட்டேன். என் குடும்பம் என்னோடு தான் இருந்தது. அப்போது என்னை ஜனாபத் தீண்டி விடும்போது நான் சுத்தமின்றியே தொழுதேன். பிறகு நான் நண்பகலில் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்த போது அவர்கள் பள்ளியின் நிழலில் தனது தோழர்களின் குழுவினருடன் அமர்ந்திருந்தார்கள். அப்போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் அபூதர் தானே! என்று வினவியதும், நான் ஆம்! அல்லாஹ்வின் திருத்தூதர் அவர்களே! நான் நாசமாகி விட்டேன்! என்று பதிலளித்தேன். அவர்கள், உன்னை நாசமாக்கியது எது? என்று வினவியதும், நான் தண்ணீர் உள்ள பகுதியை விட்டும் தூரமாகி விட்டேன். என்னுடைய குடும்பம் என்னுடனே இருந்தது. எனவே என்னை ஜனாபத் தீண்டிவிடும் போது நான் சுத்தமின்றியே தொழுதேன் என்று பதிலளித்தேன். உடனே எனக்காக அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) தண்ணீருக்கு உத்தரவிட்டார்கள். முழுதும் நிரம்பியிராத தளும்புகின்ற ஒரு பாத்திரத்தில் கருத்த அடிமைப்பெண் நீர் கொண்டு வந்தாள். நான் ஒரு ஒட்டகைக்கு அருகில் மறைந்து கொண்டு குளித்தேன். பிறகு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள், நீ பத்தாண்டுகள் வரை தண்ணீரை பெற்றுக் கொள்ளவில்லை என்றாலும் பரிசுத்தமான மண்ணே தூய்மை (அளிக்கும் பொருள்) ஆகும். எனவே நீரை பெற்றுக் கொண்டால் அதை உனது உடலில் தழுவச் செய் என்று சொன்னார்கள்.
அறிவிப்பவர்: மூஸா பின் இஸ்மாயீல்

**பாடம்: 126 ஜுனுபானவர் குளிருக்கு பயந்து தயம்மம் செய்யலாமா?**

ஹதீஸ் எண்: 334

அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

தாதஸாலாஸில் என்ற படையெடுப்பின் போது கடுங்குளிரான இரவில் (உறங்கும் போது) கனவு கண்டு நான் ஜுனுபாகி விட்டேன். நான் குளித்தால் மரணமடைந்து விடுவேனோ என்று அஞ்சினேன். எனவே நான் தயம்மம் செய்து, எனது தோழர்களுக்கு சுப்ஹ் தொழுகை நடத்தினேன். இதை பிறகு அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் எடுத்துரைத்தனர். அப்போது அவர்கள் (என்னை நோக்கி) அம்ரே! நீ ஜுனுபாக இருக்கும் போது உனது தோழர்களுக்கு நீ தொழுகை நடத்தினாயா? என்று வினவினார்கள். நான்

அவர்களிடம் என்னை குளிப்பதிலிருந்து தடுத்து விட்ட நிகழ்ச்சியை அவர்களிடம் தெரிவித்தேன். மேலும் நான் 'உங்களை நீங்கள் கொன்று விட வேண்டாம். அல்லாஹ் உங்களிடம் கருணை உள்ளவனாக இருக்கின்றான்' என்று அல்லாஹ் கூறி இருக்கிறான் என நான் செவியுற்றிருக்கிறேன் என்றும் தெரிவித்தேன். அதற்கு அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) சிரித்தார்கள். மேலும் அவர்கள் வேறெதையும் கூறவில்லை.
அறிவிப்பவர்: இப்னுல் முஸன்னா

ஹதீஸ் எண்: 335

அம்ர் இப்னுல் ஆஸ் (ரலி) அவர்கள் சிறுபடையெடுப்பில் பங்கேற்றிருந்தார்கள் என்றும் இதன் அறிவிப்பாளர் மேலுள்ள ஹதீஸைப் போன்று அறிவிக்கின்றார். 'அவர்கள் தனது உடலின் (கங்குமர் போன்ற) இணைப்புப் பகுதிகளை கழுவி தொழுகைக்கு உலூ செய்வது போன்று உலூச் செய்தார்கள் என்று மேலுள்ள ஹதீஸைப் போன்று அறிவிக்கும் இவர் தயம்மம் செய்வதை குறிப்பிடவில்லை'.
அறிவிப்பவர்: முஹம்மது பின் ஸலமா

**பாடம்: 127 காயம் பட்டவர் தயம்மம் செய்தல்**

ஹதீஸ் எண்: 336

ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

நாங்கள் ஒரு பயணம் சென்று கொண்டிருந்த போது எங்களில் ஒருவர் மேல் கல்பட்டு அவரது தலை காயமாகி விட்டது. பிறகு அவர் (உறங்கும் போது) கனவு கண்டு ஜுனுபாகி விட்டார். எனவே தயம்மம் செய்ய அனுமதி உண்டா? என்று வினவிய போது, 'நீங்கள் தண்ணீரில் (குளிப்பதற்கு) சக்தியுள்ளவராக இருக்கும் போது உமக்கு அப்படி நீர் தயம்மம் செய்ய அனுமதி இருப்பதை நாங்கள் காணமுடியவில்லை' என்று அவர்கள் பதிலளித்தார்கள். எனவே அவர் (தண்ணீரில்) குளித்ததினால் மரணமடைந்து விட்டார். நாங்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தவுடன் இதை அவர்களுக்கு தெரிவிக்கப்பட்டதும் அவர்கள் (பின்வருமாறு) தெரிவித்தார்கள். அவரை அவர்கள் கொன்று விட்டனர்! அல்லாஹ் அவர்களை கொல்வானாக! அவர்கள் (இந்தச் சட்டத்தை) அறியாமலிருக்கும் போது அவர்கள் கேட்டு தெரிந்திருக்க வேண்டாமா? ஏனெனில் அறியாமை (என்ற நோ)யின் நிவாரணம் (அதைப் பற்றி தெரிந்தவரிடம்) வினவுவதாகும். (இறந்த) அவர் தயம்மம் செய்து, அவர் தனது காயத்தில் (ஈர) துணியை பிழிந்து அல்லது (ஈர) துணியை கொண்டு கட்டுப்போட்டு, பிறகு அதன் மீது மஸ்ஹுசெய்து அவர் தனது உடல் முழுவதும் கழுவிக் கொள்வதே அவருக்கு போதுமாகும்.
அறிவிப்பவர்: மூஸா பின் அப்துற் ரஹ்மான்
(குறிப்பு: இந்த தொடரில் ஜுபைர் பின் குரைக் என்பவர் இடம் பெறுகின்றார். இமாம் தாரகுத்னீ அவர்கள் இவர் வலுவானவர் அல்லர் என்று குறிப்பிடுகின்றார்கள் என இமாம் ஹாபிழ் முன்திரி அவர்கள் கூறுகின்றார்கள்.)

ஹதீஸ் எண்: 337

அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் காலத்தில் ஒருவருக்கு காயம் ஏற்பட்டு விட்டது. பிறகு அவர் கனவு கண்டு ஜுனுபாளியாகி விட்டார். எனவே அவருக்கு குளிக்கும் படி உத்திரவிடப்பட்டு அவர் குளித்ததும் இறந்து விட்டார். அது அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுக்கு தெரிந்து, அவரை அவர்கள் கொன்று விட்டார்கள். அல்லாஹ் அவர்களை கொல்வானாக! அறியாமை என்ற நோயின் நிவாரணம் விளக்கம் கேட்பதல்லவா? என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் பின் அப்பாஸ் (ரலி)

**பாடம்: 128 தயம்மம் செய்து தொழுத பிறகு ஒருவர் தண்ணீரை கண்டால்!**

ஹதீஸ் எண்: 338

அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

இருவர் பயணம் சென்று கொண்டிருந்தனர். அப்போது (அவர்களுக்கு) தொழுகை நேரமானதும் அவர்களிடம் தண்ணீர் இல்லை. எனவே, அவ்விருவரும் பரிசுத்தமான மண்ணில் அவர்கள் தயம்மம் செய்து தொழுதார்கள். பிறகு அவ்விருவரும் அந்த (தொழுகைக்குரிய) நேரத்திலேயே தண்ணீரை பெற்று கொண்டனர். அவ்விருவரில் ஒருவர் தொழுகையையும் உலூவையும் மீட்டிக் கொண்டார். இன்னொருவர் (அவ்வாறு) மீட்டவில்லை. பிறகு அவ்விருவரும் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களிடம் வந்து இதை தெரிவித்தார்கள். அப்போது அவர்கள் இவ்வாறு மீட்டாதவரை நோக்கி, நீர் சுன்னத்திற்கு (நபிவழிக்கு) உடன்பட்டு விட்டீர்! உமது தொழுகை உமக்கு போதுமானதாகும். (திருப்பித் தொழ வேண்டியதில்லை) உ ளூச் செய்து மீட்டித் தொழுதவரை நோக்கி 'உமக்கு இருமடங்கு கூலிகள் உள்ளன!' என்று கூறினார்கள்.

அறிவிப்பாளர்: அபூஸயீத் அல்குத்ரீ (ரலி)

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:

இந்த ஹதீஸை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அதாபின் யாஸிர், பக்ர் பின் ஸவாதா, உமைரா பின் அபீநாஜியா, அல்லைஸ் வழியாக அப்துல்லாஹ் பின் நாபிஃ அறிவிக்கின்றார்.

இமாம் அபூதாவூத் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்:

இந்த ஹதீஸ் அபூசயீத் அல்குத்ரீ அவர்களுடைய பெயரை குறிப்பிட்டிருப்பது சரியன்று. இது முர்ஸல் ஹதீஸ் ஆகும்.

இதை இமாம் நஸயீ அவர்கள் முர்ஸலாகவும் முஸ்னதாகவும் பதிவு செய்திருக்கின்றார்கள்.

ஹதீஸ் எண்: 339

அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களுடைய தொடர்களில் இருவர் என்று மேலுள்ள ஹதீஸை இதன் அறிவிப்பாளர் அறிவிக்கின்றார்.

அறிவிப்பாளர்: அதாபின் யஸார்

இப்னுல்ஹைஆ இவர் வலுவானவர் அல்ல என்று யஹ்யா முபின் முஈன் குறிப்பிடுகின்றார்.

இவரை இமாம் வகீஃ யஹ்யா பின் கதான், இப்னு மஹ்தி ஆகியோர் (இவரிடமிருந்து அறிவிக்காது) விட்டு விடுவர் என்று இமாம் முஸ்லிம் அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

**பாடம்: 129 ஜும்ஆ தினத்தில் குளித்தல்**

ஹதீஸ் எண்: 340

ஜும்ஆ நாளன்று உமர் (ரலி) அவர்கள் (ஜும்ஆ) உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும் போது, ஒருவர் (பள்ளியில்) நுழைந்தார். (அவரிடம்) 'நீங்கள் தொழுகையை விட்டும் (அதன் ஆரம்ப நேரத்தில் வராமல்) பின் தங்கி விடுகின்றீர்களா?' என்று உமர் (ரலி) அவர்கள் கேட்டதும், 'நான் (ஜும்ஆ) பாங்கை செவிமடுத்த மாத்திரத்தில் உடனே உளூ செய்ததை தவிர நான் வேறு எந்த வகையிலும் தாமதமாக வில்லையே' என்று வந்தவர் பதில் சொன்னார். அதற்கு உமர் (ரலி) அவர்கள் 'உளூ மட்டும் தான் செய்தீர்களா? உங்களில் ஒருவர் ஜும்ஆவிற்கு வர நாடினால் அவர் குளித்துக் கொள்ளட்டும் என்று ரசூல் (ஸல்) அவர்கள் கூற செவியுறவில்லையா?' என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) ஹதீஸ் எண்: 341

ஜும்ஆ தினத்தன்று குளிப்பது வயது வந்த ஒவ்வொருவர் மீதும் கடமையாகும் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூ சயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள்

ஹதீஸ் எண்: 342

வயது வந்த ஒவ்வொருவருக்கும் ஜும்ஆவிற்கு செல்வது கடமையாகும். ஜும்ஆவிற்கு செல்லும் ஒவ்வொருவரின் மீதும் குளிப்பு கடமையாகும் என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: ஹப்ஸா (ரலி) அவர்கள்

ஜும்ஆவின் பஜ்ர் நேரம் உதயமான பிறகு ஒருவர் குளித்து விட்டால் அது ஜும்ஆ குளிப்பிற்கு போதுமானதே! அவரது குளிப்பு கடமையான குளிப்பாக இருந்தாலும் சரியே! என்று இமாம் அபூதாவூது அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

ஹதீஸ் எண்: 343

ஒருவர் ஜும்ஆ தினத்தன்று குளித்து, தனது ஆடைகளில் நல்லதை அணிந்து அவரிடம் வாசனை திரவியம் இருக்குமானால் அதையும் பூசிக் கொண்டு ஜும்ஆவிற்கு வருகின்றார். மக்களை தாண்டிச் செல்லாமல் தன் மீது அல்லாஹ் கடமையாக்கியதை தொழுகின்றார். இவரது தொழுகை முடிந்து இமாம் வெளியாகும் வரை (யாருடனும் பேசாது) மௌனமாக இருந்தாரென்றால் இவரது இந்த நற்செயல்கள் இந்த ஜும்ஆவிற்கும் முந்தைய

ஜும்ஆவிற்கும் இடையில் ஏற்பட்டு விட்ட பாவங்களுக்கு பரிகாரமாகி விடுகின்றன என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பாளர்கள்: அபூ சயீத் அல்குத்ரீ (ரலி), அபூஹுரைரா (ரலி) ஆகியோர்
(ஜும்ஆவிலிருந்து ஜும்ஆ வரை ஏற்பட்ட பாவங்களுக்கு பரிகாரமாகும் கால அளவில்) மூன்று நாட்களை அதிகமாக்கி (பத்து நாட்கள் என்றும்)யும் ஒரு நன்மை செய்யும் போது அதற்கு பதிலாக அது போன்று பத்து நன்மைகள் கிடைக்கும் என்றும் அபூஹுரைரா (ரலி) அவர்கள் (இணைத்து) கூறியதாக முஹம்மது பின் ஸலமா கூறுகின்றார்.

இமாம் அபூதாவூத் குறிப்பிடுகின்றார்கள்:
(ஹம்மாத், முஹம்மது பின் ஸலமா ஆகிய இருவரும் இணைந்து அறிவிக்கும் இத்தொடரில்) முஹம்மது பின் ஸலமா அறிவிக்கும் ஹதீஸ் நிறைவானதாகும். அபூஹுரைரா (ரலி) அவர்களின் கருத்தை ஹம்மாத் அவர்கள் தனது அறிவிப்பில் கூறவில்லை.

மூன்று நாட்கள் என்பதை இடையில் இடம்பெறச் செய்து அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கும் இந்த ஹதீஸ் அபூசாலிஹ் வழியாக முஸ்லிமில் பதிவாகியுள்ளது.

**ஹதீஸ் எண்:** 344

குளிப்பதும், பல்துலக்குவதும் ஜும்ஆ தினத்தில் வயது வந்த ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும். தன்னால் முடிந்தவரை (முயன்று) நறுமணத்தை பூசிக் கொள்ளல் வேண்டும்.
அறிவிப்பாளர்: தம் தந்தை வழியாக அபூசயீத் அல்குத்ரீ வழியாக அப்துற்றஹ்மான்.
(இத்தொடரில் இடம்பெறும் அறிவிப்பாளர்களான) புகைர் என்பார் அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்களுக்கும் அம்ர் பின் சுலைம் அவர்களுக்கும் இடையில் உள்ள (அபூசயீத் அல்குத்ரீ அவர்களின் மகனான) அப்துற்றஹ்மான் என்ற அறிவிப்பாளரை தனது தொடரில் குறிப்பிடவில்லை.
'(தன்) மனைவியிடமிருந்தேனும் நறுமணத்தை வாங்கி பூசிக் கொள்ள வேண்டும்' என்று நறுமணம் தொடர்பாக புகைர் அறிவிக்கின்றார்.
(இந்த ஹதீஸ் முஸ்லிம், நஸயீயிலும் இடம் பெறுகின்றது. இது போன்ற ஹதீஸை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) வழியாக அம்ர் பின் சுலைம் அறிவிக்கும் ஹதீஸ் புகாரியில் இடம் பெற்றுள்ளது.)

**ஹதீஸ் எண்:** 345

ஒருவர் ஜும்ஆ நாளன்று குளித்து, முதல் நேரத்திலேயே புறப்பட்டுச் சென்று (குத்பா) ஆரம்ப சொற்பொழிவையும் பெற்று விடுகின்றார். வாகனத்தில் செல்லாது நடந்தே செல்கின்றார். இமாமுக்கு அருகில் சென்று (குத்பாவின் போது தடுக்கப்பட்டவற்றை செய்யாது) சொற்பொழிவை வீணாக்காமல் செவிமடுக்கின்றார் எனில் அவர் எடுத்து வைத்த ஒவ்வொரு அடிக்கும் ஒரு வருடம் நோன்பு நோற்ற, நின்று தொழுத வணக்கத்தின் கூலி கிடைக்கும்

என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூற நான் செவியுற்றிருக்கிறேன்.

அறிவிப்பாளர்: அவ்ஸ் பின் அவ்ஸ் அஸ்ஸகபீ (ரலி) அவர்கள்.

(கஸ்ல வக்தஸல என்று இந்த ஹதீஸின் மூலத்தில் இடம் பெற்றுள்ளது. கஸ்ஸல வக்தஸல என்றும் இதை வாசிக்கலாம்.

1. கஸல வக்தஸல – கழுவி, குளித்தார்
2. கஸ்ஸல வக்தஸல – (தனது மனைவியை) குளிக்கச் செய்து (தானும்) குளித்தார் என்றும் இதற்கு இருவிதமாக பொருள் கொள்வோர் உண்டு.

அரபி மூலத்தில் இரண்டு பொருட்களை தரும் இரு வார்த்தைகள் இடம் பெற்றிருந்தாலும் 'குளித்தார்' என்பதை தவிர இதற்கு வேறு தனி அர்த்தமில்லை என்று கூறுவோரும் உண்டு. இந்த இரண்டாவது அணியினரின் கருத்துப்படியே இந்த ஹதீஸின் மொழியாக்கம் ஆகியுள்ளது. ஹதீஸ் எண் – 348 ல் அதன் தொடர்பான செய்தி வருவதாலேயே இங்கே இந்த விளக்கம்.)

(இந்த ஹதீஸ் திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளது)

ஹதீஸ் எண்: 346

இங்கு மேலுள்ள ஹதீஸைப் போன்று இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் எண்: 347

ஜும்ஆ நாளன்று ஒருவர் குளித்து, தனது மனைவியிடத்தில் வாசனை திரவியம் இருக்குமானால் அவ்வாசனை திரவியத்தை பூசிக் கொள்கின்றார். தனது ஆடைகளில் நல்லதை அணிகின்றார். (பள்ளியில் நுழைந்ததும்) மக்களை தாண்டவுமில்லை. சொற்பொழிவு நடக்கும் போது அச்சொற்பொழிவை வீணாக்கவுமில்லை என்றால், (இவரது இந்த நற்செயல்கள்) இரண்டு ஜும்ஆக்களுக்கு இடையில் ஏற்பட்ட பாவங்களுக்கு பரிகாரமாகி விடுகின்றன. எவர் சொற்பொழிவை வீணடித்து மக்களை தாண்டிச் சென்று விடுகின்றாரோ அவருக்கு (அந்த ஜும்ஆ) லுஹர் தொழுகையாக ஆகி விடுகின்றது என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்கள்

ஹதீஸ் எண்: 348

ஜனாபத், ஜும்ஆ நாள், இரத்தம் குத்தி எடுத்தல், மய்யித்தை குளிப்பாட்டுதல் ஆகிய நான்கு காரியங்களுக்காக அண்ணல் நபி (ஸல்) அவர்கள் குளிக்கும் வழக்கம் உள்ளவர்களாக இருந்தார்கள்.

அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அன்ஹா அவர்கள்.

ஹதீஸ் எண்: 349

கஸல வக்தஸல என்ற இந்த சொல்லை பற்றி மக்ஹூல் என்பாரிடம் கேட்டேன். தனது தலையையும் உடலையும் கழுவினர் (குளித்தார்) என்று பொருள் செய்தார்.

அறிவிப்பவர்: அலி பின் ஹவ்ஷப்

ஹதீஸ் எண்: 350

தனது தலையையும் கழுவி, உடலையும் கழுவினார் என்று கஸல வக்தஸலவுக்கு சயீத் என்பார் விளக்கம் அளிக்கின்றார்.

ஹதீஸ் எண்: 351

யார் ஜும்ஆ நாளன்று கடமையான குளிப்பைப்போல் குளித்து விட்டு (முதல் நேரத்தில்) செல்கின்றாரோ அவர் ஒட்டகையை தர்மம் செய்தவர் போலாவார். யார் இரண்டாம் நேரத்தில் செல்கின்றாரோ அவர் ஒரு மாட்டை தர்மம் செய்தவரை போலாவார். யார் மூன்றாம் நேரத்தில் செல்கின்றாரோ அவர் ஒரு ஆட்டை தர்மம் செய்தவரை போலாவார். யார் நான்காம் நேரத்தில் செல்கின்றாரோ அவர் ஒரு கோழியை தர்மம் செய்தவரை போலாவார். யார் ஐந்தாம் நேரத்தில் செல்கின்றாரோ அவர் ஒரு முட்டையை தர்மம் செய்தவரை போலாவார். இமாம் (உரை நிகழ்த்த) புறப்பட்டு வந்து விடும் போது உரையை செவியுறுவதற்காக மலக்குகள் வந்து விடுகின்றனர்.
அறிவிப்பவர்: அபுஹுரைரா (ரலி) அவர்கள், புகாரி, முஸ்லிம், திர்மிதி, நஸயீ ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் இடம் பெற்றுள்ளது.

பாடம்: 130 ஜும்ஆ தொழுகையும் குளிப்பை விட சலுகையும்

ஹதீஸ் எண்: 352

மக்கள் கடுமையான உழைப்பில் ஈடுபட்டு விட்டு (வியர்வை நாற்றத்துடன்) அப்படியே ஜும்ஆவிற்கு வரும் வழக்கத்திலிருந்தனர். அப்போது அவர்களை நோக்கி நீங்கள் குளித்து விட்டு (ஜும்ஆவிற்கு) வந்தால் நல்லாயிருக்குமே என்று போதிக்கப்பட்டது.
அறிவிப்பவர்: அன்னை ஆயிஷா (ரலி) அவர்கள்
(குறிப்பு: இது போன்ற ஹதீஸ் புகாரி முஸ்லிமில் இடம் பெற்றுள்ளது.)

ஹதீஸ் எண்: 353

ஈராக் நாட்டவர் சிலர் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் வந்து, இப்னு அப்பாஸே ஜும்ஆ நாளன்று குளிப்பு கடமை என்றா கருதுகின்றீர்கள்? என்று கேட்டனர். அப்பாஸ் (ரலி) அவர்கள் பின்வருமாறு அதற்கு பதில் கூறினார்கள். யார் குளிக்கின்றாரோ அவருக்கு அது தூய்மையானதும் சிறந்ததுமாகும். யார் குளிக்கவில்லையோ அவருக்கு அது கடமையில்லை. குளிப்பு எப்படி ஆரம்பமானது என்று உங்களுக்கு நான் அறிவிக்கின்றேன். மக்கள் கடுமையான வறுமையின் பிடியிலிருந்தார்கள். கம்பளியை அணிந்து கொண்டும், தங்கள் முதுகுகளில் சுமைகளை சுமந்து கொண்டுமிருந்தனர். அவர்களது (அன்றைய) பள்ளி நெருக்கடியானதாகவும் (பக்கச்சுவர்கள் போதிய உயரமில்லாமல் கட்டையாகவும் இருந்ததால்) முகடு தாழ்வானதாகவும் இருந்தது. அது (பேரீத்தம் பழ நாரில் வேயப்பட்ட) கூரை தான். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் வெப்பமிகுந்த ஒரு நாள் புறப்பட்டு வந்தார்கள். மக்கள் அந்த கம்பளி ஆடைகளில் வியர்த்து போயிருந்தனர். அவர்களிடமிருந்து துர்வாடை கிளம்பி இதனால் ஒருவர் இன்னொருவரை சங்கடமடையச் செய்தனர். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் அந்த வாடையை நுகர

நேரிட்டதும் 'மக்களே! இந்த (ஜும்ஆ நாள் வந்து விட்டால் குளித்துக் கொள்ளுங்கள், உங்களில் ஒருவர் தன்னிடத்தில் இருக்கும் எண்ணெய் வாசனை திரவியங்களிலிருந்து மிகச் சிறந்ததை பூசிக் கொள்வாராக என்று சொன்னார்கள். இப்னு அப்பாஸ் (ரலி) (மேலும்) அவர்கள் கூறுகின்றார்கள்: எவனது திருப்பெயர் உயர்ந்து விட்டதோ அந்த அல்லாஹ் பொருளாதாரத்தை வழங்கினான். மக்கள் கம்பளி அல்லாத ஆடைகளை அணியலாயினர். (போதுமான பணியாளர்களைப் பெற்று) கடின உழைப்பிலிருந்து காக்கப் பெற்றனர். அவர்களது பள்ளி விரிவுபடுத்தப்பட்டது. வியர்வையினால் அவர்களில் ஒருவர் இன்னொருவருக்கு அளித்துக் கொண்டிருந்த சங்கடமும் தீர்ந்து போயிற்று.
அறிவிப்பவர்: இக்ரிமா

ஹதீஸ் எண்: 354

யார் உலூச் செய்கிறாரோ அது நல்லது தான் யார் குளிக்கின்றாரோ அது மிகச் சிறந்தது ஆகும் என்று அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: சமுரா (ரலி) அவர்கள்.

**பாடம்: 131 இஸலாத்தை தழுவியவர் குளிப்பது.**

ஹதீஸ் எண்: 355

நான் இஸ்லாத்தை தழுவ எண்ணி அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தேன். அப்போது அவர்கள் எனக்கு தண்ணீர், எலந்தை இலையை கொண்டு குளிக்கும்படிக் கட்டளையிட்டனர்.
அறிவிப்பவர்: கைஸ்பின் ஆஸிம் (ரலி) அவர்கள்.
(குறிப்பு: இந்த ஹதீஸ் திர்மிதி, நஸயீயிலும் இடம் பெறுகின்றது.)

ஹதீஸ் எண்: 356

(எனது பாட்டனார்) அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து நான் முஸ்லிமாகி விட்டேன் என்றார். உடனே அவருக்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நிராகரிப்பு என்ற முடியை அகற்றி விடுதலை பெறுக! (முடியை) மழித்துக் கொள்க! என்று கூறினார்கள்.

எனது பாட்டனாருடன் இருந்த இன்னொருவருக்கு 'நிராகரிப்பு எனும் முடியை களைந்து, கத்னா செய்து கொள்வீராக!' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதாக எனது பாட்டனார் அல்லது ஒருவர் எனக்கு அறிவிக்கின்றார்.
அறிவிப்பவர்: உசைம்.

**பாடம்: 132 மாதவிடாய் நேரத்தில் அணிந்திருந்த ஆடையை கழுவ வேண்டுமா?**

ஹதீஸ் எண்: 357

முஆதா (ரலி) அறிவிக்கின்றார்.

மாதவிடாய்காரியின் ஆடையில் பட்ட இரத்தம் பற்றி ஆயிஷா (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், 'அதை கழுவட்டும், அது போக வில்லையானால் மஞ்சள் நிறத்தைக் கொண்டு அவள் அதை மாற்ற வேண்டும். அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்கள் வாழ்ந்த காலத்தில்; தொடர்ந்து மூன்று மாதவிடாய்களைப் பெற்றேன். ஆனால் எனது ஆடையை கழுவியதில்லை' என்று கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 358

'எங்களில் ஒவ்வொருவருக்கும் ஒரே ஒரு ஆடையே இருந்தது, அவர் அதிலேயே மாதவிடாயாக இருப்பார். அதில் இரத்தக்கரை படிந்து விட்டால் அவரது உமிழ்நீரால் ஈரமாக்கி தேய்த்து விடுவார்' என்று ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

ஹதீஸ் எண்: 359

பக்கார் பின் யஹ்யா (ரலி) அவரது பாட்டியிடமிருந்து அறிவிக்கிறார்கள்.

(அவரது பாட்டியாகிய) நான், உம்மு சல்மா (ரலி) யின் (வீட்டிற்குள்) சென்றேன். குரைஷிப் பெண்களில் ஒருவர், மாதவிடாயின் போது அணிந்திருந்த ஆடையுடன் தொழுவது பற்றி அவரிடம் கேட்டார். உம்முசல்மா சொன்னார்: நபி (ஸல்) அவர்களின் வாழ்நாளில் எங்களுக்கு மாதவிடாய் ஏற்படும். அப்போது நாங்கள் தொழ மாட்டோம். தூய்மை அடைந்த போது அவர் அணிந்திருந்த ஆடையை பார்ப்பார். இரத்தக்கரை படிந்திருந்தால் அதை கழுவுவோம், அதோடு தொழுது கொள்வோம். அதில் எதுவும் இல்லையெனில் நாங்கள் அப்படியே விட்டு விடுவோம். அதோடு தொழுவதிலிருந்து எங்களை எதுவும் தடுக்காது. பின்னல் சடையை உடைய பெண்களைப் பொருத்த வரை சிலவேளை எங்களில் ஒவ்வொருவரும் பின்னல் சடை போட்டிருப்போம். அவள் குளிக்கும் போது சடையை அவிழ்க்க மாட்டாள். அவள் மூன்று கைக்கொள்ளளவு தண்ணீரை தலையில் ஊற்றிக் கொள்வார். முடியின் அடியில் ஈரத்தை உணரும் வரை தேய்த்துக் கொள்வார். பிறகு உடல் முழுவதும் தண்ணீரை ஊற்றிக் கொள்வார்.

(குறிப்பு: இந்த ஹதீஸை பலவீனமானது என்று முஹம்மது நாஸிருத்தீன் அல்பாணி அவர்கள் கூறுகிறார்கள்)

ஹதீஸ் எண்: 360

அஸ்மா பின்த் அபூபக்கர் (ரலி) அறிவிக்கின்றார்.

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு பெண் 'நாங்கள் சுத்தமான பிறகு அந்த ஆடையை என்ன செய்ய வேண்டும். அந்த ஆடையுடன் தொழலாமா?' என்று கேட்க நான் செவியுற்றிருக்கிறேன். அதற்கு, '(முதலில் அதை) பார்க்க

வேண்டும், இரத்தக்கரை படிந்திருந்தால் தண்ணீரைக் கொண்டு சுரண்டி விட வேண்டும். மேலும் தண்ணீரைத் தெளித்துக் கொள்ள வேண்டும். அது காணப்படாத வரை தொழலாம்' என்று பதிலுரைத்தார்கள்.

ஹதீஸ் எண்: 361

அஸ்மா பின்த் அபூபக்கர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஒரு பெண் அல்லாஹ்வின் திருத்தூதரிடத்தில் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவரது ஆடையில் மாதவிடாய் இரத்தத்தைக் கண்டால் அவள் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டார். அதற்கு அவர்கள், 'உங்களில் ஒருவரது ஆடையில் மாதவிடாய் இரத்தத்தைக் கண்டால் அவர் அதை சுரண்டி விடட்டும், பிறகு அதன் மீது தண்ணீர் தெளித்து விட்டு, அதோடு தொழுது கொள்ளட்டும்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 362

இந்த ஹதீஸ் மேற்க்கூறிய ஹதீஸ் போன்று வேறொரு அறிவிப்பாளர் தொடருடன் ஹிஷாம் மூலமாக அறிவிக்கப்படுகிறது. இதில் 'அதை கசக்கி விடட்டும், பிறகு சுரண்டி விட்டு, தண்ணீரை ஊற்றி விடட்டும்' என்றுள்ளது.

ஹதீஸ் எண்: 363

உம்மு கைஸ் பின்த் மிஹ்ஸன் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஆடையில் பட்ட மாதவிடாய் இரத்தம் பற்றி நான் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'மரச்சக்கையைக் கொண்டு தேய்ப்பீராக! பின்னர் இலந்தை இலையை உபயோகித்து தண்ணீரால் கழுவுவீராக!' என்று பதிலளித்தார்கள்.

ஹதீஸ் எண்: 364

எங்களில் ஒவ்வொருவரும் ஒரே ஒரு மேலாடையை வைத்திருப்போம். அதையே மாதவிடாயின் போதும் உடலுறவின் போதும் அணிந்திருப்பார். அதில் இரத்தக்கரையைக் கண்டால் உமிழ்நீரைக் கொண்டு தேய்த்துக் கொள்வார்' என்று ஆயிஷா (ரலி) கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 365

அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹவ்லத் பின்த் யஸார் அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! என்னிடம் ஒரே ஒரு ஆடை மட்டும் உள்ளது. அதை அணிந்திருக்கும் போதே மாதவிடாயும் ஏற்படுகின்றது. நான் என்ன செய்ய வேண்டும்?' என்று கேட்டார். 'நீங்கள் சுத்தமான பிறகு அதை கழுவி விட்டு அதிலேயே தொழுது கொள்ளுங்கள்' என்று அவர்கள் பதில் கூற, 'இரத்தக்கரை போக வில்லையானால்?' என்று கேட்டதற்கு, அவர்கள், 'இரத்தக்கரையை கழுவதே போதுமானதாகும், அதன் கரை இருப்பதால் எந்த பிரட்சனையும் இல்லை' என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

**பாடம்: 133 உடலுறவின் போது அணிந்திருந்த ஆடையோடு தொழுவது**

ஹதீஸ் எண்: 366

முஆவியா (ரலி) அவர்கள், அவர்களின் சகோதரியும் நபி (ஸல்) அவர்களின் மனைவியுமான உம்மு ஹபீபா (ரலி) அவர்களிடம் 'நபி (ஸல்) அவர்கள் உடலுறவின் போது அணிந்திருந்த ஆடையோடு தொழுவார்களா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'ஆம்! அதில் எந்த அசுத்தத்தையும் காணவில்லையானால் (தொழுவார்கள்)' என்றார்கள்.

**பாடம்: 134 பெண்களின் ஆடையை அணிந்து தொழலாமா?**

ஹதீஸ் எண்: 367

'எங்களின் சுகுர் எனும் இடுப்பு ஆடையிலோ அல்லது விரிப்பிலோ நபி (ஸல்) அவர்கள் தொழமாட்டார்கள்' என்று ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

இந்த அறிவிப்பாளர் வரிசையில் இடம் பெறும் உபைதுல்லாஹ் சொல்கிறார், 'இதில் எனது தந்தை (முஆத்) சந்தேகித்தார்'

ஹதீஸ் எண்: 368

'எங்களது விரிப்பில் நபி (ஸல்) அவர்கள் தொழமாட்டார்கள்' என்று ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

'நான் முஹம்மது பின் ஸிரின் அவர்களிடம் இதைப்பற்றி கேட்டேன். இதைப்பற்றி என்னிடம் எதையும் அவர் சொல்லவில்லை. ஆனாலும் 'வெகுநாட்களுக்கு முன்பே இதைக் கேள்விப்பட்டிருக்கிறேன். நம்பகமான நபரிடமிருந்து நான் இதை செவியுற்றேனா என்பது எனக்குத் தெரியாது. இது பற்றி விசாரித்துக் கொள்ளுங்கள்' என்று சயீத் பின் அபீஸதகா அவர்கள் சொல்ல நான் கேட்டிருக்கிறேன் என்று ஹம்மாத் (நான்காவது அறிவிப்பாளர்) கூறுகிறார்.

(குறிப்பு: இது பலவீனமான ஹதீஸாகும். ஏனென்றால் முஹம்மது பின் ஸிரின் அவர்கள் ஆயிஷாவிடமிருந்து நேரடியாக செவியுறவில்லை. யாரிடமிருந்து செவியுற்றாரோ அவர் யாரென்று அறியப்படாதவர்.)

**பாடம்: 135 பெண்ணின் ஆடையை அணிந்து தொழ அனுமதி**

ஹதீஸ் எண்: 369

மைமூனா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

நபி (ஸல்) அவர்களின் மனைவியருள் ஒருவர், மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் போது அணிந்திருக்கும் ஆடையின் ஒரு பகுதி நபி (ஸல்) அவர்களின் மீது இருக்கும் போது அவர்கள் தொழுதார்கள்.

ஹதீஸ் எண்: 370

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்

'எனது மாதவிடாயின் போது நான் நபி (ஸல்) அவர்களுக்கு அருகில் படுத்திருக்கும் இரவில், அவர்கள் தொழுவார்கள். அப்போது போர்வையின் ஒரு பகுதி என் மீதும் மறுபகுதி அவர்கள் மீதும் இருக்கும்'.

பாடம்: **136 விந்துபட்ட ஆடை பற்றிய சட்டம்**

ஹதீஸ் எண்: 371

ஹம்மாம் பின் அல்ஹாரித் (ரலி) அவர்கள் சொல்கிறார்கள்.

அவர் ஆயிஷா (ரலி) அவர்களின் (இல்லத்தில்) தங்கியிருந்த போது கனவு கண்டு ஜுனுபாகி விட்டார். அவர் தனது ஆடையின் கரையை அல்லது ஆடையை தானே கழுவுவதை ஆயிஷா (ரலி) அவர்களின் அடிமைப் பெண் பார்த்தார். அந்தப் பெண் அதை ஆயிஷா (ரலி) அவர்களிடம் தெரிவித்தார். அப்போது அவர்கள், 'நபி (ஸல்) அவர்களின் ஆடையில் பட்ட விந்தை தேய்த்து விட்டதற்கு நான் சாட்சியாக இருக்கிறேன்' என்று சொன்னார்கள்.

இமாம் அபூதாவூது அவர்கள் சொன்னார்கள்: அல்அஃமஸ் அவர்களின் அறிவித்தது அல்ஹகம் அவர்கள் அறிவித்தது போன்றதாகும்.

ஹதீஸ் எண்: 372

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்.

நபி (ஸல்) அவர்களின் ஆடையில் பட்ட விந்துவை கசக்கி விடுவேன். அவர்கள் அதிலேயே தொழுது கொள்வார்கள்.

இமாம் அபூதாவூது அவர்கள் சொன்னார்கள்: இதே போன்றே முகீராவும் அபூமஃஸரும் வாசிலும் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 373

சுலைமான் பின் யஸார் (ரலி) அறிவிக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்களின் ஆடையில் பட்ட விந்துவை கழுவி விடுவேன் என்று ஆயிஷா (ரலி) அவர்கள் சொல்லக் கேட்டேன். அதன் பிறகும் அதில் அடையாளத்தைப் பார்ப்பேன் என்றும் கூறினார்கள்.

பாடம்: **137 குழந்தையின் சிறுநீர் பட்ட ஆடையை எவ்வாறு கழுவுவது?**

ஹதீஸ் எண்: 374

மிஹ்ஸனின் மகள் உம்மு கைஸ் அவர்கள் சொன்னார்கள். உணவு சாப்பிடும் வயதை அடையாத அவரது ஆண் குழந்தையுடன் நபி (ஸல்) அவர்களைப் பார்க்க வந்தார். நபி (ஸல்) அவர்கள் அச்சிறுவனை தனது மடியில் உட்கார வைத்தார்கள். அவர்களது ஆடையில் சிறுநீர் கழித்து விட்டார். தண்ணீர் கொண்டு வரச் செய்து அதன் மீது தெளித்தார்கள். அதைக் கழுவவில்லை.

ஹதீஸ் எண்: 375

அல்ஹாரித் அவர்களின் மகள் லுபாபா அவர்கள் சொன்னார்கள். ஹுஸைன் இப்னு அலி (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் (ஸல்) அவர்களின் மடியில் அமர்ந்திருந்தார்கள். அவர் அவர்கள் மீது சிறுநீர் கழித்து விட்டார். 'வேறொரு ஆடையை அணிந்து கொண்டு இந்த ஆடையை கழுவுவதற்காக தாருங்கள்' என்றேன். அதற்கு அவர்கள், 'பெண் குழந்தையின் சிறுநீரை முழுவதுமாக கழுவ வேண்டும், ஆண் குழந்தையின் சிறுநீர் மீது தண்ணீரை தெளித்துக் கொள்ள வேண்டும்' என்றார்கள்.

ஹதீஸ் எண்: 376

அபூ அல்ஸம்ஹ் சொன்னார்கள். நபி (ஸல்) அவர்களுக்கு நான் பணிவிடைகள் செய்து வந்தேன். அவர்கள் குளிக்க விரும்பும் போது, 'உனது முதுகை என் பக்கம் திருப்பிக் கொள்' என்று சொல்வார்கள். நான் அவர்களை நோக்கி என் முதுகை திருப்பிக் கொண்டு அவர்களை மறைத்துக் கொள்வேன். (ஒரு முறை) ஹஸன் அல்லது ஹுஸைன் (ரலி) அவர்களிடம் கொண்டு வரப் பட்டார்கள், அவர்களது மார்பில் சிறுநீர் கழிந்து விட்டார். நான் அதை கழுவுவதற்காக வந்தேன். அதற்கு அவர்கள், 'பெண் குழந்தையின் சிறுநீர் கழுவப்பட வேண்டும், ஆண் குழுந்தையின் சிறுநீர் மீது தண்ணீர் தெளிக்க வேண்டும்' என்று கூறினார்கள்.

யஹ்யா இப்னு அல்வலீது என்பவர் இந்த ஹதீஸை நமக்கு அறிவித்தார் என்று அப்பாஸ் (ஒரு அறிவிப்பாளர்) கூறினார். யஹ்யா என்பவர் தான் அபூ அல்ஸஹ்ரா ஆவார். 'எல்லா சிறுநீரும் ஒன்றுதான்' என்று ஹஸன் அறிவித்ததாக ஹாருன் இப்னு தமீம் சொன்னார் என்று அபூதாவூது அவர்கள் கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 377

அலி (ரலி) அவர்கள் சொன்னார்கள். பெண் குழந்தையின் சிறுநீரை கழுவ வேண்டும், ஆண் குழந்தையின் சிறுநீர் மீது தண்ணீர் தெளிக்க வேண்டும், இது அக்குழந்தை திடஉணவை சாப்பிடும் வரையிலாகும்.

ஹதீஸ் எண்: 378

அலி இப்னு அபூதாலிப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண் 377 ல் உள்ளது போலவே இங்கே நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்படுகிறது. ஆனால் 'திடஉணவை சாப்பிடும் வரை' என்ற வாசகத்தை இங்கே அவர் கூறவில்லை. 'திட உணவை சாப்பிடாதவரை இது கூடும் என்றும் திட உணவை சாப்பிட ஆரம்பித்து விட்டால் அவர்களது சிறுநீரை கழுவ வேண்டும் என்றும் கதாதா கூறினார் என்பது கூடுதலாக இந்த அறிவிப்பில் இடம் பெற்றுள்ளது.

ஹதீஸ் எண்: 379

தனது தாயார் சொன்னதாக ஹஸன் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். உம்மு ஸல்மா (ரலி) அவர்கள் திட உணவை சாப்பிடாத வரை ஆண் குழந்தையின் சிறுநீர் மீது தண்ணீரை தெளித்துக் கொள்வதையும், திட

உணவை சாப்பிட ஆரம்பித்து விட்டால் அவர் அதை கழுவுவார். மேலும் பெண் குழந்தையின் சிறுநீரை கழுவுவார்.

**பாடம்: 138 சிறுநீர் பட்ட மண்**

ஹதீஸ் எண்: 380

அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் அமர்ந்திருந்த போது ஒரு காட்டரபி பள்ளிக்குள் நுழைந்தார். இரண்டு ரக்அத்துக்கள் தொழுதார். இப்னு அப்தாவின் அறிவிப்பின் படி அவர், 'இறைவா! எனக்கும் முஹம்மது (ஸல்) அவர்களுக்கும் அருள் புரிவாயாக! எங்களோடு சேர்த்து வேறு எவருக்கும் அருள் புரியாதே!' என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், 'விசாலமானதை நீர் குறுக்கி விட்டீரே!' என்று கூறினார்கள். சிறிது நேரத்தில் அவர் பள்ளியின் ஒரு முலையில் சிறுநீர் கழித்தார். மக்கள் அவரை நோக்கி விரைந்தனர். நபி (ஸல்) அவர்கள் அவர்களைத் தடுத்தார்கள். பிறகு 'நீங்கள் எளிமைப் படுத்துவதற்காகவே அன்றி கஷ்டம் கொடுப்பதற்காக அனுப்பப்பட வில்லை. அதன் மீது வாளித் தண்ணீரை ஊற்றுங்கள்' என்று கூறினார்கள்.

ஹதீஸ் எண்: 381

அப்துல்லாஹ் பின் ம்ஃகில் பின் முகர்ரின் அவர்கள் சொன்னார்கள்.

ஒரு காட்டரபி நபி (ஸல்) அவர்களோடு தொழுதார். அதன் பிறகு அவர் ஹதீஸ் முழுவதையும் அறிவித்தார். 'அவர் சிறுநீர் கழித்த மண்ணை அகற்றி விட்டு அந்த இடத்தில் தண்ணீரை ஊற்றுங்கள்' என்று அந்த ஹதீஸில் கூடுதலாக இடம் பெற்றுள்ளது.

இமாம் அபூதாவூது அவர்கள் சொன்னார்கள். இது முர்ஸலான அறிவிப்பாகும். (அதாவது, அறிவிப்பாளர் நபி (ஸல்) அவர்களிடமிருந்து நேரடியாக அறிவிக்கிறார், ஆனாலும் அவர் அவர்களை கண்டதில்லை) இப்னு ம்ஃகில் அவர்கள் நபி (ஸல்) அவர்களைக் கண்டதில்லை.

**பாடம்: 139 காய்ந்து விட்டால் மண் தூய்மையானதாகும்**

ஹதீஸ் எண்: 382

இப்னு உமர் (ரலி) அவர்கள் சொன்னார்கள்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் நான் பள்ளிவாசலில் தூங்குவேன், அப்போது நான் இளமையாகவும் திருமணம் ஆகாமலும் இருந்தேன். அப்போது நாய்கள் அடிக்கடி பள்ளிவாசலுக்கு வரும், அங்கே சிறுநீரும் கழிக்கும், ஆனால் யாரும் அதன் மீது தண்ணீர் தெளிக்க மாட்டார்கள்.

பாடம்: **140 விளிம்பில் இரத்தக்கறை படிந்த ஆடை.**

ஹதீஸ் எண்: 383

இப்ராஹீம் பின் அப்துர்ரஹ்மான் பின் அவ்ப் அவர்களின் அடிமைத்தாய் நபி (ஸல்) அவர்களின் மனைவியாகிய உம்மு ஸல்மா (ரலி) அவர்களிடம் கேட்டார்கள்.

(தரையில் இழுபடும் அளவுக்கு) நீண்ட ஆடையை அணியக்கூடிய பெண்ணாக நான் இருக்கிறேன். நான் அசுத்தமான இடங்களில் நடந்து செல்கிறேன். (அப்போது நான் என்ன செய்ய வேண்டும்?)

அதற்கு உம்மு ஸல்மா (ரலி) அவர்கள், 'அதன்பிறகு வரக்கூடியது (சுத்தமான இடம்) அதை சுத்தப்படுத்தி விடும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்' என்றார்கள்.

ஹதீஸ் எண்: 384

பனூ அப்துல் அஸால் கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண் அறிவிக்கிறார்:

பள்ளிக்குச் செல்லும் நமது தெரு அசுத்தமாக உள்ளது, மழை பெய்து விட்டால் நாம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்டேன். அதற்கு அவர்கள், 'தெருவின் அசுத்தமான பகுதியை அடுத்து சுத்தமான பகுதி இருக்கிறதா இல்லையா?' என்று கேட்டார்கள். 'ஏனில்லை' என்று அவர் பதில் சொன்னார். 'ஒன்று மற்றதை சரிசெய்து விடும்' என்று சொன்னார்கள்.

பாடம்: **141 செருப்பில் பட்ட அசுத்தம்**

ஹதீஸ் எண்: 385

செருப்பணிந்து கொண்டு ஒருவர் அசுத்தமான இடத்தை கடக்க நேர்ந்தால் மண் அதை சுத்தப்படுத்திவிடும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஹதீஸ் எண்: 386

முந்தைய ஹதீஸ் போன்றே நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் இந்த ஹதீஸை அறிவிக்கிறார்கள். இதில், 'ஒருவர் செருப்பணிந்து கொண்டு அசுத்தத்தை கடந்து செல்ல நேர்ந்தால் மண் அதை சுத்தப்படுத்தி விடும்' என்றுள்ளது.

ஹதீஸ் எண்: 387

அதே போன்ற ஹதீஸை நபி (ஸல்) அவர்களிடமிருந்து ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

பாடம்: **142 அசுத்தம் பட்ட ஆடையுடன் தொழுதால் மீண்டும் தொழுவது**

ஹதீஸ் எண்: 388

உம்மு ஜஹ்தர் அல்அமீரிய்யா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

உம்மு ஜஹ்தர் அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களிடம், ஆடையில் பட்ட மாதவிடாய் இரத்தம் பற்றி கேட்டார்கள். அதற்கு அவர்கள், 'நான் அல்லாஹ்வின் தூதரோடு இருந்தேன், எங்கள் மீது ஆடை இருந்தது மேலும் நாங்கள் போர்வையை போர்த்தியிருந்தோம். அதிகாலையில் நபி (ஸல்) அவர்கள் போர்வை எடுத்து உடுத்திக் கொண்டு வெளியேறிச் சென்று பஜ்ர் தொழுகையை தொழுதார்கள். அவர்கள் (பள்ளியில் மக்கள் மத்தியில்) அமர்ந்திருந்தார்கள். அப்போது ஒருவர், 'அல்லாஹ்வின் தூதரே! இது இரத்தக்கறை' என்றார். அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அதைச் சுற்றிப் பிடித்து மடித்து ஓர் அடிமையிடம் கொடுத்து என்னிடம் அனுப்பி வைத்தார்கள், மேலும், 'அதைக் கழுவி காயவைத்து என்னிடம் அனுப்பி வை' என்றார்கள். என்னுடைய பாத்திரத்தை அனுப்பி அதைத் துவைத்து, பிறகு நான் அதை காயவைத்து அவர்களிடம் திரும்ப அனுப்பி வைத்தேன். நபி (ஸல்) அவர்கள் அந்த போர்வையை போர்த்திக் கொண்டு மதியம் திரும்பி வந்தார்கள்.

(குறிப்பு: இது பலவீனமான ஹதீஸ் என்று ஷேக் நாஸிருத்தீன் அல்பானி (ரஹ்) கூறுகிறார்கள்.)

**பாடம்: 143 ஆடையின் மீது எச்சில் உமிழ்வது.**

ஹதீஸ் எண்: 389

அபூ நத்ரா அறிவிக்கிறார்கள்.

நபி (ஸல்) அவர்கள் தனது ஆடையின் மீது உமிழ்வார்கள், மேலும் அதன் பகுதியால் கசக்கி விடுவார்கள்.
(குறிப்பு: அபூ நத்ரா என்பவர் தாபிஈ ஆவார். அதனால் இந்த ஹதீஸ் முர்சல் எனும் தொடர்பு அறுந்ததாகும், ஏனென்றால் நபித்தோழர் விடுபட்டுள்ளார்.)

ஹதீஸ் எண்: 390

இதே போன்ற ஹதீஸ் நபி (ஸல்) அவர்களிடமிருந்து அனஸ் (ரலி) வழியாக வேறு அறிவிப்பாளர் வரிசையுடன் அறிவிக்கப்படுகிறது.

# வஸ்ஸலாம்

**நிறைகளை பிறரிடம் கூறுங்கள்!**
**குறைகளை என்னிடம் கூறுங்கள்!**

***For further informations***
***Please contact:***

***E mail: er_sulthan@yahoo.com***

***Visit: www.tamilislam.webs.com***